க. இராமநாதம் ஐயர்.

உ

கணபதிதுணை.

பவணந்திமுனிவரியற்றிய

# நன்னூல்மூலமும் சங்கரநமச்சிவாயருரையும்.

இவை

சிதம்பரம் ஸ்ரீமீனாக்ஷி தமிழ்க்காலேஜ் பிரின்ஸிபாலாகிய

உத்தமதானபுரம்

மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

வே. சாமிநாதையரால்

பரிசோதித்து

நூதனமாக எழுதிய பலவகைக் குறிப்புக்களுடன்

சென்னை:

கமர்ஷியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன.



குரோதனஹு புரட்டாசிமீ.

1925



[விலை ரூபா 2-0-0.

உ

கணபதிதுணை.

# முகவுரை.

திருச்சிற்றம்பலம்.

## தேவாரம்.

நீதியை நிறைவைமறை நான்குடன்
ஓதியை யொருவர்க்கு மறிவொணுச்
சோதியைச்சுடர்ச் செம்பொனி னம்பலத்
தாதியை யடியேன்மறந் துய்வனே.

---

கட்டுரை.

அறமுத னன்கின் றிறவகை விளக்கி
இமிழ்திரை யுதித்த வமிழ்தினு மினிதாந்
தமிழெனு மளப்பருஞ் சலதிசேர் மணிகளாப்
பெரியவர் புகன்ற வரியன வாய
புலக்கணக் கருவியா மிலக்கண நூல்களுட்
கவிநயந் தெரிக்கு மவிநய நூலினும்
ஒல்காப் பெருமைத் தொல்காப் பியத்தினும்
பரந்துள வாகி நிரந்த விதிகளுட்
பழையன கழியப் புதியவாய்ப் புகுந்த
நிதிகளை நிகர்க்கும் விதிகளைப் புலவர்
மிகையெனு வண்ணந் தொகைவகை விரியிற்
சின்னுட் பல்பிணிச் சிற்றறி வினர்தாம்
வருத்த மின்றித் திருத்தமுற் றுணர்ந்தே
பாக்கிய மென்ன வாக்கிய நலத்ததுந்
திடமொழி வில்லா வடமொழி விதிகளுள்
இன்றி யமையா நன்றியல் விதிசில
வாய்ந்தது மழகெலா மேய்ந்தது மிஃதெனப்
பன்னூற் புலவர் பழிச்சுந் திறத்ததாம்
நன்னூற் பெருமையை நவில்வார் யாரே?

நன்னூலுக்குப் பலவுரைகள் உண்டென்று தக்கோர்கள் சொல்வர்: அவற்றுள் இப்போது தெரிந்தவை வருமாறு:—

க. மயிலைநாதருரை. இது சிலவருடங்களுக்குமுன் அச்சிடப்

பெற்றுள்ளது. இதன் முகவுரையால் இவ்வுரையின் இயல்பும் மயிலைநாதரின் ஆற்றலும் விளங்கும்.

உ. **சங்கரநமச்சிவாயருரை.** இதுகாறும் இது தனியே அச்சிடப்படவில்லை. இது புத்துரையெனவும் வழங்கும். இதன் வரலாறு பின்னே எழுதப்பட்டுள்ளது.

ங. **விருத்தியுரை.** இது சங்கரநமச்சிவாயருரையைப் பெரும்பாலும் தழுவிச் சிலசில பகுதிகளைமாற்றி அரிய வடமொழி தென்மொழிவிதிகளை உரியஇடங்களிற் சேர்த்து, திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீசிவஞானயோகிகளால் விரிவாக இயற்றப்பெற்றது. இவ்வுரையைப் புத்தம்புத்துரையெனவும் வழங்குவர். இஃது அச்சிடப் பட்டுள்ளது.

ச. ஊற்றங்கால் ஆண்டிப்புலவரென்பவரால் இயற்றப்பட்ட ஒருரை யுண்டென்று அவரியற்றிய ஆசிரிய நிகண்டின் பாயிரத்தால் தெரியவருகிறது. அது கிடைக்கவில்லை.

ரு. கூழங்கைத் தம்பிரானுரையென்று ஒருரையுண்டென்று கேள்வி. அதுவும் கிடைக்கவில்லை.

சு. **இராமானுசகவிராயருரை.** இஃது இராமநாதபுரம் இராமானுசகவிராயரென்பவரால் மேற்கூறிய விருத்தியுரையைத் தழுவி விளக்கமாக இயற்றப்பெற்றது. சாலிவாகன சகாப்தம் ளஎசுஅ-ஆம் ஆண்டில் அவராலேயே அச்சிடப்பெற்று வழங்குகிறது.

எ. திருத்தணிகை விசாகப்பெருமாளையர் முதலிய பலரால் அப்பொழுதப்பொழுது காலத்திற்கேற்ப ஆக்கப்பட்ட காண்டிகை உரைகள் பல இக்காலத்து வழங்குகின்றன.

மேற்கூறிய உரைகளுள், சங்கரநமச்சிவாயருரை தனியே எனக்குக் கிடைத்ததும் பிறவும் வருமாறு:—

திருவாவடுதுறை யாதீனத்து மஹா வித்துவானாகிய திரிசிரபுரம் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்கள் பூதவுடலை நீத்தபின்பு அவர்களுடைய மாணாக்கர்கள், அவர்களை ஆதரித்து வந்தவர்களும் ஷை ஆதீனத்து கசு - ஆம் பட்டத்து ஞானாசிரியராக விளங்கியவர்களுமான ஸ்ரீமத் சுப்பிரமணிய தேசிகரவர்கள்பால் தத்தம் தகுதிக்கேற்ப நூல்களைப் பாடங்கேட்டு வருவாராயினர். அவர்களுள் மேலகரம் ஸ்ரீ சண்பகக் குற்றாலக் கவிராயரவர்களும் யானும் நன்னூல் விருத்தியுரையைப் படிக்க விரும்பியபொழுது சுப்பிரமணியதேசிகரவர்கள், "விருத்தியுரை முதலிற் சங்கரநமச்சிவாயரால் இயற்றப்பட்டிருந்தது; அப்பால் சிவஞானபோதப்பேருரை

(திராவிட மகாபாஷ்யம்) முதலியவற்றில் தம்மால் அமைக்கப் பெற்றுள்ள அரிய வடமொழி தென்மொழிப் பிரயோகங்களை எளி திற் பிற்காலத்தவர்க்குப் புலப்படுத்தநினைந்து இலக்கணக்கொத்து, தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, இலக்கணவிளக்கச் சூறாவளியென் னும் நூல்களிலும் பிறவற்றிலுமுள்ள முக்கியமான சில சிலவற்றை உரிய இடங்களிற் கூட்டியும் குறைத்தும் மாற்றியும் ஸ்ரீ சிவஞானயோ கிகளால் இவ்வுரை செப்பஞ்செய்யப்பெற்று விருத்தியுரையென வழங் கலாயிற்று; இங்ஙனம் ஒருரைக்குப்பின் கூட்டியும் குறைத்தும் பிற் காலத்தார் விளக்கி எழுதியுள்ள உரைகளை வடமொழியிற் பரக்கக் காணலாம். இலக்கணக்கொத்து முதலிய மூன்றையும் முறையே படி த்தபின்பு பாடங்கேட்டால்தான் விருத்தியுரை நன்கு புலப்படும். இங்கு இவ்வுரையைப் பாடங்கேட்கும் முறை இதுவே" என்று அறி வுறுத்தி ஏட்டுப்பிரதியொன்றை வருவித்து, "இது சங்கரநமச்சிவாய ருரைமட்டுமுள்ள புத்தகம்; இதனையும் வைத்துக்கொண்டு ஒப்பு நோக்கி விருத்தியுரை அச்சுப்புத்தகத்தில் இன்ன இன்ன பகுதிகள் சிவஞானயோகிகள் சேர்த்தவையென்பது புலப்படும்படி அடையா ளஞ்செய்து படியுங்கள்" என்று சொல்லி அப்புத்தகத்தை அளித் தார்கள். பாடங்கேட்டு வருகையில், நாங்கள் அவ்வண்ணமே ஒப்பு நோக்கி, சிவஞானயோகிகள் சேர்த்தவற்றின்முன் 'சி' என்ற அடை யாளமும், ஏனைய இடங்களில் 'ச' என்ற அடையாளமும் விருத்தி யுரையில் அங்கங்கே செய்து வந்தோம்.

பாடஞ்சொல்லுகையில் அவர்கள் சங்கரநமச்சிவாயருடைய உரைநயங்களையும் சிவஞானயோகிகள் அங்கங்கே சேர்த்திருக்கும் பகுதிகளின் இன்றியமையாமையையும் அப்போதப்போது எங்களு க்குமட்டுமேயன்றி அங்கேவரும் வடமொழி தென்மொழிப்பண்டிதர் களுக்கும் எடுத்துக்கூறி விளங்கச்செய்து இன்புறுத்துவார்கள். இன் னோரன்ன நிகழ்ச்சிகள் அவர்கள் காலத்தில் ஓய்வின்றி நடைபெற்ற துண்டு. அவற்றுள் இவ்வுரையைப்பற்றிய ஒன்றைமட்டும் இங்கே எடுத்துக்காட்டுவேன்:—

*பிள்ளையவர்கள் இயற்றிய திருவிடைமருதூருலாவைப்பற்றிப் பொருமையால் பலவகையான புரளிகளை அங்கங்கேயுண்டாக்கி அவர் களுக்கும்அவர்களுடைய மாணுக்கர்கள் முதலியவர்களுக்கும் மிகுந்த

* 'பிள்ளையவர்கள்' என்றது மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்களை. இது விருத்தியுரையை நாங்கள் பாடங்கேட்டதற்கு ரு - வருடங்களுக்கு முன்பு நடைபெற்ற செய்தி.

மனவருத்தத்தை உண்டுபண்ணி அதனாற் பலராலும் மிக்க அவமதிப்பையடைந்த இருவர் எப்படியாவது தம்குறைவைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றெண்ணி அதற்கு உபாயம் பிள்ளையவர்களுடைய அன்பைப் பெறுவதுதானென்றும் அதனைப் பெறுதற்கு உபாயம் பாடங் கேட்பதாக அவர்கள்பாற் செல்வதுதானென்றும் தம்முள் நிச்சயித்துக்கொண்டு ஒருநாட் காலையிற் கையுறையேந்தி மிகுந்தவணக்கத்தோடு வர, சாந்தசிரோமணியாகிய பிள்ளையவர்கள் வந்தவர்களுடைய இயல்பைநன்றாக அறிந்திருந்தும் சிறிதும் வருத்தத்தைப் புலப்படுத்தாமல் அங்கீகரித்து மற்ற மாணாக்கர்களோடு சேர்த்து அவர்களுக்குப் பாடஞ்சொல்லி வந்தார்கள்; வருகையில் அவ்விருவர் செய்துள்ள தீங்குகளை யெல்லாம் நினைந்து நினைந்து மனம்பொறாதவர்களாகிய மாணவர்களிற் சிலர் இடையிடையே வலிந்து கேள்விகளைக் கேட்டு அவ்விருவரையும் விழிக்கச் செய்து அடிக்கடி வருத்துவாராயினர்; என்ன சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை; அதனைக்கண்ட பிள்ளையவர்கள் ஒருநாள் திடீரென்று தனியே **சுப்பிரமணியதேசிகரவர்களிடம்** சென்று அதனை விண்ணப்பிக்க அவர்கள் உடனே பழைய மாணாக்கர்களைமட்டும் அழைப்பித்து நன்றாக விசாரித்துப் பலநியாயங்களை எடுத்து மொழிந்ததன்றி, "ஒருவன் தனக்குப் பரம விரோதியாக இருந்தாலும் தன்பால் வருவானாயின் அவனை ஏற்றுக்கொண்டு முன்னையிலும் நன்கு மதித்துப் பாராட்டவேண்டுமென்பது பெரியோருடைய கொள்கை; இதனை அறியாமல் நீங்கள் வழுவியொழுகுவீர்களாயின் உங்களைமட்டுமன்றி உங்கள் ஆசிரியரையும் உலகம் அவமதிக்கும்; 'இணரெரி தோய்வன்ன வின்னா செயினும், புணரின் வெகுளாமை நன்று' என்னும் திருக்குறளை அறியீர்களோ? அதற்குச் சங்கரநமச்சிவாயரெழுதிய அருமையான உரையை நோக்குங்கள்" என்று கூறி உடனே விருத்தியுரையில் அந்தப் பகுதியை (சூ. ௩௬௦-உரை)ப் படிப்பிக்கச்செய்து இடையிடையே வேண்டியவற்றையுஞ்சொல்லி விளங்கச்செய்தார்கள்; மாணாக்கர்கள் அவர்களுடைய முகமதியினின்றும் தோன்றிய வசனாமுதத்தை அருந்தி மிகுந்த சாந்தமுற்றுச் சென்று அவ்விருவரோடும் நட்புற்று மனங்கலந்து ஒழுகுவாராயினர். இதனைப்பார்த்துக்கொண்டேயிருந்த பிள்ளையவர்கள், ஸ்ரீ சுப்பிரமணியதேசிகரவர்களுக்கிருந்த ஒப்புயர்வற்ற கல்விப்பெருமையையும் ஆராய்ச்சி வன்மையையும் ஞாபகசக்தியையும் பிறரை நல்வழிப்படுத்தற்குரிய சொல்லாற்றல் முதலியவற்றையுமெண்ணித் தம்முள் வியந்து மகிழ்ந்து மனமுருகி,

# மு க வு ரை.

"சிந்தா மணியே செழுங்காம தேனுவே
சந்தாபந் தீர்க்குந் தனிச்சுடரே - நந்தா
வரமணியே கோமுத்தி வாழ்வே யருட்சுப்
பிரமணிய தேசிகப்பெம் மானே."

(சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது, ௯௦அ-௯.)

என்று பாராட்டிப் பணிந்து விடை பெற்றுச் சென்றார்கள். நிற்க,

அச்சிடப்பெற்று வழங்கும் **நன்னூல் விருத்தியுரையில்** இன்ன இன்ன பகுதி இன்னார் இன்னாரியற்றியதென்று விளங்காமையாலும் ஒருவரியற்றியவை மற்றொருவராலியற்றப்பட்டனவாகத் தடுமாறுதல்களை அடையவுங்கூடுமாதலாலும் முதலாவதாகிய சங்கரநமச்சிவாயருரை தனியே பதிப்பிக்கப்படுமாயின், அவருடைய ஆற்றல் தனியே நன்கு விளங்குமென்று சுப்பிரமணியதேசிகரவர்கள் சொன்னதுமுண்டு. அதனால் இவ்வுரையைத் தனியே பதிப்பிக்கத்துணிந்தேன்.

பல வருடங்களுக்கு முன்னமேயே இப்பணியை நான் செய்யவேண்டியவனாகவிருந்தும் மேற்குறித்த அவ்வேட்டுப் புத்தகத்தில் முதலேடு இல்லாமையாலும், பின்பு கிடைத்த சுவடிகளிலும் அவ்வாறே அவ்வேடு காணப்படாமையாலும் அவ்வேடுள்ள பிரதியைப் பெற்ற பின்பே இம்முயற்சியை மேற்கொள்ள வேண்டுமென்றெண்ணித் தாமதித்து வந்தபொழுது, சமீபத்திற் காலஞ்சென்ற திருநெல்வேலிச் சோர்ணம்பிள்ளையென்பவராற் கிடைத்த ஆழ்வார் திருநகரி, அரங்கநாத கவிராயருடைய ஏட்டுப்பிரதியொன்றில் அவ்வேடு இருப்பக்கண்டு அதைப் பார்த்துப் பிரதிசெய்துகொண்டும் ஏனைப் பாகங்களை ஒப்பிட்டும் ஒழுங்கு படுத்திக்கொண்டு அச்சிடலானேன்.

பிரதிபேதங்களும் உரையிலுள்ளமேற்கோள்களுள் இடம் விளங்கியவையும் அவ்வப்பக்கத்தில் அடிக்குறிப்பாக இப்பதிப்பிற் காட்டப்பட்டுள்ளன.

அரும்பதமுதலியவற்றின் அகராதி, விளங்காமேற்கோளகராதி, குறிப்புரையென்பவை இப்புத்தகத்தினிறுதியில் முறையே சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள், **அரும்பதமுதலியவற்றின்** அகராதியில் மூலத்திலும் உரையிலும் காணப்படும் அரும்பதங்களும் அருந்தொடர்களும் அரியவிஷயங்களும் பிறவும் தொகுக்கப்பெற்றுள்ளன; விரிவஞ்சி எல்லாச்சொற்களுக்கும் அதிற் பொருளெழுதவில்லை. இந்தப்புத்தகத்தைக் கொண்டு வேறுநூல்களையும் அவற்றைக்கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மை காணுவதற்கு இவ்வகராதி கருவியாயிருக்குமென்பது என்கருத்து; விளங்காமேற்கோள்களுள் பின்னர்விளங்கியவை சில.

குறிப்புரையில், இவ்வுரையாசிரியரால் மறுக்கப்பட்டுள்ள பகுதிகள் இன்ன இன்ன ஆசிரியர்களுடைய கொள்கைகளென்பதை அறிவித்தும் அரியவற்றைப் புலப்படுத்தியும் உதாரணமாகக் காட்டப்பட்டவற்றுள் மேற்கூறிய அகராதியிற் பொருளெழுதப்படாத கடினமானசொற்களுக்குப் பொருளெழுதியும் அரியவற்றிற்குப் பிரயோகங்காட்டியும் ஆங்காங்கு உரையில் எடுத்தாளப்பட்டுள்ள நன்னூற் சூத்திரங்களின் முற்பகுதிகளாக வந்துள்ளவற்றைச் சூத்திரமுதற் குறிப்பகராதியால் தெரிந்துகொள்ளலாமென்று விடுத்துப் பிற்பகுதிகளுக்கு மட்டும் இடத்தைத் தெரிவித்தும் பதிப்பித்துள்ளேன்.

உரையிலும் மேற்கோள்களிலும் சிலபகுதிகள் திருத்தப்படவேண்டிய நிலைமையிலிருந்தும் உரையாசிரியர்காலத்து வழங்கிய வண்ணம் புலப்படவேண்டுமென்பதற்காகவே அவை திருத்தப்படவில்லை.

சில மேற்கோள்களை வசனமென்றாவது செய்யுளென்றாவது நிச்சயிக்கக் கூடவில்லை; அவை நாளடைவில் விளங்கலாமென்றெண்ணுகிறேன்.

இந்நூலின் குறிப்புரை எழுதியகாலத்து உடனிருந்துவேண்டியவற்றை ஆராய்ந்து எழுதி உதவிய சிதம்பரம் ஸ்ரீமீனாக்ஷி தமிழ்க் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் சமூகரங்கபுரம், சிரஞ்சீவி, வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்களுடைய அன்புடைமை மறக்கற்பாலதன்று.

பரம்பரையாகத் தமிழையாதரித்து வருபவர்களும் ஸ்ரீசேது ஸம்ஸ்தானாதிபதிகளும் மதுரைத்தமிழ்ச்சங்கத்துத்தலைவர்களும் சென்னைச் சட்டநிரூபண சபையின் அங்கத்தினர்களுமான கௌரவம் பொருந்திய மகாராஜராஜ ஸ்ரீ. பா. ராஜராஜேஸ்வர சேதுபதி மஹாராஜா அவர்கள் பழைய தமிழ்நூல்களை ஆராய்ந்து பதிப்பிக்கும் விஷயத்தில் எனக்குக் கவலையுண்டாகாதபடி கைம்மாறுகருதாமற் பல வருடங்களாகப் பேரன்புடன் பொருளுதவி செய்துவருதலை இப்போதும் அன்பர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பலநாளாக எனக்கு இருந்து வந்த துன்பங்களை நீக்கற்பொருட்டு எளியேனையும் ஒரு பொருளாக நினைந்து மேற்கூறிய சேதுபதி மஹாராஜா அவர்கள் முதலியோருடைய விருப்பத்தின்படி தாமேஉதவியும் மிகமுயன்று தமிழ்ப்பாஷாபிமானிகளாகிய பெருந்தகையாளர் பலருடைய உதவிகளைப்பெற்றும் மதுரைத்தமிழ்ச் சங்கத்து உ௫-ஆம் வருஷோத்ஸவ காலத்திற் சென்னை எக்ஸிக்யுடிவ் கௌன்ஸில் மெம்

பர் ஸ்ரீமான் ஸர். ஸி. பி. ராமஸ்வாமி ஐயர், K. C. I. E. அவர்களுடைய அக்கிராசனத்தில் எனக்கு ஒரு பொற்கிழியை அளிப்பித்த ஷெ தமிழ்ச்சங்கத்துக் கௌரவ காரியதரிசியும் மதுரை ஹைகோர்ட்டு வக்கீலும் "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" என்னும் ஆன்றோர் திருவாக்கிற்கு இலக்காக விளங்குபவருமாகிய ஸ்ரீமத். டி. ஸி. ஸ்ரீநிவாஸையங்காரவர்களிடத்தும் அவர்கள் விரும்பிய வண்ணம் உதவி ஆதரித்த மற்றப்பேருபகாரிகளிடத்தும் மிக்க நன்றிபாராட்டுங் கடப்பாடுடையேன்.

அநாதையாகிய தருமிக்கும் ஏனையோர்களுக்கும் பொற்கிழியளித்த கருணைக்கடலாகிய ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசருடைய திருவருளே இக்காலத்து இவர்கள் முகமாகத்தோன்றி என்னையும் பாதுகாத்தது என்பது என்னுடைய முழுநம்பிக்கை.

தரிசிக்குங்காலங்களிலெல்லாம் பழையதமிழ் நூல்களை ஆராய்ந்து பதிப்பிப்பதிற் சிறிதும் தளர்ச்சியடையாமல் மேன்மேலும் உழைத்து வரவேண்டுமென்று பெருங்கருணையுடன் கட்டளையிட்டருளியதன்றி மேற்கூறிய தமிழ்ச்சங்க வருஷோத்ஸவகாலத்தில் அடியேனுக்குத் திவ்யப்ரஸாதங்களையும் ஸ்ரீமுகத்தையும் ஸன்மானங்களையும் அனுப்பி அனுக்கிரஹித்த ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகளான கும்பகோணம் ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசார்யஸ்வாமிகளுடைய பரிபூரண கிருபையைச் சிந்தித்து, "தாயுநற் றந்தையுந் தவமுமன்பினுன், மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ" (கம்ப. திருவவதார.) என்பதையே சொல்லித் துதித்துத் திசைநோக்கி அவர்களை வந்திக்கின்றேன்.

"காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதிவிதிசே
ரூருணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே."

(திருச்சிற்றம்பலக்கோவையார், ௪௦௦.)

"பெயற்பான் மழைபெய்யாக் கண்ணு முலகஞ்
செயற்பால செய்யா விடினுங் - கயற்புலால்
புன்னை கடியும் பொருகட்ற் றண்சேர்ப்ப
என்னை யுலகுய்யு மாறு." (நாலடியார், ௬௫.)

"ஆரிய னவனை நோக்கி யாருயி ருதவி யாதுங்
காரிய மில்லான் போனான் கருணையோர் கடமை யீதாற்
பேரிய லாளர் செய்கை யூதியம் பிடித்து மென்னா
மாரியை நோக்கிக் கைம்மா றியற்றுமோ வையமென்றான்."

(கம்ப. நாகபாசப். உஎக.)

மேற்கூறிய பலவகையான உதவி புரிந்தவர்களை மறவாதிருத்தலையும் அவர்களுடைய க்ஷேமங்களைக் குறித்து ஸ்ரீ ஆனந்த நடராஜமூர்த்தியின் திருவருளைச் சிந்தித்தலையுமன்றி எளியேனாற் செய்தற்குரியது யாது?

என்னுடைய முதுமை முதலியவற்றால் இப்பதிப்பிற் பலவகையான தவறுகள் நேர்ந்திருத்தல்கூடும். அவற்றைவிடுத்து உண்மையையுணர்ந்து அறிஞர்கள் அபிமானிப்பார்களென்று நம்புகின்றேன்.

"குற்றங்களைந்து குணம்பெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்" என்றார்அன்றோ.

---

"சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி."

(சேக்கிழார்புராணம், பாயிரம், உ.)

சிதம்பரம்,
28—9—25.

இங்ஙனம்,
வே. சாமிநாதையன்.

முகவுரையில் தெரிவித்தபடி மதுரையில் எனக்கு 8-6-25-ல் பொற்கிழி யளித்தற்கு உதவிய மகோபகாரிகளின் பெயர்கள் முதலியன வருமாறு :—

ஸ்ரீகாஞ்சி காமகோடிபீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசார்ய ஸ்வாமிகளவர்கள்.
திருவாவடுதுறை ஆதீனகர்த்தரவர்கள்.
குன்றக்குடியிலுள்ள திருவண்ணாமலை யாதீனகர்த்தரவர்கள்.
திருப்பனந்தாளிலுள்ள காசிமடத்துத் தலைவரவர்கள்.
இராமநாதபுரம் கௌரவம்பொருந்திய சேதுபதி மஹாராஜா அவர்கள்.

சென்னை,

ஸ்ரீமான் ஸர். கே. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள்.
,, ஸர். ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் K. C. I. E. அவர்கள், எக்ஸிக்யூடிவ் கௌன்ஸில் மெம்பர்.
,, ஸர். எம். ஸி. டி. முத்தைய செட்டியாரவர்கள்.
,, கனம் வி. வி. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், ஹைகோர்ட் ஜட்ஜ்.
,, எஸ். கஸ்தூரிரங்க ஐயங்காரவர்கள், ஹிந்துபத்திராதிபர்.
,, ஏ. ரங்கசாமி ஐயங்காரவர்கள், சுதேசமித்திரன் பத்திராதிபர்.
,, கே. பாலசுப்பிரமணிய ஐயரவர்கள், ஹைகோர்ட் வக்கீல்.
,, டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள்.

கோயம்புத்தூர்,

ஸ்ரீமான் ராவ்பகதூர் டி. ஏ. ராமலிங்க செட்டியாரவர்கள் M. L. C.

மதுரை,

ஸ்ரீமான் டி. ஸி. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், ஹைகோர்ட் வக்கீல்.
,, கே. வி. ராமஸ்வாமி ஐயரவர்கள், ஹைகோர்ட் வக்கீல்.
,, கே. ஆர். வேங்கடராமையரவர்கள், ஹைகோர்ட் வக்கீல்.
,, ஏ. வைத்தியநாதையரவர்கள், வக்கீல்.

சிவகங்கை,

ஸ்ரீமான் முகுந்தராஜ ஐயங்காரவர்கள், வக்கீல்.

திருநெல்வேலி, வெள்ளக்கால்,

ஸ்ரீமான் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள்.

குமாரமங்கலம்,

ஜமீன்தார் ஸ்ரீமான் டாக்டர் சுப்பராயனவர்கள்.

தேவகோட்டை,

ஜமீன்தார், ஸ்ரீமான் அள. அரு. ராம. அருணாசலஞ் செட்டியாரவர்கள்.
ஸ்ரீமான் அரு. அரு. சோம. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள்.
,, ராம. அரு. அரு. ராம. அருணாசலஞ் செட்டியாரவர்கள்.
,, ராம. மெ. சித. வைரவன் செட்டியாரவர்கள்.
,, மெ. அரு. நா. இராமநாதன் செட்டியாரவர்கள்.
,, மெ. அரு. அரு. அருணாசலஞ் செட்டியாரவர்கள்.
,, உ. ராம. உ. மு. லக்ஷ்மணன் செட்டியாரவர்கள்.
,, தி. ராம. தி. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள்.
,, நாகு. அ. ராம. கிருஷ்ணன் செட்டியாரவர்கள்.

காரைக்குடி,
ஸ்ரீமான் ராவ்பகதூர் ஆவி. பள. சிதம்பரஞ் செட்டியாரவர்கள்.
,, மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள்.
கோட்டையூர்,
ஸ்ரீமான் பெ. மு. அ. வெள்ளையப்ப செட்டியாரவர்கள்.
,, அ. க. ராம. மெ. கி. மெய்யப்ப செட்டியாரவர்கள்.
கண்டனூர்,
ஸ்ரீமான் தெ. அரு. சித. அருணாசலஞ் செட்டியாரவர்களும், ஸ்ரீமான் ராமநாதன் செட்டியாரவர்களும்.
,, வயி. அ. ராம. அண்ணாமலை செட்டியாரவர்கள்.
புதுவயல்,
ஸ்ரீமான் அள. கு. சித. குமரப்ப செட்டியாரவர்கள்.
பட்டமங்கலம்,
ஸ்ரீமான் அ. வீர. அ. அடைக்கப்ப செட்டியாரவர்கள்.
ராமசந்திரபுரம்,
ஸ்ரீமான் பி. கு. நா. குமரப்ப செட்டியாரவர்கள்.
நாட்டரசன்கோட்டை,
ஸ்ரீமான் சு. ப. ராம. ராம. ராமசாமிசெட்டியாரவர்கள்.
கீழைச்செவ்வற்பட்டி,
ஸ்ரீமான் அள. அ. அரு. அண்ணாமலை செட்டியாரவர்கள்.
,, எ. நா. காசிவிசுவநாதன் செட்டியாரவர்கள்.
மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையார்.
கோத்தமங்கலம்,
ஸ்ரீமான் சி. ராம. மு. அண்ணாமலை செட்டியாரவர்கள்.
கோனூர்பட்டு,
ஸ்ரீமான் ஷண்முகஞ் செட்டியாரவர்கள்.
கண்டர மாணிக்கம்,
ஸ்ரீமான் பள. சு. பள. கருப்பன் செட்டியாரவர்கள்.
ஆத்திக்காடு தெற்கூர்,
ஸ்ரீமான் கரு. முத்து. தியாகராஜ செட்டியாரவர்கள்.
பலவான்குடி,
ஸ்ரீமான் வெ. சு. முத்துவள்ளியப்ப செட்டியாரவர்கள்.
,, ராம. கு. ராம. ராமசாமி செட்டியாரவர்கள்.
,, ராம. கும. சு. குமரப்ப செட்டியாரவர்கள்.
நடராஜபுரம்,
ஸ்ரீமான் வீரப்ப செட்டியாரவர்கள்.
ஷண்முகநாதபுரம்,
ஸ்ரீமான் செ. ராம. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்கள்.
திருப்புத்தூர்,
ஸ்ரீமான் சுப்பையா பிள்ளையவர்கள்.
சாயல்குடி,
ஜமீன்தார் ஸ்ரீமான் ஷண்முக கருத்துடையார் சேர்வைகாரரவர்கள்.

---

# நூலாசிரியர் வரலாறு.



இந்நூலாசிரியராகிய பவணந்திமுனிவர், "முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுள், நன்னூலார் தமக் கெந்நூலாரு, மிணையோ வென்னுந் துணிவே மன்னுக" (இ. கொ. சூ. 8 - உரை) எனவும், "பலகலைக் குரிசில் பவணந்தியென்னும் புலவர் பெருமான்" (நன். சூ. 137. சங். உரை) எனவும் பாராட்டப் பெற்றவர்.

இவர் சைனமதத்தினர்; இந்நூலிலுள்ள * கடவுள் வணக்கங்களிரண்டும், † மொழிக்கு முதற்காரணம் அணுத்திரளென்ற கோட்பாடும், உயிர்களை ‡ ஓரறிவுயிர் முதல் ஐந்தறிவுயிர் இறுதியாக அமைத்திருக்குமுறையும், பவணந்தி யென்னும் பெயரும் இதனைப் புலப்படுத்தும். பிரயோகவிவேகவுரையில், "செயப்படு பொருளை ஆக்கல் அழித்தல் அடைதல் முதலாகச் சினேந்திரன் மதம்பற்றி நன்னூலார் பலவாகக்கூறுவர்", "நன்னூலார் வாமனன் சினேந்திரன்செய்த சத்த நூல் பற்றிக் கூறுவர்" (கலித்துறை, 12, 49) என்று வந்துள்ள வாக்கியங்களும் இங்கே கருதற்பாலன.

இவர் துறவறத்தினர்; "பவணந்தி யென்னு நாமத் திருந்த வத் தோனே" (சிறப்பு. அடி, 22) என்பதும் பவணந்திமுனிவரென இவர் வழங்கப்படுதலும் இதனைப் புலப்படுத்துகின்றன; சைனருள் துறவிகள் நந்தியென்று வழங்கப்படுதலை அச்சணந்தி, வச்சணந்தி யென்னும் பெயர்வழக்குக்களாலும், "கனக நந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியுங் குமணமா, சுனக நந்தியுந் திவண நந்தியும்" என்னும் தேவாரத்தாலும் அறியலாகும்.

திருவல்லத்திற்கு வடக்கேயுள்ள வள்ளிமலையின் குகையொன்றில் அமைத்திருக்கும் பழைய சைனபிம்பங்களுள் ஒன்றன்கீழே வரையப்பெற்றுள்ள சாஸனத்திற்கண்ட பவணந்தி பட்டாரரென்

---

* நன். சூ. 56, 258. † நன். சூ. 58, 74; "ஆற்றலுடையுயிர்" (நன் மயிலை. பக்கம், ௩௧) என்னும் சூத்திரமும் இதனை வலியுறுத்துகின்றது.

‡ நன். சூ. 445 - 49; "ஒன்றி ரண்டோரு மூன்று நாலைந்தாய், நின்ற வைம்பொறி நெறியின் வாழுயி, ரொன்று நீர்மை நிலமெ ருப்புக்காற், றென்றிக் காயமைந் தெய்தி வாழுமே", "நந்து சிப்பிசங் காதி நாவன, குந்தெறும்புகோ பாதி மூன்றன, அந்து தும்பிவண் டாதி நாலைந், திந்தி யம்பசு நரகர்தேவர்" (மேருமந்தர. வச்சிராயுதனுத்தரம், 10, 11.)

பவர் இந்நூலாசிரியராக இருத்தல் கூடுமென்று சிலர் கருதுகின்றனர்; சிலகாரணங்களால் இஃது அங்கீகரிக்கத்தக்க தாயினும் அந்தச் சாசனத்தின் காலம் விளங்காமையால் இதனை உறுதியாக எண்ணக் கூடவில்லை. மேற்படி சாஸனம் வருமாறு:—

"ஸ்வஸ்திஸ்ரீ பாணராயர் குருகளப்ப பவணந்திபட்டாரர் சிஷ்யரப்ப தேவஸேனபட்டாரர் பிரதிமா" (Epigraphica Indica, Vol. IV. Page, 142.)

இவருடைய ஆசிரியர் சனகை யென்னுமூரிலிருந்த சன்மதி முனிவரென்பார்; இதனை, "பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள், பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி" (சிறப்பு. அடி, 20 - 21) என்பதனாலும்,

"தன்னூர் சனகையிற் சன்மதி மாமுனி தந்தமைந்தன்
நன்னூ லுரைத்த பவணந்தி மாமுனி நற்பதியுஞ்
சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னாபுரத் திருவன்ன மின்னே தொண்டை மண்டலமே"

என்னும் தொண்டைமண்டல சதகச்செய்யுளாலும் அறிக.

மாணக்கரை ஞானபுத்திரரென்றும் ஆசிரியரை ஞானபிதாவென்றும் வழங்குதல் மரபு. சைனர்களால் தெரியவருகின்ற கன்னபரம்பரைச் செய்தியும் இதுவே. இங்கேகூறிய சனகையென்பது முற்காலத்திற் சனநாதபுரமென்று வழங்கிவந்ததாக மயிலைநாதருரையால் தெரிகின்றது; இதைப்பற்றி விசாரித்தபொழுது சனநாதபுரமென்னும் பெயரையுடைய ஊர்கள் தென்னாட்டில் நான்கிற்குக் குறையாமலுள்ளனவென்று திருவனந்தபுர ஸம்ஸ்தானத்துச் சிலா சாஸன பரிசோதனைத் தலைவராக இருந்த ஸ்ரீ து. அ கோபிநாதராவ் எம். ஏ. அவர்கள் அன்புடன் தெரிவித்தார்கள்.

இந்நூலாசிரியருடைய ஊரும் மேற்கூறிய சனகையென்றே மேலே காட்டிய தொண்டைமண்டலசதகச் செய்யுளைக்கொண்டு சிலர் நிச்சயிக்கின்றனர். தொண்டை நாட்டிற் * சனகாபுரமென்று இக்காலத்து வழங்கப்படுகின்ற ஊர் இச்சனகையாக இருக்கலாமென்பது சிலருடைய கொள்கை; இந்நூலைச் செய்வித்த சீயகங்கன்மனைவியாகிய அரியபிள்ளை யென்பவள், திருவல்லத்தில் திருவல்லமுடைய நாயனாருக்கும் அம்பிகைக்கும் சந்தி விளக்கு ஒவ்வொன்று

* இவ்வூர் வேலூர் ஜில்லா, அரக்கோணத்தாலுகாவில், சோளசிங்கபுரம் (Sholinghur) போஸ்டைச்சார்ந்த ஊர்களிலொன்றாக இருக்கவேண்டுமென்று தெரிகின்றது.

வைத்ததைத் தெரிவிக்கும் *சாஸனமும் திருவேகம்பமுடையார்க்கு அவன் திருநுந்தாவிளக்கு வைத்ததைத் தெரிவிக்கும் காஞ்சீபுரத்துச்சாஸனமும் இதற்கு அநுகூலமாக இருக்கின்றன.

கொங்குமண்டலத்திலுள்ள இருபத்துநான்கு நாடுகளுள் ஒன்றாகிய † குறும்புநாட்டில், இக்காலத்திற் ‡ சீனபுரம் என்று வழங்கப்படுவதும் முதல் தீர்த்தங்கரராகிய ஆதிநாதருடைய கோயில் உள்ளதுமான சனகாபுரம் இந்நூலாசிரியருடைய ஊரென்று பின்னுள்ள செய்யுளைக்கொண்டு நிச்சயிப்பாருமுளர்:—

(கொங்குமண்டல சதகம்.)

"கங்கக் குருசி லுவக்கநன் னூலைக் கனிந்துபுகல்
துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்
கொங்கிற் குறும்பு தனிலாதி நாத குருவிளங்கு
மங்குற் பொழிற்சன காபுர முங்கொங்கு மண்டலமே."

இவ்வூர், சீயகங்கனுடைய கங்க நாட்டிற்கு அயலதும் அவனாட்சிக்கு உட்பட்டிருந்ததுமான கொங்குநாட்டில் இருத்தலாலும் சிறப்பைப் பெற்றிருத்தலாலும் இஃது இவருடைய ஊராக இருக்கலாமென்பது சிலர் கொள்கை.

§ சனநாதபுரமென்பது மைஸூர் ஜில்லா, திருமுக்கூடல் நரசிபுரம் தாலூகாவைச்சேர்ந்த கிராமமென்றும் அது கங்கநாட்டிற் காவிரியின் வடகரைக் கண்ணுள்ளதென்றும், அவ்வூர்க்கு மாவிலங்கையென்பது மற்றொரு பெயரென்றும் தெரிய வருகின்றன; இதனை, செந்தமிழ் ரு - ஆம் தொகுதி, ௩௦௦ - ஆம் பக்கம் முதலியவற்றில் மேற்கூறிய ஸ்ரீ. து. அ. கோபிநாதராவ் அவர்கள் எழுதிய ஒரு குறிப்பினால் அறியலாகும். இதனால், பவணந்தியும் அவர் ஆசிரியரும் இருந்த இடம் கங்கநாடென்று தெரிகிறது.

அமராபரணனென்ற சிறப்புப்பெயர் வாய்ந்த சீயகங்கனென்னும் அரசன் தமிழிலக்கியங்களின் ஆராய்ச்சிக்கு இன்றியமையாத

---

* "ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு முப்பத்துநாலாவது அமராபரணசீயகங்கனம்பிராட்டியான அரியபிள்ளை திருவல்லமுடையநாயனார்க்குவைத்த சந்திவிளக்கு ஒன்றும் நாச்சியார்க்குவைத்த சந்திவிளக்கு ஒன்றும் இவ்விளக்கு இரண்டுக்கும்........." (South Indian Inscriptions, Vol. III, Part I, Pages, 122-123.)

† "கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய்" (தே. ஊர்த்தொகை.)

‡ இவ்வூர் ஈரோடு தாலூகாவிலுள்ளது.

§ சனகை யென்பதற்குச் சனநாதபுரமென்றே மயிலைநாதர் பொருளெழுதியிருத்தலால், இதுதான் சனகையென்று கொள்வது நேர்.

தும், பரந்து கிடப்பதுமான தொல்காப்பியத்தைக் கற்று விதி விலக்குக்களை அறிந்துகொள்வது சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மனிதர்க்கு அரிதென்பதை யறிந்து அந்நூலிற் கூறப்படும் எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் யாவரும் வருத்தமின்றி அறிந்துகொள்ளும்படி ஒவ்வொரு பகுதியையுஞ் சுருக்கித் தொகை வகை விரியால் விளக்கி ஓர் இலக்கண நூலைச் செய்தருளுமாறு வேண்டிக் கொண்டமையாலும், இயல்பாகவேயுள்ள இரக்க மிகுதியாலும் இவர் இந்நூலையியற்றி வெளிப் படுத்தினர்; "அரும் பொருளைந்தையும் ..............வகுத்தனன்" (சிறப்பு. அடி 10 - 19) என்பதனாலும்,

"சொல்காப் பியத்தின் குணதோடந் தேர்ந்து சொலுவதற்குத்
தொல்காப் பியங்கற்க நீண்ட ததனைச் சுருக்கியிசை
யொல்காப் பெரும்பவ ணந்தீயென் றோதி யுபகரித்த
வல்கா வலன்சீய கங்கனுந் தான்கொங்கு மண்டலமே"

என்னும் கொங்குமண்டலசதகச் செய்யுளாலும் இது விளங்கும்.

"முன்னோர் நூலின் வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்" (சிறப்பு. 18—9) என்பதனால், இவர் தொல்காப்பியத்தில் மட்டுமன்றி அக்காலத்து வழங்கிய அகத்தியசூத்திரங்களிலும் அவிநயம் முதலிய பழைய இலக்கண நூல்களிலும் சைனேந்திரம் முதலிய வடமொழி வியாகரணங்களிலும் இருவகை வழக்குக்களிலும் முன்பு வழங்கிப் பின்பு வீழ்ந்தொழிந்தவற்றை நீக்கி வழங்குவனவற்றைத் தழுவி மரபுவழுவின்றி இந்நூலையியற்றினரென்று வெளியாகின்றது.

அகத்தியசூத்திரங்களைப் பின்பற்றினமை, இந்நூலிலுள்ள 131, 259, 260, 273, 291, 295, 300, 323, 327, 333, 340, 342, 355, 378, 382, 395 - ஆம் சூத்திரவுரைகளாலும், தொல்காப்பியத்தைப் பின்பற்றினமை தானெடுத்துமொழிதலாக இவரெடுத்துக்கொண்ட "குறியதன் முன்னர்" (90) என்பது முதலிய எழு சூத்திரங்களாலும், 106, 131, 320, 358, 372, 378, 389, 449 - ஆம் சூத்திர உரைகளாலும், பிற அமைதிகளாலும், அவிநயத்தைப்பின் பற்றினமை, 60, 74, 102, 125, 128, 131, 150, 264, 320, 360, 370-ஆம் சூத்திரவுரைகளாலும், அகத்தியத்தையும் அவிநயத்தையும் பின்பற்றினமை நுண்பொருண்மாலையுடையார் 571-ஆம் திருக்குறட் குறிப்பில், * "பரிபாட்டினுள், நிவந்தோங் குயர்கொடிக்கும் இவ்வாறுரைத்தாராதலால், 'ஒருபொருட் பன்மொழி சிறப்பினின்

* செந்தமிழ், எ-ஆம் தொகுதி, பக். ருஉசு.

வழாஅ'' என்னுஞ் சூத்திரம் நன்னூலில் வருதலால், அகத்தியமாதல் அவிநயமாதலாக வேண்டுமென்க'' என்று எழுதியிருத்தலாலும் * ஆல், ஆன் என்பவற்றையும் மூன்றனுருபாகக் கூறியிருத்தலாலும் விளங்கும்.

திருவாரூரிற் றிருக்கூட்டத்திற் றமிழ்க்கிலக்காகிய வைத்தியநாத நாவலர் தாமியற்றிய இக்கணவிளக்கத்தில் இந்நூலிலிருந்து ஏறக்குறைய இருநூற்றைம்பது சூத்திரங்களையெடுத்து அமைத்திருத்தலை உற்றுநோக்கும்பொழுது, பழைய நூல்களிலிருந்து பொருள்களைத் தொகுத்தல் முதலியவற்றிலும் சில்வகை யெழுத்திற்பல்வகைப் பொருளைச் செவ்வனடியிற் செறித்தினிது விளக்கித் திட்பநுட்பம் பொருந்தச் சூத்திரஞ் செய்தலிலும் இவர் வல்லுநரென்பது புலப்படும்.

கி - பி. 1178முதல் 1216-ஆம் வருடம் வரையில் அரசு புரிந்த மூன்றாங்குலோத்துங்கசோழன் காலத்தவனான மேற்கூறிய சீயகங்கன் காலத்தில் இருந்தவராகத் தெரிதலால், இவருடைய காலமும் அதுவேயெனக் கொள்ளவேண்டும்; "பிங்கல முதலா, நல்லோருரிச்சொலி னயந்தனர் கொளலே'' (460) என்பது இந்நூற் சூத்திரமாதலால், பிங்கல நூலாசிரியர்காலத்திற்கு இவர் காலம் பிற்பட்டதென்று தெரிகின்றது; 'பைங்கண், பைந்தார், காரா, சேதா என்றாற்போலும் பண்புத்தொகையாகிய சொற்களைப் பசுமை, கருமை, செம்மையெனப் பண்புப்பெயராக நிறுத்தி, ஈற்றுயிர் மெய்யும் ஈற்றயலுயிருங் கெட்டு வருமொழிக்கேற்ப ஒற்றுத்திரிந்தும் திரியாதும் ஆதிநின்ற அகரம் ஐகாரமாயும் திரிந்தனவென்றும், ஈற்றுயிர்மெய்யும் ஈற்றயலுயிருங்கெட்டு ஆதிநீண்டதென்றும், ஈற்றுயிர்மெய்யும் இடையிலொற்றுங்கெட்டு ஆதிநீண்டதென்றும், பின்னுள்ளோர்சந்திமுடிக்கின்றது பொருந்தாது' (தொல். சூ. 3-ந உரை) என்னும்பகுதியை "ஈறுபோதல்'' (136) என்னும் சூத்திரத்தின் மறுப்பாகக் கொள்ளின், நச்சினார்க்கினியர் காலத்திற்கு இந்நூலாசிரியர்காலம் முற்பட்டதென்று நினைத்தற்கு இடமுண்டு.

---

* நன். சூ. 296, மயிலை. பார்க்க.; ஆல், ஆன் என்பன அகத்தியத்திலன்றி அவிநயத்திலும் மூன்றாம்வேற்றுமையுருபுகளாகக் கூறப்பெற்றுள்ளன; "ஆலு மானு மூன்றனுருப என்றாரவிநயனார்'' என்பது, வீரசோழியம், வேற்றுமைப்படலம், 6 - ஆம் கலித்துறை உரையிலுள்ள மேற்கோள்.

# சீயகங்கன் வரலாறு. *

இந்நூலை ஆக்குவித்தோனாகிய சீயகங்கனென்பவன் கங்கர் குடியிற் பிறந்தவன்; மூன்றாங் குலோத்துங்கனுடைய ஆட்சிக்கு அடங்கி யொழுகிய ஓரரசன்; வீரத்திற் சிறந்தவன்; இவன் குலத்தினர், "நன்னனேற்றை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுந்திறற் **கங்கன்** கட்டி" (அகநா. 44), "பங்களர் **கங்கர்** பல்வேற் கட்டியர்" (**சிலப்.** 25: 157) எனப் பழைய நூல்களிலும், "கங்கரிவ ரையகரு நாடரிவ ரைய" (திருவிளை. மெய்க்காட்டிட்ட. 30) எனப் பிற்காலத்து நூலி லும் கூறப்படுதல் காண்க.

"துன்னருங் கடுந்திறற் கங்கன்" என இவன் முன்னோரொருவ னும், 'அமராபரணன்' என இவனும் விதந்து கூறப்பெற்றிருத்தலை நோக்குகையில் இக்குடியிற் பிறந்தாருடைய வீரச்சிறப்பு நன்குபுல னாகும்.

கங்கமென்பது நாட்டின் பெயராகவும் வழங்கும்.

கங்கராச்சியத்தைத் தாபித்தவர் சைனாசாரியர்களில் ஒருவரான ஸிஹ்மநந்தி யாசாரியரென்றும், கங்க பரம்பரையினரிற் பலர் சைன மதத்தைத் தழுவியொழுகினரென்றுஞ் சொல்லுவதுண்டு.

அமராபரணன், ஸ்ரீமத்குவளாலபுரபரமேசுவரன், கங்க குலோற் பவனென்று சீயகங்கன் தன் மெய்க் கீர்த்திகளிற் பாராட்டப் பெறு வன்; மூன்றாங் குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சியின் 27-ஆம் ஆண்டான கி. பி. 1205-ல் வெட்டப்பெற்ற சாசனமொன்றால் இவனுக்குத் திருவேகம்பமுடையானென்று ஒருபெயருண்டென் றுந் தெரிகின்றது.

குவளாலபுர பரமேசுவரனென்று கூறப்படுதலால் இவனுடைய இராசதானி †குவளாலபுரமென்று தெரிகின்றது. வடமொழி நூல் களில் இது கோலாகலமென்று கூறப்படுகின்றதென்பர்.

இந்நூலாசிரியர் வரலாற்றால் இவனுடைய பிறவரலாறுகள் சில புலப்படும்.

---

* இந்நூற் சிறப்புப்பாயிரத்தையும், ஸ்ரீ து. அ. கோபிநாதராவ் எம். ஏ. அவர்கள் செந்தமிழ், நான்காந்தொகுதியில் எழுதிய 'கங்கர்' என்னும் ஆராய்ச்சிக்குறிப்பு முதலியவற்றையும் கருவியாகக் கொண்டு இவ்வரலாறு எழுதப்பெற்றது.

† இவ்வூர், ஜோலார்பேட்டையிலிருந்து பங்களூருக்குப் போகும் வழியி லுள்ள கோலாரென்பது.

# நூல்.

இந்நூல், நூற்பா அகவல்களால் யாக்கப்பெற்றது; "முன்னோர் நூலின் வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்"(சிறப்பு. அடி 18-9) என்றதனால், இது முதனூலன்று; * எதிர்நூலுமன்று; தொல்காப்பிய முதலியவற்றை நோக்கும்போது வழிநூலாகவும் அகத்தியத்தை நோக்கும்போது † சார்புநூலாகவும் இது கருதப்படும்; இந்நூலுள் ஆங்காங்குச் சூத்திரங்களினிறுதிகளில் அமைத்திருக்கும் 'என்ப' என்னும் பகுதிகளும் இதற்குச் சான்றாகும்.

தொல்காப்பியத்தின் பின்பு இயற்றப்பெற்ற இலக்கண நூல்களுள் இதைப்போலச் சிறந்தது வேறொன்றில்லையென்பது பெரியோர்கருத்து; பவணந்தி முனிவருடைய நூலாராய்ச்சிப் பெருமையையும் நூற்பாவியற்றும் வன்மையையும் நன்கு புலப்படுத்துவது; 49-ஆம் சூத்திரவுரையில் தன்மையாற் பெயர்பெற்றநூலுக்கு இந்நூற்பெயர் உதாரணமாகக்காட்டப் பெற்றிருத்தலே இதன்பெருமையை நன்குவிளக்கும்.

இந்நூல், ஐந்ததிகாரங்களை உடையதாகவே ஆதியிற் செய்யப்பெற்றதென்பதை, "பல்வகைத் தாதுவின்" என்னும் சூத்திரத்தின் விசேடவுரையிலுள்ள "சொல் எழுத்தாற் பெறப்படுதலின், எழுத்துச் சொற் பொருள் அணியென்னும் நான்கினும் நடப்பது யாப்பென்பதாயிற்று; ஆகவே ஐந்ததிகாரங்களும் தம்முள் ஒன்றையொன்று இன்றியமையாவெனக்கொள்க" என்பதும், "பழையன கழிதலும்" என்னுஞ் சூத்திரத்தின் கருத்துரையிலுள்ள, "இந்நூலிற் சொன்னஐந்ததிகாரத்திற்கும் சிங்கநோக்காய் நிற்பதொரு புறநடையுணர்த்துதல் நுதலிற்று" (மயிலை.) என்பதும், இவ்வுரையில், "இயற்றமிழை அரும்பொருளைந்தெனக் கூறினமையின், இந்நூலுட் கூறிய பொருள்யாப்பு அணிகளென்னும் மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளனபோலும்" (சிறப்பு. உரை) என எழுதப் பெற்றிருத்தலும், "தமிழநன் னூற்றுறைக ளஞ்சுக் கிலக்கியம்" (பெரியதிருமொழித் தனியன்) என்றதும், அதனுரையாசிரியரான ஸ்ரீபிள்ளைலோகாசாரியசீயர், "தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சு லக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூலென்று ஒரு சாஸ்திரம் உண்டு" என்று அதற்கு ஒருவகையாகப் பொருள் செய்திருத்தலும் வலியுறுத்துகின்றன.

---

* நன். மயிலை. சூ. 62 - விசேடவுரையையும் அதன் கீழ்க்குறிப்பையும் பார்க்க. † நன். சூ. 90 மயிலை. பார்க்க.

பவணந்திமுனிவர், எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் தொல்காப்பியத்திற்போல எழுத்துச் சொற்பொருளென்னுமூன்றதிகாரத்திலுளடக்கினரென்றும் அவற்றின்முதலிற் படைப்புமுதலிய முத்தொழிற்குமுரிய நான்முகன் முதலிய மூன்று கடவுளராயுள்ளான் அருகதேவனேயென்னும் தமது சமயக்கொள்கைக்கு இயைய * நான்முகன் முதலிய மூவர்க்கும் முறையே பொருந்துமாறு சமற்காரமாக அருகக்கடவுள்வணக்கங் கூறினரென்றும், பின்னது இறந்து போகவே முன்னவை இரண்டுமட்டும் வழங்கலாயின வென்றும் சைனரிற் சிலர் கூறுகின்றனர்.

இவ்விருவகைக் கொள்கைகளிலும் அதிகாரத்தொகையில்வேறுபாடுண்டேயன்றி இந்நூல் ஐந்திலக்கணத்தையு முணர்த்துவ தென்பதில் வேறுபாடில்லை.

வழங்கப்பெற்ற பகுதிகளைக்கண்டு இந்நூல் இரண்டதிகாரங்களையேயுடையதென்று பிற்காலத்து ஆசிரியர் வழங்குவாராயினர்; இக்காரணம் பற்றியே இது சிற்றதிகாரமென்றும் கூறப்படுவதாயிற்று.

இந்நூற் சூத்திரங்களெல்லாம் பவணந்திமுனிவராலே செய்யப்பெற்றவையல்ல; ஏனெடுத்து மொழிதலாக இவராற் பழைய நூல்களிலிருந்து எடுத்தாளப் பெற்றவையுமுண்டு.

இதன் பாயிரப்பகுதிகளுட் சிலசில இறையனாரகப்பொருட்பாயிரத்திலும் தொல்காப்பியப்பாயிரவுரைகள் முதலியஉரைகளிலும்வேறுபட்டும் வேறுபடாமலும் சூத்திரங்களாகவும் உரைநடையாகவும் காணப்படுகின்றன; அப்பகுதிகளுள் மூன்று சூத்திரங்கள் (7,16,17) தொல்காப்பியம்; ஐந்து (10-14) †பாடலனார் செய்தவை; இரண்டு (52-3) பனம்பாரம். "பூமலியசோகின்" என்பது முதலியனவே பவணந்தி முனிவராற் செய்யப்பெற்றன வென்றும் அவற்றுள், ஏழுசூத்திரங்கள் (90, 252, 317, 396, 404, 408, 439) தொல்காப்பியமென்றும், திருக்குறள் நுண்பொருண்மாலையுடையார் கொள்கையின்படி ‡ "ஒருபொருட்பன்மொழி சிறப்பினின் வழாஅ" என்பது இந்நூலாசிரியர் வாக்கன்றென்றும் இப்போது தெரியவருகின்றன. தொல்காப்

* அருகதேவனை அம்மூன்று பெயர்களால் அவர்கள் வழங்குதலை, "முனிமைமுகடாய" (சீவக. 1609) என்பது முதலிய மூன்று செய்யுட்களாலும், அவற்றின் இறுதியில் உள்ள "அயனும் அரியும் அரனும் இவனே யென்பது கருத்து" என்னும் விசேடவுரையாலும், "திருமாலே திசைமுகனே சிவனே" (திருப்பருத்திக்குன்றப்பத்து, 9) என்பதனாலுமறிக.

† இப்பெயர் மாடலனாரென்றும் வழங்கும். ‡ சூ. 398.

பிய உரையாசிரியர்களைப்போலவே மயிலைநாதரும், சிறப்புப்பாயிரத்துக்கும் அதன்உரைக்கும் இடையே பாயிரச் சூத்திரங்களை அமைத்திருத்தல் இக்கருத்தை வலியுறுத்துகின்றது.

இந்நூற் சிறப்புப்பாயிரம் இன்னரால் இயற்றப்பெற்றதென்று தெரியவில்லை.

பிரயோகவிவேகத்தில், 2, 5, 6, 7, 8, 12, 16, 18, 19, 21, 24, 26, 33—7, 39, 42, 49 - ஆம் கலித்துறைகளினுரைகளில் அந்நூலுரையாசிரியரும், இலக்கணக்கொத்தில், 6, 7, 8, 12, 43, 85, 86, 117, 129, 131 - ஆம் சூத்திரங்களினுரைகளில் அந்நூலுரையாசிரியரும், * **தொல்காப்பியப்பாயிரவிருத்தியில்**, "திரிபுடையவாயினும் மரபுநிலை திரியாதன யாவையெனின்" என்பது முதலியவற்றிலும் **இலக்கணவிளக்கச் சூறாவளியில்** எழுத்தியல், 6, 23, 27, 31, பதவியல், 1, உயிரீற்றுப்புணரியல், 2,7,9,19, 35, பெயரியல், 37-ஆம் சூத்திரவுரைகளிலும் திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீசிவஞான **யோகிகளும்** எழுதியிருக்கும் இனிய அரிய வாக்கியங்கள் இந்நூலின் அருமை பெருமைகளையும் ஆசிரியருடைய கல்விவன்மையையும் இவர்பால் அவர்களுக்குள்ள நன்மதிப்பையும் விளங்கத்தெரிவிக்கும்.

தொல்காப்பியத்திற் குற்றியலுகரப்புணரியலிலுள்ள விதிகளை இந்நூலில் 181 - ஆம் சூத்திரமுதலியவற்றிலும் அந்நூலில் வேற்றுமையியல் முதலிய மூன்றுறுப்புக்களிலடங்கியவற்றை இந்நூலில் 291 - ஆம் சூத்திரமுதலியவற்றிலும் அடக்கியிருப்பது முதலியனவும், அந்நூலிற் சுருக்கிக்கிடந்த கால இடைநிலை முதலியவற்றை இதில் விரித்துக்கூறியிருப்பது முதலியனவும், அந்நூலில் இல்லாத வடமொழி விதிகளைப்பெயர்த்து இதிற் பதவியலில் அமைத்திருத்தலும் தொகுத்தல் விரித்தல் மொழிபெயர்ப்பு என்னும் நூல்யாப்புக்கள் இந்நூலில் அமைந்திருத்தலை முறையே காட்டுகின்றன. தொகைவிரியென்னும் நூல்யாப்பு சூத்திரக்கிடக்கை முறையால் இந்நூலுள் ஆங்காங்கு உணரலாகும்.

இந்நூற் பொருளையும் இதன் பெயரையும் அமைத்து நலமுறப்பாராட்டிய தமிழ்நூல்களுமுண்டு; அவற்றுட் சில வருமாறு:—

(பிரபுலிங்க லீலை.)

"குறில்வழி லகரந் தனிநிலை யாயுங் கூடிய தாரமுன் னெழுத்தென்
றறிகுறி வடிவந் திரிதல்போ னந்தி படல்விடை மெய்திரிந் தனிது
நறுமலர் விழியிற் கண்டவ ரெல்லா நந்தியே யென்றுள மகிழ்ந்தார்."

---

* பழையபதிப்பு, பக். ௬; புதியபதிப்பு, பக். எ.

(திருவேங்கையுலா, 393 - 4.)

"புன்றரும்பு போன்றலைந்தார் போற்றுமவி காரிமுனஞ்
சென்று வருசொற் றிரிதல்போல் - மென்றளிராம்
மேனி திரிந்தார்."

(திருத்தணிகையுலா, அரிவை.)

"சிற்றதிகா ரங்களெலாந் தேவர் முதலாக
உற்றவதி காரிகளுக் கோர்ந்தளித்தான் - முற்றுலகாள்
பேரதிகா ரந்தனைத்தான் பேணுந் திருத்தணிகை
யூரதிகா ரன்றேர்வந் துற்றிடலுங் - காரிகையு
நன்னூ லிடையைய நண்ணிப் பணிந்தெழுந்து
முன்னூ லுரையகல மோகித்தாள் - பன்னூலும்
ஓதா துணரு முயர்புலவீர் மெய்யினுயிர்
போதா திருக்கப் புணர்ப்ப துண்டோ - தாதாரும்
ஆய்தங் குறுகி யரைமாத் திரையினுடல்
தேய்தந்த தெவ்விதியோ செப்பிடீர் - வாய்தமிழ்சேர்
தேறு முயிரளவா யேய்ந்தவுட லவ்வளவு
மாறி யழிந்த வகையென்னே - கூறிடீர்
வல்லினத்து ளோரிரண்டு மற்றை மருங்கான
மெல்லினத்துக் கேபகையாய் விட்டதென்னே - புல்லொருசார்
அல்வழியும் வேற்றுமையே யாகி மதிமருட்டுஞ்
சொல்வழிவா ராததென்ன சூழ்ச்சியோ - நல்ல
இயற்கைக் குயின்மொழிதா னென்னே மிகுத்த
செயற்கைக் கொழிபதனைச் செப்பீர் - பயிற்சிபெறு
நேமிநா தத்தா னிலைதெரியாச் சொற்புணர்ச்சி
காமர்நன்னூற் சூத்திரத்தாற் காட்டிடீர் - சேமமுறு
செவ்வேழ மெய்க்குமுனஞ் சேர்ந்துதட வாமென்கை
ஒவ்வா வியல்பென்கை யோதிடீர்."

(கோடீச்சுரக்கோவை, 44.)

"செறிப்புறு வான்புகழ்க் கோடீச்சு ரேசர் சிலம்பிடைநாம்
உறப்பமை நன்னூ லிடைநீடு மைம்பா லுறுதொடர்பைச்
சிறப்புறு கேள்வி பெறுபாங்க னுக்குத் தெளிவுபெறக்
குறிப்பினு மோதும் வெளிப்படைச் சொல்லினுங் கூறுதுமே."

# உரையாசிரியர் வரலாறு.



இந்நூலுரையாசிரியராகிய ஸ்ரீ சங்கரநமச்சிவாயருடைய ஊர் திருநெல்வேலி; அதில் இவர்வாழ்ந்த இடம் தடிவீரையன் கோவில்தெரு. குலம் வேளாளர் குலம்; சமயம் சைவம். இவருடைய வழித்தோன்றலாகிய பௌராணிகர் சண்முகம்பிள்ளையென்பவரையும் அவர் புதல்வராகிய வேலாயுதம்பிள்ளையென்பவரையும் யான் கண்டு பழகியிருப்பதுண்டு; அந்த வேலாயுதம்பிள்ளை தென்காசிமுதலிய இடங்களில் தாலூகா குமாஸ்தாவாக இருந்தனர்.

சங்கரநமச்சிவாயபிள்ளையென்று இவரதுபெயர் அக்காலத்தில் வழங்கப்பட்டுவந்ததென்றும் முத்துக்குமாரபிள்ளையென்று பெயருள்ள ஒருபுதல்வர் இவருக்குஉண்டென்றும் அவர்களால் தெரியவந்தன. புலவரென்பது கல்விச்சிறப்பால் இவருக்கு அமைந்தபெயர்.

நெல்லை ஈசானமடத்திலிருந்த இலக்கணக்கொத்து நூலாசிரியராகிய ஸ்ரீசாமிநாததேசிகரிடம் இவர் தொல்காப்பிய முதலிய இலக்கணங்களையும் சங்க இலக்கியமுதலியவற்றையும் வடநூல்கள் சிலவற்றையும் முறையே கற்றுத்தேர்ந்தவர். மேற்கூறியவற்றோடு திருமுறைகள் முதலியவற்றிலும் சைவசித்தாந்த நூல்களிலும் திவ்யப்பிரபந்த முதலிய வைஷ்ணவ நூல்களிலும் கம்பராமாயண முதலிய காப்பியங்களிலும் இவர்க்கு நல்ல பயிற்சியுண்டென்று இவருடைய உரை தெரிவிக்கின்றது.

சாமிநாததேசிகர் மட்டுமன்றி இலக்கணவிளக்கம் வைத்தியநாத நாவலர் முதலியோரும் அவர்போன்ற வேறுசிலரும் இவர்காலத்தவர்களாதலின் கல்விகேள்விகளிற்சிறந்து ஓரிலக்கணநூலுக்கு உரை இயற்றுதற்குப் போதியஆற்றலையும்பெறுவது இவருக்கு எளிதாயிற்று; "எந்நூற்கு மெழுத்தொடுசொல் பொருளதிசங் கரநமச்சி வாயனென்னும், பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா மணிநெல்லைப் பதியினனே", "அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன் னூல்கள்பல வாய்ந்து முப்பால், பகுத்ததிரு வள்ளுவரே முதன்ஞான நூல்களெலாம் பகல்செய் வான்போல், இகத்திலுண ர் செயவலசங் கரநமச்சி வாயனெனு மிசைப்பேர் பெற்ற, தகைப்புலவ னந்நூலுக் குரைவகுத்த தொருவியப்போ", "முன்னூற்கு மலயமுனி தன்னூற்கும் புவியிடத்து முதியோ ராற்சொல், எந்நூற்கும் தமிழ்க்கடலு ளினியியற்று

நூற்கும்வகை யிதனுற்காட்டி, நன்னூற்கு விரித்துரை செய்தான்" (பக். ச) என்னும் சிறப்புப்பாயிரச் செய்யுட்களால் இவரது பெருமை விளங்கும்.

நன்னூற் சூத்திரங்களில் விருப்பும் மயிலைநாதருரை அந்நூலுக்கு ஏற்றவுரையன்றென்பதுபற்றி அதன்பால் வெறுப்புமுள்ள தம் ஆசிரியர் சாமிநாததேசிகர், "நன்னூலுக்குச் சிறந்ததோருரை நீர் செய்திடுக" என்று பணித்தமையாலும், கல்விகேள்விகளிற் சிறப்புற்று, 'முத்தமிழ்ப் புலமையும் முறையாசிரிமையும் இத்தலத்தெய்திய இறைமகன்' என்று பாராட்டப்படும் ஊற்றுமலை மருதப்பத்தேவருடைய வேண்டுகோளாலும் இந்நூலுக்கு மிக அழகிதாகிய ஓருரையை இவர் இயற்றுவாராயினர். சாமிநாததேசிகருக்கு அக்கருத்துக் களுண்மை, "சேற்றுநிலத்திற்கவிழ்த்த பால் தேன் நெய் முதலியனவும் சேறுற்றாற்போல நன்னூற்சூத்திரமும் அவ்வுரையுடனே கலந்து குற்றப்பட்டதென்க; முன்னூலொழியப் பின்னூல் பலவினுள் நன்னூலார் தமக்கு எந்நூலாரும் இணையோவென்னுந் துணிவே மன்னுக; முன்னோரொழியப் பின்னோர் பலரினுளென்றலு மொன்று" (இ. கொ. ந. அ-உரை), "அவனருளால்" (பக். 2) என்பவற்றாலும், மருதப்பத்தேவர் விரும்பினமை, "நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செயகவென" (பக். ச) என்பது முதலிய மூன்று அருமைச் செய்யுட்களாலும் விளங்கும். மருதப்பரென்பது அந்தஜமீன் தலைவர்களுக்கெல்லாம் உரிய பொதுப்பெயர்; அவருடைய இயற்பெயர் தெரியவில்லை.

மேற்கூறிய மருதப்பத்தேவருடைய பரம்பரையினரும் அருங்கலை விநோதருமாக இருந்த ஸ்ரீ ஹ்ருதயாலயமருதப்பத்தேவரவர்கள் பால் முன்பு ஒருமுறை நான்போயிருந்தபொழுது வடமொழி தென்மொழிகளில் மிக்க தேர்ச்சியுற்றவரும் சில தலைமுறைகளை நன்கு அறிந்தவருமாக அங்கேயிருந்த பெரியசாமித்தேவரென்பவரிடம் **சங்கரநமச்சிவாயருடைய** வரலாற்றைப்பற்றி வினவியதற்கு அவர், "**சங்கரநமச்சிவாயர்** இந்த ஸம்ஸ்தான வித்துவான்களுள் முதன்மை வாய்ந்திருந்தவர்; நன்னூற்கு உரையியற்றும்பொழுது மாதமொன்றற்கு நான்குகோட்டை நெல்லும் தினந்தோறும் ஒருபடி [illegible] அவருக்கு அரண்மனையிலிருந்து கொடுக்கப்பட்டு வந்தன; உரையை அரங்கேற்றியபின்பு தக்கபரிசிலும் நன்மதிப்பும்பெற்று விடைபெற்

* மயிலைநாதருரையை நான் தேடிக் கண்டுபிடிக்கும்படி செய்தது இந்த வாக்கியமே.

றுச்சென்று திருநெல்வேலியையே தமக்கு இருப்பிடமாக ஆக்கிக் கொண்டு இருந்து வந்தனர்" என்பது தாமறிந்த கர்ணபரம்பரைச் செய்தியென்று கூறினர்.

"மலர்தலையுலகிற் பலநூலாய்ந்து...தொழுது" (பக். க-உ) என் பதனால் இவருக்குள்ள அடக்கமும் குருபத்தியும் விளங்குகின்றன.

இவர் மயிலைநாதருரையைப் பின்பற்றியவராக இருப்பினும் அவராற் புலப்படுத்தப்படாத அநேகங்கள் இவருரையிற் காணப்படு கின்றன. பதசாரம் எழுதிச்செல்லுதலினும் பொருளை நுட்பமாக அறிந்து தக்க ஆதாரங்காட்டி விளக்குதலினும் உவமைகாட்டலினும் பிறவற்றிலும் இவ்வுரை அவ்வுரையைக் காட்டிலும் மேற்பட்ட தென்று சொல்லலாம்; காரணம், அவருடைய காலத்திற்குப் பின்பு பற்பல ஆசிரியர்கள் தோன்றி இயற்றித்தந்த நூல்கள் உரைகளின் பேருதவிதானென்று சொல்லவேண்டும். இவருடைய உரையிற் சில பகுதிகள் சேனாவரைய முதலியவற்றைப்போற் சிறந்திருக்கின் றனவென்று சில சமயங்களில் ஆசிரியர்கள் சொல்லக்கேட்டிருக் கின்றேன்.

ஆய்தம் ஒருமொழிக்கண்ணும் தொடர்மொழிக்கண்ணும் முதலெழுத்துக்கள் இருமருங்கும் நின்றெழுப்ப ஒலித்தற்கு இருசிற கெழுப்ப எழுமுடலையும், நகாம் சுட்டுவினாவெழுத்துக்களை முதலிற் பெற்று வருதற்கு முடவன்கோலூன்றி வருதலையும், உயிரொடு புணர்த்திய மெய் தன்னளவு தோன்றாது ஒன்றாய் நிற்றற்கு அப் பொடுபெய்த உப்பையும், மொழியின்கண் எழுத்துநிற்றற்கு மாலை யின்கண் மலர்பொருந்தி நிற்றலையும், தன் இயல்பின் நிற்கும்பகுதி யை இடைநிலை முதலியவற்றோடு முன்னின்று விகாரப்படும் விகுதிக் குத் தன் இயல்பினிற்கும் ஒருவனது உள்ளத்தை ஆணை முதலிய வற்றோடு முன்னின்று விகாரப்படுத்தும் ஒருத்தியையும் இவர் உவ மைகாட்டிச் செல்லுதலும் இவைபோன்ற பிறவும் அறிந்து இன் புறற்பாலன.

"சைவசிகாமணி" என்று பாராட்டப்படுதற்கேற்பத் தேவார முதலியவற்றிலிருந்து எடுத்து அங்கங்கே மேற்கோள்காட்டுவர்:— அவற்றுள் தேவாரமேற்கோள்களை 45, 74, 143, 182-ஆம் பக்கங் களிலும், திருவாசகமேற்கோள்களை 103, 151, 158, 175, 176, 178, 184, 207, 208-ஆம் பக்கங்களிலும், திருச்சிற்றம்பலக்கோவையார் மேற்கோள்களை 144, 215-ஆம் பக்கங்களிலும், சைவ சித்தாந்த நூல்

களின் மேற்கோள்களை 23, 156, 166,167 - ஆம் பக்கமுதலியவற்றிலும் காண்க.

திருவாசகம், திருவாய்மொழி எனவும் ஆதிரையான், ஓணத்தான் எனவும் காட்டப்பட்டுள்ள உதாரணங்களையும் பிறவற்றையும் நோக்குகையில் இவர் வைஷ்ணவத்தில் வெறுப்பில்லாத நிலையையுடையவரென்று தெரிகின்றது.

பகுதி விகுதி முதலிய வடமொழிகளுக்கு உரிய உருவத்தைப் புலப்படுத்திப் பொருளெழுதிச் செல்லுதலையும் அங்கங்கே காட்டும் வடமொழிப் பிரயோகங்களையும் நியாயங்களையும் விதிகளையும் நோக்குகையில் இவருக்குள்ள வடநூற்பயிற்சி புலனாகும்.

வடநூற்கடலையும் தென்றமிழ்க்கடலையும் நிலைகண்டுணர்ந்த ஸ்ரீசிவஞானயோகிகள் இருமொழிக்கண்ணும் தாம் ஆராய்ந்தறிந்த அரியவிதிகளை அமைத்தற்குத் தக்க இடமென்று கொள்வாராயின் சங்கரநமச்சிவாயருடைய உரையின் பெருமையைக் கூறவல்லவன் யானே?

விருத்தம்.

“ஆவியந் தென்றல் வெற்பி னகத்தியன் விரும்புந்தென்பால்
நாவலந் தீவம் போற்றி நாவலந் தீவந்தன்னுள்
மூவர்கட் கரியானிற்ப முத்தமிழ்த் தெய்வச் சங்கப்
பாவலர் வீற்றிருக்கும் பாண்டிநன் னாடு போற்றி.”

(திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், பாயிரம்.)

சுபம்.

---

## இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய
## * நூற்பெயர்கள்முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.



அகநா - அகநானூறு.
அரிச்சந்திர - அரிச்சந்திரபுராணம்.
ஆசார - ஆசாரக்கோவை.
இ. கொ - இலக்கணக்கொத்து.
இ. வி - இலக்கணவிளக்கம்.
இ-ள் - இதன்பொருள்.
இளம் - இளம்பூரணம்.
இறை-இறையனாரகப்பொருள், இறையனாரகப் பொருளுரை.
இனியது - இனியது நாற்பது.
உ-ம் - உதாரணம்.
எ-று - என்றவாறு. [ற்றேவெனின்.
எ-ன் - என்பது சூத்திரம் என்னுதலி
ஏனாதி - ஏனாதிநாயனார் புராணம்.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஐந். எழு - ஐந்திணையெழுபது.
ஐந். ஐம் - ஐந்திணையைம்பது.
கடவுள் - கடவுள்வாழ்த்து.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கலி - கலித்தொகை.
கள, களவழி - களவழி நாற்பது.
காசிக்கலம் - காசிக்கலம்பகம்.
காஞ்சி - காஞ்சிப்புராணம்.
குறுந் - குறுந்தொகை.
சங் - சங்கரநமச்சிவாயர்.
சடகோப் - சடகோபரந்தாதி.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிவஞானசித் - சிவஞானசித்தியார்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சீவக - சீவகசிந்தாமணி.
சுப - சுபக்கம்.
சூ - [illegible]திரம்.
சூடா[illegible] - சூடாமணிநிகண்டு.
சூளா - சூளாமணி.
சே - சேனாவரையம், சேனாவரையர்.
தண்டி - தண்டியலங்காரம்.
திணை. நூற், திணைமா, திணைமாலை - திணைமாலைநூற்றைம்பது.
திரி - திரிகடுகம்.
திருக் - திருக்குறள். [யார்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக்கோவை
திருஞான - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.
திருநா - திருநாவுக்கரசு நாயனார்.
திருநூற் - திருநூற்றந்தாதி.
திருமுருகு - திருமுருகாற்றுப்படை.
திருவரங்கக் - திருவரங்கக்கலம்பகம்.
திருவரங்கத் - திருவரங்கத்தந்தாதி.
திருவா - திருவாசகம்.
திருவாய் - திருவாய்மொழி.
திருவாலவாய் - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.
திருவானை - திருவானைக்காப்புராணம்.
திருவிடை. மும்மணி - திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.
திருவிளை - திருவிளையாடற்புராணம்.
திருவேங்கடத்-திருவேங்கடத்தந்தாதி.
திவ் - திவ்யப்ரபந்தம்.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம். [யர்.
ந - நச்சினார்க்கினியம், நச்சினார்க்கினி
நம்பி-நாற்கவிராச நம்பியகப்பொருள்.
நள - நளவெண்பா.
நற் - நற்றிணை.
நன் - நன்னூல்.
நாய்ச்சி - நாய்ச்சியார்திருமொழி
நாலடி - நாலடியார்.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நைட - நைடதம்.
நேமி - நேமிநாதம்.
ப, பக் - பக்கம்.
பதி - பதிகம்.
பதிற் - பதிற்றுப்பத்து.

* நூலுறுப்புக்களின் முதற்குறிப்புக்கள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன.

பர - பரபக்கம்.
பரி - பரிபாடல், பரிமேலழகருரை.
பரிமேல் - பரிமேலழகருரை.
பன்னிரு - பன்னிருபாட்டியல்.
பி-ம் - பிரதிபேதம்.
பு. வெ - புறப்பொருள் வெண்பா [மாலை.
புறநா - புறநானூறு.
பெரிய, பெரியபு - பெரியபுராணம்.
பெரியதிரு - பெரியதிருமொழி.
பெருங் - பெருங்கதை.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மயிலை - மயிலைநாதருரை.
மலைபடு - மலைபடுகடாம்.
மீனாக்ஷி - மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் வாக்கு.
முத் - முத்தொள்ளாயிரம்.
முருகு - திருமுருகாற்றுப்படை.
மெய்ப்பொருள் - மெய்ப்பொருள்நாயனார் புராணம்.
மேற் - மேற்கோள்.
மேருமந்தர - மேருமந்தரபுராணம்.
யா. கா - யாப்பருங்கலக்காரிகை.
யா. வி - யாப்பருங்கல விருத்தி.
வச்சணந்தி - வச்சணந்திமாலை.
வ. று - வரலாறு.
வில்லி - வில்லிபுத்தூராழ்வார்பாரதம்.
வெண் - வெண்பா.

உ

கணபதி துணை.

# நன்னூல்மூலமும் சங்கர நமச்சிவாயருரையும்.

---

## நூற்சிறப்புப்பாயிரம்.

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பருதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளும்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையு மியாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதும்
தனதெனக் கோலித் தன்மத வாரணம்
திசைதொறு நிறுவிய [1]திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
[illegible] நாமத் திருந்தவத் தோனே.

என்பது பாயிரம்.

மலர்தலை யுலகிற் பலநூ லாய்ந்து
செய்வதுந் தவிர்வதும் பெறுவது முறுவதும்

---

(பிரதிபேதம்) 1 'தெறலுற'.

உய்வது மறியே னொருபொரு ளாக
நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறுந்
தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட
கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்
[1] சுவாமி நாத குரவனை யனுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளாற்
பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை
மன்னிய வூற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையு முறையர சுரிமையும்
இத்தலத் தெய்திய விறைமக னாதலின்
நன்னூற் குரைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலின்
நன்னு வலர்முக நகைநா ணுமே
என்னு லியன்றவை யியற்றுமிந் நூலுள்,

இப்பாயிரம் என்நுதலிற்றோவெனின், சிறப்புப் பாயிரத்திலக்கணமாக மேல் வகுக்கப்படும் ஆக்கியோன்பெயர்முதலியன உணர்த்துதல் நுதலிற்று.

(இதன் பொருள்.) மலர்தலை யுலகின் - பரந்த இடத்தையுடைய உலகத்தின்கண்ணே, மல்கு இருள் அகல - நிறைந்த கண்ணிருள்கெட, இலகு ஒளிபரப்பி - விளங்கும் கதிரைவிரித்து, யாவையும் விளக்கும் - கட்பொறிக்கு விடயமாகிய உருவமனைத்தினையும் காட்டும், பரிதியின் - சூரியனைப்போல, ஒருதானாகி - உலகுக்கெல்லாம் தான் ஒருமுதலேயாகி, முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த - தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகிய அவற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலால் தலைவனாகிய, அற்புதம் மூர்த்தி - ஞானமே திருமேனியாகவுடையான், தன் அலர்தரு தன்மையின் - தனது விரிந்ததன்மையாகிய கருணையினாலே, மனவிருள் இரிய - உயிர்களின் மனத்திருளாகிய அவித்தைகெட, மாண்பொருள் முழுவதும் - மாட்சிமைப்பட்ட அறம்பொருளின்பம் வீடென்னும் நான்குபொருளையும், முனிவற அருளிய - விருப்புடன் அருளிச்செய்த, மூவறு மொழியுளும் - பதினெண்ணிலத்து மொழிகளுள்ளும், குணகடல் குமரி குடகம் வேங்கடமெனும் நான்கு எல்லையின் இருந்தமிழ்க்கடலுள் - இந்நான்கெல்லையினையுடைய நிலத்துமொழியாகிய பெரிய தமிழென்னுங்கடலுள், அரு பொருளனைத்தையும் - அவ்வறமுதற்பொருள் நான்கையுமுணர்தற்குக் கருவியாய் அருமையவாகிய எழுத்துச் சொற்பொருள் யாப்பணியென்னும் ஐந்துபொருளையும், யாவருமுணர - [illegible] ரேயன்றி எளியோருமுணர, தொகை வகை விரியின் தருகென - இம்மூன்றுதிறமும் ஒருங்கமைத்துக் கூறப்படும் யாப்பினுட் பாடித்தருகவென, துன்னார் இகல் அற நூறி - பகைவர் தம் பகைமைகெட அவரைத் துணித்து, இருநிலமுழு

(பி - ம்.) 1 'பரம குரவனைப் பணிந்தவ னருளாற் பொன்மலை'

வதும் தனதெனக் கோலி - பெரியபூமியனைத்தினையும் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, தன்மதவாரணம் திசைதொறும் நிறுவிய திறலுறு தொல்சீர் - தன் மதயானைகளை எட்டுத்திக்கிலும் திசைக்களிறுகள்போல நிறுத்திய வெற்றி மிகுந்த தன்னளவேயன்றித் தன் தாதை மூதாதைமுதலியோரைத் தொட்டு வருங் கீர்த்தியினையும், கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக்கழலையும், வெண்குடை - வெண்கொற்றக் குடையினையும், கார்நிகர் வண்கை - மேகத்தைப்போலக் கைம்மாறு கருதாதுகொடுக்கும் வண்கையினையும், திருந்தியசெங்கோல் - கோடாத செங்கோலினையுமுடைய, சீயகங்கன் - சிங்கம்போன்ற கங்கன், அருங்கலை விநோதன் - அரிய நூல்களை ஆராய்தலே பொழுதுபோக்கும் விளையாட்டாகவுடையான், அமராபரணன் - தன்னகத்து விழுப்புண்பட அமர் செய்தலையே ஆபரணமாகவுடையான், மொழிந்தனனாக - சொன்னனாக, முன்னோர் நூலின் வழியே - தொல்லாசிரியர் நூலின்வழியே, நன்னூற்பெயரின் வகுத்தனன் - நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், பொன்மதிற்சனகை - பொன்மதில்சூழ்ந்த * சனகாபுரத்துளிருக்கும், சன்மதி முனியருள் - சன்மதி முனிவன்பெற்ற, பன்னருஞ்சிறப்பிற் பவணந்தி என்னும் நாமத்து - சொல்லுதற்கரிய ஞானவொழுக்கச்சிறப்பினையும் பவணந்தி யென்னும் பெயரினையுமுடைய, இருந்தவத்தோன் - பெரியதவத்தினையுடையோனென்றவாறு.

இதனுள் பவணந்தியென ஆக்கியோன்பெயரும், முன்னோர் நூலின்வழியேயென வழியும், நான்கெல்லையென எல்லையும், நன்னூலென நூற்பெயரும், தொகைவகைவிரியென யாப்பும், அரும்பொருளைந்தென நுதலியபொருளும், சீயகங்கன் தருகென மொழிந்தனனெனக் கேட்போரும், மாண்பொருண் முழுவதுமெனப் பயனும், சீயகங்கனெனவே அவன்காலத்துப்பாடி அவன் அவைக்களத்து ஏற்றியதெனக் காலமும் களனும், யாவருமுணரவெனக் காரணமும் உணர்த்தியவாறுகாண்க.

தருகவெனக்கேட்போரைக் கேட்போரென்றது இந்நூலை அரங்கேற்றுழிக் கேட்போரைக்கேட்போரென்பாருமுளர்; களனென்றது, கேட்போரவையையாதலின் அது கூறியதுகூறலாமென்க. நூலைக் கூறுவோர்க்கும் கேட்போர்க்கும் பயன் அறம் முதலியநான்குமென்பதுதோன்ற "நாற்பொருட்பயத்தோடு" (௬) என்றும், "அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே" (௰) என்றும் கூறுவதறிந்தும் யாவருமுணர்தலைப் பயனெனவுங்கூறுப. அன்றியும், யாவருமுணர வேண்டுவார்வேட்டனவும் அவ்வறமுதலிய பயனான்குமேயாதலானும் அது பொருந்தாதென்க.

[illegible]னுள் தொகைவிரியாப்பென ஒன்றுபோந்ததன்றித் தொகைவகைவிரியெனப் போந்ததில்லையாலோவெனின், நடுநின்றவகை பின்னின்ற விரியைநோக்கிற்றொகையாகவும், முன்னின்றதொகையைநோக்கின் விரியாகவுமடங்குதலின் இது தொகைவிரியாப்பென்றதன்பாற்படுமென்க. எனவே தொ

* சனநாதபுரமென்பர்; நன். மயிலை. ப. ௧௮.

கைவிரியென இரண்டாய்வரினும் மரத்ினது பராரையினின்றும் கவ்டு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றோடொன்று தொடர்பட்டெழுந்துநிற்றல்போல் தொகையினின்றும் ஒன்றோடொன்று தொடர்படப் பகுக்கப்பட்டுப் பலவாய் வரினும் தொகைவிரியாப்பேயாமென்க.

நுதலியபொருள் அரும்பொருளைத்தென உணர்த்தினமையின், இந்நூலுட் கூறிய பொருள் யாப்பு அணியென்னு மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளன போலும்.

இப்பாயிரம் ஒருநூற்குரித்தாதலிற் சிறப்புப்பாயிரமாமென்க.

## உரைச்சிறப்புப்பாயிரம்.

(விருத்தம்.)

நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செய்கவென நரேந்திர சிங்கன்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப் பொருள்விளங்கச் செய்தான் பாரி
லெந்நூற்கு மெழுத்தொடுசொற் பொருளறிசங் கரநமச்சி வாய னென்னும்
பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா மணிநெல்லைப் பதியி னானே. க

அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன் னூல்கள்பல வாய்ந்து முப்பால்
பகுத்ததிரு வள்ளுவரே முதனூனா னூல்களெலாம் பகல்செய் வான்போ
லிகத்திலுரை செயவலசங் கரநமச்சி வாயனென விசைப்பேர் பெற்ற
தகைப்புலவ னன்னூலுக் குரைவகுத்த தொருவியப்போ தமிழ்வல் லோரே. உ

முன்னூற்கு மலயமுனி தன்னூற்கும் புவியிடத்து முதியோ ராற்சொ
லெந்நூற்குந் தமிழ்க்கடலு ளினியவற்று ணூற்கும்வகை யிதனாற் காட்டி
நன்னூற்கு விரித்துரைசெய் தான்றிகாந் தத்தளவு நடத்துங் கீர்த்தித்
தென்னூற்று மலைமருதப் பன்சொலச்சங் கரநமச்சி வாயன் றானே. ந

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

# பொதுப்பாயிரம்.

## பாயிரத்தின் பெயர்கள்.

க. முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின், பாயிரத்திற்கு வரும் காரணக்குறிகள் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பாயிரத்தினிலக்கணங்களை முன்னுணர்ந்தன்றி நூல்களைச் செய்தலும் அவற்றை ஈதலும் ஏற்றலுமுடியாமைகருதி முன்னுரைத்தலின் முகவுரையென்றும், "பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத், தொகுதி யாகச் சொல்லுத றானே" என்பவாகலின் மேல்வருக்கும் ஐந்துபொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப்பொருள்களையும் தொகுத்துச் சொல்லுதலிற் பதிகமென்றும், நூலினது பெருமைமுதலிய விளங்க அணிந்துரைத்தலின் அணிந்துரையென்றும், முகவுரையென்றதுபோல நூன்முகமென்றும், நூன்முதலியபொருளெல்லாமவற்றை உரைத்தலிற் புறவுரையென்றும், நூற்குவேண்டு முதலியபொருளெல்லாமவற்றை அதற்குத் தந்துரைத்தலின் தந்துரையென்றும், அணிந்துரையென்றாற்போலப் புனைந்துரையென்றும் பாயிரத்திற்குப் பெயராம். எ - று.

பாயிரமென்பது வரலாறு. பாயிரங்கூறப் [1]புகுந்தவர் பிகலேபோல அதன் பெயர்விகற்பங்களைக்கூறியது என்னையெனின், இப்பாயிரம் பதிகமாகிய புறவுரையாய்த் தந்துரைக்கப்படுவேந்தலும் நூற்குஇன்றியமையாத அணியாய் முன்னுரைக்கப்படுவதென்பது இக்காரணக்குறிகளான் விளங்குதற்கென்க. (க)

## பாயிர வகை.

உ. பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.

எ - ன், மேற் பாயிரமென்றதனை வகுத்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற் பாயிரமென்றது, பொதுப்பாயிரமும் சிறப்புப்பாயிரமுமென இருவகையினையுடைத்து. எ - று. (உ)

## பொதுப்பாயிரத்திலக்கணம்.

ந. நூலே நுவல்வோ னுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்
எல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்.

இருவகைப்பாயிரத்துட் பொதுப்பாயிரத்தை விரித்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நூலினது வரலாறும் ஆசிரியனது வரலாறும் அவ்வாசிரியன் நூலை மாணுக்கர்க்குச் சொல்லுதலின்வரலாறும் மாணுக்கனது வரலாறும் அவன்

(பி - ம்.) 1 'புகுந்தோர்'

கேட்டலின்வரலாறுமென்னும் ஐந்தும் எல்லாநூற்குமாமாதலின், இவ்வைந்து வரலாற்றையும் விளங்க உணர்த்துவது பொதுப்பாயிரமாம். எ - று.

திறன்-கூற்று; என்றது வரலாற்றையாதலின் அதனை ஏனையவற்றுள்ளும் பிரித்துரைத்தாம். ஆமென்பதனை எல்லாநூற்குமாமெனக் கூட்டுக.

"ஈவோன் றன்மை யீத லியற்கை
கொள்வோன் றன்மை கோடன் மரபென
வீரிரண் டென்ப பொதுவின் றொகையே"

என்பாருமுளராலோவெனின், பாயிரங்கூறுதல் நூல்கட்கன்றிப் பிறவற்றிற் கன்றே? அங்ஙனமாதலின், நூல்களின்வரலாறொன்றுமே கூறவேண்டும்; அதனோடு ஆசிரியன் வரலாறுமுதலிய நான்கினையும் உடன்கூறுதல் வரலாற்றுமுறைமையின்வாராதார் நூல்களைக் கற்பிக்கவும் கற்கவும்புகின்,

*"பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்"

என்றவாறேயாய் நூல்களருமையும் பெருமையுங் கெட்டுப் பயன்படாவாமென்பது கருதியென்க. (௩)

க. நூலின் வரலாறு.

ச. நூலி னியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நூற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ
டெண்ணான் குத்தியி னோத்துப் படலம்
என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

எ - ன், மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாற்றைச் சொல்லின், இருவகைப்பாயிரத்தையும் முன்னுடைத்தாதல் முதலாக இங்ஙனம் விகற்பித்த பதினொரு விகற்பநடைகளைப் பெற்றுவரும். எ - று. (ச)

நூல்களின் வகை.

ரு. முதல்வழி சா[...]ன நூன்மூன் றாகும்.

எ - ன், நூலினது வரலா[...] தொகுத்துக் கூறினார், அவற்றுள் ஓரிரு பாயிரத்திற்கு வகை போந்துகிடந்தமையான அதனையொழித்து ஏனையவற்றை வகுத்துக் கூறுவாரன்றொடங்கி, "மும்மையினொன்றாய்" (ச) என[...] துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதனூல் வழிநூல் சார்புநூலென்ன மூன்று கூற்றதாம் நூல். எ - று. (ரு)

* திருக்குறள், அ௩௬.

## முதனூல்.

சு. அவற்றுள், வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

எ - ன், நூல் மூன்றனுள் முதனூலாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) வினையினீக்கி விளக்கப்படும் அறிவினையுடைய உயிர்கட்கு வினையினீங்கி விளங்கிய அறிவினையுடைய முதல்வன் ஆதிக்கண்ணே செய்தது யாது? அது முதனூலாம். எ - று. (சு)

## வழி நூல்.

எ. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.

எ - ன், வழிநூலாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தொல்லாசிரியர் நூல்களின் பொருண்முடிபு முழுவது மொத்து வழிநூல் செய்வோன் முதனூலுளதாகவும் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாகவேண்டிய விகற்பங்களையும் உடன்கூறி அவ்விகற்பங்கள் உணர்வுடையோர் பலர்க்கும் ஒப்பமுடிந்தமையின் அழியாது உலகத்து நின்றுநிலவு மரபினையுடையது வழிநூலாம். எ - று.

பின்னோன்வேண்டும் விகற்பங்கூறலாவது, பழையனகழிதலும் புதியனபுகுதலும் வழுவலவென்றவற்றை இறந்ததுவிலக்கல் எதிரதுபோற்றலென்னு முத்திகளான் விலக்கியும் போற்றியுங்கூறுதல் முதலியன.

'முனைவன் கண்டது முதனூலாகும்' (சு) என ஒருமையாற்கூறினார், ஈண்டு முன்னோர் நூலெனப் பன்மையாற் கூறியது, இறைவனூலையும் அவனருள் வழிப்பட்டுத் தத்தமரபின்வரும் குரவர்பலர் நூலையும் தழீஇக்கோடற்கென்க. எனவே முதனூன்மாத்திரையாய் நிற்பது இறைவனூலும் வழிநூல்மாத்திரையாய்நிற்பது இறுதிநூலுமன்றி இடைநிற்கு நூல்களெல்லாம் ஒருவற்குமைந்தனாயினான் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல முதனூலாயும் வழிநூலாயும் நிற்குமென்பது பெற்றாம். (எ)

## சார்புநூல்.

அ. இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

எ - ன், சார்புநூலாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதனூல் வழிநூலென்னும் இருதிறத்துநூல்கட்கும் பொருண்முடிபு ஒருபுடையொத்து ஒழிந்தனவெல்லாம் ஒவ்வாமையுடையது சார்புநூலாம். எ - று.

எனவே, முதனூற்கு வழிநூலும் சார்புநூலும் ஒருவற்கு மைந்தனும் மருமானும் போலுமென்க. ஒருநூல் தனக்கு வழிநூலைநோக்கின் முதனூலாக

வும், முதனூலை நோக்கின் வழிநூலாகவும், அபரநூலை நோக்கிற் சார்புநூலாகவும் நிற்குமாயினும் இம்முத்திறத்தினுள் ஒருதிறத்தின்கண் மற்றொரு திறமின்மையின் மும்மையினென்றாரென்றார். (அ)

## வழிநூல் சார்புநூற் சிறப்புவிதி.

(வெண்பா.)

௯ முன்னோர் மொழி[1]பொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கு—முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளி லென்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்.

எ - ன், வழிநூற்கும் சார்புநூற்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று; முன்னோர் நூலின் பொருண்முடிபு முழுவதுமொப்பவும் ஒருபுடையொப்பவுங் கூறுவதன்றி அந்நூற் சூத்திரங்களையும் ஓரோவழி எடுத்துக் கூறுகவென்றலின்.

(இ - ள்.) முன்னோர்மொழிந்த பொருளேயேயன்றி அவர்மொழியினையும் பொன்போலப் போற்றிக்கொள்ளுமென்பதற்கு இலச்சினையாகவும் முன்னோர் நூலையே கூறாது அந்நூலினின்றும் வழிநூல் சார்புநூல் செய்தோமாயினும் ஆசிரியவசனங்களை ஓரோவழி எடுத்து உடன்கூறுதல் வழிநூற்கும்சார்புநூற்கும் இலக்கணமாதலின் இந்நூலகத்து ஆசிரியவசனமில்லையெனக் குற்றங்கூறுவாராதலின் அக்குற்றமொழிதற்காகவும் பழஞ்சூத்திரத்தின்கோளைக் கூறு. எ - று.

ஆசிரியவசனமெனினும் மேற்கோளெனினும் பழஞ்சூத்திரத்தின்கோளெனினும் ஒக்கும். முன் போற்றுவம், செய்துமென உளப்பாட்டுத் தன்மைப்பன்மையாற்றாகவும், பின்னர்க் கூறினார் முன்னிலையொருமையேவலாகவுங்கூறினமையின், வழிநூலும் சார்புநூலுஞ்செய்வோர் பலர்க்குமிஇ ஒருவர்க்கொருவர் கூறுங்கூற்றாகச் சூத்திரஞ்செய்யப்பட்டதென்க. (௯)

## நூற்பொருட்பயன்.

௧௰ அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே.

எ - ன், நூற்பொருட்பயத்தோடென்றதனை வகுத்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அறமுதலிய நான்கினையும் ஒதினோரடைதல் நூலான்வரும் பயனும். எ - று. (௧௰)

## எழுமதம்.

௧௧. எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
[2]பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்

(பி - ம்.) 1 'பொருளுமன்றி' 2 'பிறநூற்'

பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே.

எ - ன், எழுமதமென்றதனை வகுத்துணர்த்துதலிற்று.

(இ - ள்.) மேல் எழுவகைமதமென்று சொல்லப்பட்டன இங்ஙனம் பிறர்மதத்தை உடன்படல்முதலியனவாக விதந்தனவாம், எ - று.

நூல்தழுவிய மதங்கள் பலவாயினும் தலைமைபற்றி மதமேழென்பது நூல் வழக்காமென்க.

குற்றம்பத்து, அழகுபத்து, உத்திமுப்பத்திரண்டென்பனவுமன்ன.

இவ்வெழுவகைமதங்கட்கும் பதப்பொருளோடு உதாரணம் விளங்க இந்நூலுள் வந்துழிவந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. (கக)

## குற்றம்பத்து.

கஉ. குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத லின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்ற நூற்கே.

எ - ன், பத்துக்குற்றமென்றதனை வகுத்துணர்த்துதலிற்று.

(இ - ள்.) நூற்குப் பத்துக்குற்றங்களாவன, குன்றக்கூறல்முதலியவைகளாம். எ - று.

நூல்கள் இக்குற்றங்கள் சாராதுவருதல் காண்க. (கஉ)

## அழகுபத்து.

கங. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே யுலகமலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே.

எ - ன், பத்தழகென்றதனை வகுத்துணர்த்துதலிற்று.

(இ - ள்.) நூற்கு [illegible] அமைக்கப்படும் பத்தாவன, சுருங்கச் சொல்[illegible] எ - று.

நூல்கள் இப்பத்தழகோடுங் கூடி வருதல் காண்க. (கங)

## உத்தி முப்பத்திரண்டு.

கச. நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்

முடித்துக் காட்டன் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்தல் றொடர்ச்சொற் புணர்த்தல்
இரட்டுற மொழித லேதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தன் மாட்டெறிந் தொழுகல்
இறந்தது விலக்க லெதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தன் முடிந்தது முடித்தல்
உரைத்து மென்ற லுரைத்தா மென்றல்
ஒருதலை துணித லெடுத்துக் காட்டல்
எடுத்த மொழியி னெய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்
பிறர்நூன் முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்
ஒன்றின முடித்த றன்னின முடித்தல்
உய்த்துணர வைப்பென வுத்தியெண் ணான்கே.

எ-ன், முப்பத்திரண்டு உத்தியென்றதனை வகுத்துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) முப்பத்திரண்டுத்தியாவன, நுதலிப்புகுதல் முதலியவாம். எ-று.

இவற்றுள் ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தலென்பது ஓர்உத்தி. உய்த்துணரவைப்பென்றதனை உத்திக்குஅடையாக்கி உய்த்துணரவைப்பெனு முத்தி எண்ணான்கேயென [illegible] பாடமோதி, அதனை இரண்டுத்தியாக்கினுமமையும்.

இவ்வுத்திகட்குப் பதப்பொருளோடு உதாரணம்விளங்க இந்நூலுள் வந்துழிவந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவனசிலவற்றை உத்தியுள்ளுங்கூறியது என்னையெனின், கொள்கைவகையான் மதமென்றும் [illegible]ப்புவகையான் அழகென்றும் இம்மதம் அழகுமுதலியவெல்லாம் புத்தி நுட்ப[illegible] அமையும் வகையான் உத்தியென்றுங் கூறப்படுமென்க. அங்ஙனமாயின், [illegible] அழகெ[illegible]லாவற்றையும் உத்தியின்பாற்படுத்திக்கூறாது சிலவற்றைக்கூறியது [illegible]னையெனின், வரம்பின்றிவரும் உத்தியுள் தலைமைபற்றிக்கூறும் முப்பத்திர[illegible]கின்றனவென்க. (கச)

உத்தி இன்னதென்பது.

கரு. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி.

எ - ன், மேல்தொகுத்தும் வகுத்துங்கூறிய உத்திக்கு இலக்கணமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஓரிலக்கணநூலானுணர்த்தப்படும்பொருளை நூல்வழக்கோடும் உலகவழக்கோடும் பொருந்தவுணர்த்தி அப்பொருளை மற்றோரிலக்கிய நூற்கண்ணும் ஏற்குமிடமறிந்து இவ்விடத்திற்கு இஃதாமெனக்கருதித் தக்கவகையாகச் செலுத்துதல் தந்திரவுத்தியாம். எ - று.

தந்திரமென்பது நூல், உத்தியான் அமைக்கும்பொருளை உத்தியென்றது ஆகுபெயர். (கரு)

## ஓத்திலக்கணம்.

கசா. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

எ - ன், இருவகையுறுப்பினுள் ஓத்துறுப்பாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒருசாதியாயுள்ள மணிகளை முறையே பதித்தாற்போல ஒருசாதியாயுள்ள பொருள்களை ஒருவழிப்படக்கூறுவது ஓத்துறுப்பாமெனச் சொல்லுவர், உயிர்க்கு உறுதிபயக்குமெய்ம்மொழிகளையுடைய புலவர். எ - று.
நேர்தல் - ஒன்றுபடுதல். இவ்வாறுவருதல் இந்நூலுறுப்பினுட்காண்க. ()

## படலவிலக்கணம்.

கஎ. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்.

எ - ன், படலவுறுப்பாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒருவழிப்படாது விராயபொருளொடுபொருந்திப் பலபொருளையுணர்த்தும் பொதுச்சொற்கள் ஓரோவழியன்றித் தொடர்ந்துவரின் அது படலவுறுப்பாம். எ - று.

படலவுறுப்பினையுடைய காப்பியங்களுட் பாட்டுடைத்தலைவனது சரிதையேயன்றி மலை கடல் நாடுமுதலிய பலபொருட்டிறங்களும் விரவிவருதலும் பலபொருளையுணர்த்தும் பொதுச்சொற்கள் ஓரோவழியன்றித் தொடர்ந்துவருதலுங்காண்க. (கஎ)

## சூத்திரவிலக்கணம்.

கஅ. சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

எ - ன், சூத்திரமாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) சிறியகண்ணாடியிற் பெரிய யாகைமுதலியவற்றின் சாயை செவ்வாகச்செறிந்து இனிதாக விளங்கினாற்போலச் செவ்வாகச்செறிந்து இனிதாக விளங்கச்சில்வகை யெழுத்துக்களானியன்ற யாப்பினகட பலவகைப்பட்ட

பொருள்களைச் செவ்வாகச்செறித்து இனிதாக விளக்கி அப்பல்பொருட்டிண்மையும் நுண்மையுஞ்சிறந்துவருவன சூத்திரங்களாம். எ - று.

திட்பம் - குற்றமின்மையின் அசைவறநிற்றல். இவ்வாறுவருதல் இச்சூத்திரத்துள்ளுங்காண்க. (கஅ)

## சூத்திரநிலை.

கசு. ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்ன சூத்திரநிலை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேற்கூறிய சூத்திரங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்குநிலைகள் ஆற்றொழுக்குமுதலிய நான்கினையும்போலும். எ - று.

இவ்வாறு நிற்றல் இந்நூலுள் வருழிவருழிக்காட்டுதும்; ஆங்காங்குணர்க. (கசு)

## சூத்திரவகை.

உ௦. பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) பிண்டமெனவும், தொகையெனவும், வகையெனவும், குறியெனவும், செய்கையெனவும் இவற்றை [illegible]க்கொண்டு இவற்றின்புறத்து அடையாய்வரும் புறனடையெனவுங் கூறுங்கூற்றினையுடையனவாம், மேற்கூறிய சூத்திரங்கள். எ - று.

இவற்றுட் பிண்டமாவன: "பன்னிருபாலதுவே" ([illegible]) என்றற்றொடக்கத்துத் தொகைபோலாது, "[illegible]" ([illegible]) என்றற்றொடக்கத்துப் பொதுப்படவருவன. தொகையும் வகையும்புறனடையும் வருழிவருழிக்காட்டுதும்; ஆங்காங்குணர்க. விரி வகையின்பாற்படுதலிற் கூறாராயினர். குறியாவன: இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றற்றொடக்கத்து அறிதன்மாத்திரையாய்வருவன. குறியென்பது அறிதலையுணர்த்திய முதனிலைத்தொழிற்பெயர். செய்கையாவன: பதமும் பகுதியும் பதமுமுருபும்புணரும் புணர்ச்சிவிதியறிந்து அங்ஙனமறிதன்மாத்திரையாய் நில்லாது அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச்செய்தலும், பெயர்வினைமுதலிய சொல்லும்முடிபு விதியறிந்து அங்ஙனமறிதன்மாத்திரையாய்நில்லாது அவ்வாறு வேண்டுழி, முடித்தலைச்செய்தலுமுடையன. இப்பிண்டமுதலிய ஆறுபெயரும் அப்பொருளையுணர்த்துஞ் சூத்திரங்கட்கு ஆகுபெயராய் வந்தன. எல்லாச் சூத்திரங்களும் பிண்டம் தொகை வகை புறனடையென்னு நான்கனுள் அடங்குமன்றோ? அங்ஙனமாகக் குறியினையும் செய்கையினையும் [illegible] எல்லாநூலுள்ளுஞ் சொல்லப்படுவன அறிதலுஞ்செய்தலுமன்றி வேறின்மையிற் பிண்டமாகியும் தொகுத்தும் வகுத்தும் புறத்தடைகொடுத்தும் கூறப்படுவன குறியுஞ்செய்கையுமே யென்பது தோன்றற்கன்றே. இங்ஙனங்கூறவே எல்லாநூலுள்ளும்வரும் எல்லாச்சூத்திரங்களும் குறிச்சூத்திரம் செய்கைச்சூத்திரமென இரண்டாயடங்குமென்பது பெற்றாம். இவ்வாறன்றிக் குறியென்

ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி.

எ - ன், விருத்தியுரையாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) காண்டிகையுரைபோற் சூத்திரத்துட்பொருள் விளக்குதன் மாத்திரையினில்லாது அவ்விடங்கட்கு இன்றியமையாதபொருள்கள் யாவையும் விளங்கத் தானுரைக்குமுரையானும் ஆசிரியவசனங்களானும் மேற்கூறிய காண்டிகையுறுப்பு ஐந்தனுளும் ஐயந்தீரச் சுருங்காது மெய்ம்மைப்பொருளை விரித்துரைப்பது விருத்தியுரையாம். எ - று.

சூத்திரத்துட்பொருளன்றியுமென்றமையால், மேற்கூறிய பதினன்குறுப்புங்கொண்டது விருத்தியுரையென்பது பெற்றாம். (உ௩)

நூலென்னும் பெயர்க்காரணம்.

(வெண்பா.)

உ௪. பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா - எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு.

எ - ன், நூலென்னும்பெயர் வருமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இந்நூலைமுடியுமாறு இதுவாதலின், நூலென்றது உவமவாகுபெயராம். எ - று. (உ௪)

உ௫. உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா - மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு.

எ - ன், இதுவ[illegible]து.

(இ - ள்.) அந்நூல்போற் செப்பஞ்செய்தலானும் நூலென்றது உவமவாகுபெயராம். எ - று.

புரத்தினது உரத்தின் வளம் பெருக்கி உள்ளிய தீமைவளமுருக்கியெனக் கூட்டுக. புரம் - உடம்பு; உரம் - நெஞ்சு. பின்பு தீமைவளமென்றமையான் முன்பு நல்வளமெனத் தந்துரைக்க; நல்வளம் - அறிவு. தீமைவளம் - அறியாமை. (உ௫)

உ. ஆசிரியரியல்பு.

நல்லாசிரியர்.

உ௬. குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியும்

உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவ னூலுரை யாசிரி யன்னே.

எ - ன், சிறந்தமுறையானே ஆசிரியனது வரலாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்வியல்பினையுடையார் கற்பிக்கும் ஆசிரியராவார். எ-று. ()

௨௭. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே.

எ - ன், மேற்கூறிய உவமையை விரித்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நிலத்தினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமையாயிற்று. எ - று. (௨௭)

௨௮. அளக்க லாகா வளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மலையினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமையாயிற்று. எ - று. (௨௮)

௨௯. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நிறைகோலினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமையாயிற்று. எ - று. (௨௯)

௩௦. மங்கல மாகி யின்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள [1]மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மலரினது மாட்சிமை இதுவாதலின், இஃது உவமையாயிற்று. எ - று.

இவ்வுவமைகளினது மாட்சிமைபோலவே ஆசிரியனினது மாட்சிமையும் விரித்துக்கொள்க. (௩௦)

ஆசிரியரல்லாதவர்.

௩௧. மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலும்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை

(பி - ம்.) [1] 'மல்கி'

முடத்தெங் [1]கொப்பென முரண்கொள் சிந்தையும்
உடையோ ரிலரா சிரியரா குதலே.

எ - ன், ஆசிரியராகார் இவரென உணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) இக்குற்றங்களையுடையோர் கற்பிக்கும் ஆசிரியராகார். எ-று. ()

௩௨. பெய்த முறையன்றிப் பிறழ வுடன்றரும்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.

எ - ன், மேற்கூறிய உவமையை விரித்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) கழற்பெய்த குடத்தின் குற்றம் இதுவாதலின், இஃது உவமையாயிற்று. (௩௨)

௩௩. தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மடற்பனையின் குற்றம் இதுவாதலின், இஃது உவமையாயிற்று. எ - று. (௩௩)

௩௪. அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) பருத்திபெய்த குண்டிகையின் குற்றம் இதுவாதலின், ஈது உவமையாயிற்று. எ - று. (௩௪)

௩௫. பல்வகை யுதவி வழிபடு பண்பின்
தலையோர்க் களிக்கு மடமுடத் தெங்கே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முடத்தெங்கின் குற்றம் இதுவாதலின், இஃது உவமையாயிற்று. எ - று.

இவ்வுவமைகளின் ஒப்புமையைப் பொருள்களொடும் விரித்துரைத்துக் கொள்க. (௩௫)

### ௩. பாடஞ் சொல்லுதலினிலக்கணம்.

௩௬. ஈத லியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து

(பி - ம்.) [1] 'ஒப்பன'

கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமின் மனத்தினூல் கொடுத்த லென்ப.

எ - ன், சிறந்தமுறையானே ஆசிரியன் கற்பிக்குமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) கற்பிக்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர். எ-று. (கரு)

## ச. மாணாக்கர்.

கஎ. தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

எ - ன், சிறந்தமுறையானே மாணாக்கனது வரலாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்வறுவர்க்கும் சொல்லப்படுவது நூல். எ - று. (கஎ)

## மாணாக்கர் வகை.

கஅ. அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேற்கூறிய அறுவருள் அன்னமும் பசுவும்போல்வார் தலைமாணாக்கர்; மண்ணும் கிளியும்போல்வார் இடைமாணாக்கர்; இல்லிக்குடமும் ஆடும் எருமையும் நெய்யரியும்போல்வார் கடைமாணாக்கர். எ - று.

இவ்வுவமைத்திறமும் பொருட்டிறமும் விரித்துரைத்துக் கொள்க. (கஅ)

## கற்பிக்கப்படாதோர்.

ககூ. களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் றறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.

எ - ன், மாணாக்கராகாரிவரென உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இக்கூறப்பட்டோர்க்கு நூலைச்சொல்லார் ஆசிரியர். (ககூ)

## ரு. பாடங்கேட்குமுறை.

சo. கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்

திருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர்.

எ - ன், நிறுத்தமுறையானே மாணாக்கன் நூலைக் கற்குமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) கற்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர். எ-று. (௪௦)

பயிற்சி.

௪௧. நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை [1] யமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறு நூலைப்பயின்றவர்க்கு அறியாமை மிகுதியும் போம். எ - று. (௪௧)

௪௨. ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒருகாற்கேட்ட துணையானேயமையாது இருகாற்கேட்டானாயின் அந்நூலின்கட் பிழைபாடு மிகுதியுமிலன். எ - று. (௪௨)

௪௩. முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முக்காற்கேட்டானாயின் ஆசிரியன்கற்பித்த முறையறிந்துரைப்பன். எ - று. (௪௩)

௪௪. ஆசா னுரைத்த த[illegible]வாக் கொளினும்
காற்கூ றல்லது பற்றல னாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஆசிரியன்கற்பித்தனவற்றைத் தன்அறிவின்கண் அமையக் கற்றானாயினும் புலமைத்திறத்திற் கால்கூறல்லது பற்றான். எ - று. (௪௪)

---

(பி - ம்.) '1 அமைவுறக்'

சரு. அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகாற்
செவ்விதி னுரைப்ப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) தன்போலியரொடு பயிலும்வகையாற் காற்கூறும் அக்கல்வியைத் தன்மாணாக்கர்க்கும் அவைக்களத்தோர்க்கும் உணர விரித்துரைத்தலான் அரைக்கூறுமாதக் குற்றமற்ற புலமை நிரம்பும். எ - று. (சரு)

## வழிபாடு.

சசு. அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமொ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறொழுகுதல் வழிபாடாம். எ - று. (சசு)

## சிறப்புப்பாயிரத்திலக்கணம்.

சஎ. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.

எ-ன், பாயிரம் பொதுச்சிறப்பென மேல் (உ) நிறுத்தமுறையானே "மலர்தலையுலகின்" என்றற்றொடக்கத்தவாய் எல்லாநூற்கண்ணும் வரும் சிறப்புப் பாயிரங்களினது பொதுவிலக்கணமுணர்த்துதனுதலிற்று.

இதனையும் பொதுப்பாயிரத்துட் கூறினர், பொது [illegible]ந்தனுள் நூன்முகத்தினது இலக்கணமாதலினென்க.

(இ - ள்.) இவ்வெட்டுப்பொருளையும் விளங்க உணர்த்துவது சிறப்புப் பாயிரத்தினது இலக்கணமாம். எ - று.

ஆக்கியோன்பெயரே யென்றற்றொடக்க[illegible]னவற்றுட் சிறப்பென்பது தோன்றினமையிற் பாயிரமெனவாளா கூறி[illegible]ரென்க. (சஎ)

[illegible] காலங் கள[illegible] காரண மென்றிம்
[illegible]மூவகை யேற்றி மொழிநரு முளரே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அவ்வெட்டினோடு இம்மூன்றினையுங்கூட்டிப் பதினொன்றாகக் கூறுவாருமுளர். எ - று. (சஅ)

## நூற்பெயர்வகை.

சசு. முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினும்
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

எ - ன், மேற்கூறிய பதினொன்றனுள் நூற்பெயர்க்கும் யாப்பிற்கும் சிறப்புவிதியுணர்த்தவேண்டுதலின் அவ்விரண்டனுள் நூற்பெயர்க்குச் சிறப்பு விதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதனூன்முதல் தன்மையீறாகக்கூறிய ஏழும் பிறவுமாகிய காரணங்களானும் இடுகுறியானும் நூற்குப்பெயர்வரும். எ - று.

வரலாறு:— முதனூலாற் பெயர்பெற்றன: [1]ஆரியப்படலம், பாரதமுதலாயின; கருத்தனாற் பெயர்பெற்றன: அகத்தியம், தொல்காப்பிய முதலாயின; அளவினாற்பெயர்பெற்றன: பன்னிருபடலம், நாலடிநானூறுமுதலாயின; மிகுதியாற்பெயர்பெற்றன: களவியல்முதலாயின; பொருளாற்பெயர்பெற்றன: அகப்பொருள்முதலாயின; செய்வித்தோனாற் பெயர்பெற்றன: சாதவாகனமுதலாயின; தன்மையாற் பெயர்பெற்றன: சிந்தாமணி, நன்னூல்முதலாயின; இடுகுறியாற் பெயர்பெற்றன: நிகண்டு, கலைக்கோட்டுத் தண்டுமுதலாயின; பிறவுமன்ன. (சகூ)

## நூல்யாப்பு.

ருo. தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.

எ - ன், யாப்பினுக்குச் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நூல்யாப்பு இந்நான்குகூற்றதாமென்று சொல்லுவர் புலவர். எ - று.

வெண்பாமுதலிய யாப்பினோடு இவற்றிற்கு வேற்றுமைதோன்ற நூல்யாப் பென்றார். (ருo)

## சிறப்புப்பாயிரஞ் செய்தற்குரியோர்.

ருக. தன்னா சிரியன் தன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் றகுமுரை காரனென்
றின்னோர் பாயிர மியம்புதல் கடனே.

எ - ன், இவ்விலக்கணத்தையுடைய சிறப்புப்பாயிரங் கூறுதற்குரியார் இவரென உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒருவன்கூறிய நூற்கு இந்நால்வருள்ளொருவர் சிறப்புப்பாயிரம் கூறுதல்முறைமை. எ - று. (ருக)

## சிறப்புப்பாயிரம் பிறராற்செய்யப்படுதற்குக்காரணம்.

ருஉ. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்றற் புகழ்தல் தகுதி யன்றே.

(பி - ம்.) 1 'ஆசியப்'

எ-ன், சிறப்புப்பாயிரம் பிறர்கூறுதற்குக் காரணமுணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) தோன்றாத தோற்றமெல்லாந்தோற்றிப் பலவுரைப்பட்டு விரித்த நூலைச் செய்து முடித்தானுயினும் தன்னைத்தான் புகழ்தல் தகுதியன்றாதலின், நூல் செய்தானது புகழாகிய சிறப்புப்பாயிரத்தைப் பிறர் கூறவேண்டும். எ-று. (ருஉ)

ருங. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்
தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்
மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் [1]புகழ்தலுந் தகும்புல வோர்க்கே.

எ-ன். தற்புகழ்ச்சியும் ஓரோவழிக் குற்றமன்றென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) இவ்விடங்களாயின், தன்னைப்புகழ்தலும் தகுதியாம் புலவோர்க்கு. எ-று.

புகழ்தலுமென்ற உம்மையால் இவ்விடங்களினும் அல்லாவிடத்துப் புகழாமையே தகுதியென்பது பெற்றாம். (ருங)

பாயிரம் நூலுக்கு இன்றியமையாததென்பது.

ருச. ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே.

எ-ன், இருவகைப்பாயிரங்களும் நூற்கு இன்றியமையாதனவென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) ஆயிரம் உறுப்புக்களான் விரிந்த நூலாயினும் பாயிரமில்லாதது நூலன்று. எ-று. (ருச)

(வெண்பா.)

ருரு. மாடக்குச் சித்திரமு மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோ ணல்லார்க் கணியும்போல் - நாடிமுன்
ஐதுரையா நின்ற வணிந்துரையை யெந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது.

எ-ன், மேற்பாயிரமில்லது பனுவலன்றென்றார், அஃது அன்றாதற்குக் காரணமுணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) அழகுடையோர் மாட[illegible]லிய முன்றற்கும் சித்திரமுதலிய [illegible] போலக் [illegible] இருவகைப்பாயிர[illegible] எவ்வகைப்பட்ட நூல்கட்கும் முன்னாகப்பெய்து வைத்தார் பெரியாரும், ஆதலால் பாயிரமில்லது பனுவலன்றாம். எ-று. (ருரு)

பொதுப்பாயிர முற்றிற்று.

(பி-ம்.) 1 'புகழ்வதூஉம்'

முதலாவது

# எழுத்ததிகாரம்.

---

## க.—எழுத்தியல்.

### கடவுள்வணக்கமும் அதிகாரமும்.

ருசு. பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே.

எ - ன், கடவுள்வணக்கமும் அதிகாரமுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பூக்கண்மலிந்த அசோகமரத்தினது அலங்கரிக்கு நிழலின்கண் எழுந்தருளியிருந்த நான்குதிருமுகங்களையுடைய கடவுளைவணங்கி நன்றாகச் சொல்லுவன், எழுத்திலக்கணத்தை. எ - று.

எல்லாநூலும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுதலிற் பூமலியென்றும், எல்லாச்சமயத்தோராலும் வணங்கப்படும் படைப்புமுதலிய ஐந்தொழிற்குமுரிய எல்லாக்கடவுளாகியுந்நின்ற வொருவனேயென்பார் அருகனை நான்முகனென்றுங்கூறினார். இவ்வாறு வள்ளுவநாயனாரும் *"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்" என வரையாது கூறுதல் காண்க. எழுத்தென்பது ஆகுபெயர்; ஏகாரம் ஈற்றசை. எல்லாம்வல்ல கடவுளை வணங்கலான் இனிதுமுடியுமென்பதுகருதி நன்கியம்புவனென்று புகுந்தமையின் இது நுதலிப்புகுதலென்னும் உத்தி. (க)

### எழுத்திலக்கணவகை.

ருஎ. எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதனீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

எ - ன், அவ்வெழுத்திலக்கணம் இத்துணைத்தென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இப்பன்னிருபகுதியினையுமுடைத்து, அவ்வெழுத்திலக்கணம். எ - று.

என்றுவென்பது எண்ணிடைச்சொல். இச்சூத்திரம் தொகுத்துச் சுட்டலென்னும் உத்தி. மேல்வருவனவெல்லாம் வகுத்துக்காட்டல். (உ)

### க. எழுத்தின் எண்.

ருஅ. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.

எ - ன், "பன்னிருபாற்றதுவே" (ருஎ) என்றவற்றுள், எழுத்தினது அகத்திலக்கணமாகிய பத்தையும் ஓரியலாகவும் அதன்புறத்திலக்கணமாகிய பதம்

---

* திருக்குறள், ௧.

புணர்பெனவுமிரண்டனுள் அவ்வெழுத்தானாகும் பதத்தை ஓரியலாகவும், அப்பதம்புணரும் புணர்ப்பை மூன்றியலாகவும் ஓத்துமுறைவைப்பென்னும் உத்தியான் வைக்கப்புகுந்து முதற்கண்வைத்த எழுத்தியலில் எழுத்தினது எண்ணினை நிறுத்தமுறையான் உணர்த்துவான்றொடங்கி எழுத்து இன்னதென்பதூஉம் அதன் வகையும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மொழிக்குமுதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வருமொலியாவது எழுத்து; அது முதலெழுத்தென்றும் சார்பெழுத்தென்றும் இருவகையினை உடைத்து. எ - று.

எனவே மொழிக்குமுதற்காரணம் எழுத்தானாற்போல எழுத்துக்குமுதற்காரணம் அணுத்திரளென்பதுபெற்றாம். ஆமென்னும்பெயரெச்சம் ஒலியென்னும் பெயரொடுமுடிந்தது. முற்கு வீளைமுதலியவற்றிற்கு முதற்காரணமாய் அணுத்திரளின்காரியமாய் வருமொலி எழுத்தாகாமையின், மொழிமுதற்காரணமாம் ஒலியென்றார். சிதலைதுநீர்வாய்ச் சிறுதுக ளாற்பெரும் புற்றுருவமைந்த பெற்றிய தென்ன ஐம்புலப் பேருரு வைக்துமைந் தணுவா லிம்பரிற் சமைவ தியாவரு மறிதலின், அநாதிகாரணமாகிய மாயையினேஈண்டுக்கூறாது ஆதிகாரணமாகிய செவிப்புலனா மணுத்திரளை எழுத்திற்கு முதற்காரணமென்றார். இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடன்று; அணுத்திரளொன்றுமேதுணிவெனின், பிறிதொடுபடான் றன்மதங்கொளலென்னும் மதம்படக்கூறினாரென்றுணர்க. ஈண்டு அணுவென்றது ஒலியினது நுட்பத்தை. (ரு)

## முதலெழுத்து.

௫௯. உயிரு மூடம்புமா முப்பது முதலே.

எ - ன், முதலெழுத்தின் விரியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரும் உடம்புமாகு முப்பதெழுத்தும் முதலெழுத்தாம். எ - று. (சு)

## சார்பெழுத்து.

௬௦. உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.

எ - ன், சார்பெழுத்தின் விரியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இப்பத்தும் சார்பெழுத்தாம். எ - று.

அஃகுதல் - சுருங்குதல். தனிநிலை - ஆய்தம். உயிர்களோடும் மெய்களோடுங்கூடியும் கூடாதும் அலிபோலத் தனித்துநிற்றலின் தனிநிலையெனப்படும். உயிர்மெய் உயிருமெய்யும் கூடிப்பிறத்தலானும், ஆய்தம் உயிர்போல, *"அற்றாலளவறிந் துண்க வஃகுது மெய்பெறாமை துய்க்கு மாறு" என அலகுபெற்றும், மெய்போல *"தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று" என அலகுபெறாதும் ஒருபடையொத்து அவற்றின் இடையே சார்ந்துவருதலானும், ஏனைய தத்தம் முதலெழுத்தின் திரிபுவிகாரத்தாற்பிறத்தலானும் சார்பெழுத்தாயினவெனக் கொள்க. (௬)

* திருக்குறள், ௯௪௩, ௨௩௬.

பலர்க்கும் சேறலானும் காரணங்கருதாவழி இடுகுறிமாத்திரையேயாய்ப் பரம னுக்கே சேறலானும் காரணவிடுகுறியாயிற்று. ஏனைப்பெயர்கட்கும் இவ்வா றே காண்க. இவ்வாறே வடநூலார் இடுகுறியை ரூடியென்றும் காரணத்தை யோகமென்றும் காரணவிடுகுறியை யோகரூடியென்றும் வழங்குப. இவ் விலக்கணத்தான் எழுத்தினதுபெயரும் பிறபெயரும் வருமாறுகாண்க. (எ)

## உ. எழுத்தின் பெயர்.

சூஅ. அம்முத லீரா றாவி கம்முதன்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

எ - ன், ஒருசாரெழுத்தினது பெயராமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அகரமுதல் ஔகாரவீறாகக்கிடந்த பன்னிரண்டினையும் ஆவி யென்றும் ககரமுதலாகக்கிடந்த பதினெட்டினையும் மெய்யென்றும் நூல்களாற் சொன்னார் அறிவுடையோர். எ - று.

கடவுளால் ஆவி மெய்யென்றமைத்த பெயர்க்காரணம் உயிர்களான்முற்று முணர்தற்கு அருமையும் கடவுணாலுணர்ந்தோர்வழிச் செல்லும் தமது பெரு மையுந்தோன்ற விளம்பினர்புலவரென்றார். ஆவியுமெய்யும்போறலின் இவ்விரு வகையெழுத்திற்கும் ஆவிமெய்யென உவமவாகுபெயராய்க் காரணப்பொதுப் பெயராயின. ஏனையவும் இவ்வாறேகாண்க. (அ)

## குறில்.

சூசு. அவற்றுள், அஇ உஎ ஒக்குறி லைந்தே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஆவிமெய்யென்றவற்றுள் இவ்வைந்தும் குற்றெழுத்தாம். எ - று. (கூ)

## நெடில்.

சூரு. ஆஈ ஊஏ ஐஓ ஔநெடில்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வேழும் நெட்டெழுத்தாம். எ - று. (க0)

## சுட்டெழுத்துக்கள்.

சூசூ. அஇ உம்முதற் றனிவரிற் சுட்டே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இம்மூன்றெழுத்தும் மொழிக்குப் புறத்தும் அகத்தும் முதற் கண் தனித்துச் சுட்டுப்பொருளுணர்த்தவரிற் சுட்டெழுத்தாம். எ - று.

[illegible] பொருட்படக்கூறினமையிற் புறத்தும் அகத்துமென்பது பெற்றும்.

(உ - ம்.) அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன் எ-ம், அவன், இவன், உவன் எ-ம் வரும்.

அவனென்பதன்கண் அகரம், அறமென்பதன்கண் அகரம்போலப் பின் எழுத்துக்களோடு தொடர்ந்துநின்று ஒருபொருளையுணர்த்தாது மலையனென்

பதன்கட் பகுதிபோல வேறுநின்று சுட்டுப்பொருளுணர்த்தலின் அகத்துவரு மிதனையும் தனிவரியென்றார். இவ்வுரை வினாவிற்குங்கொள்க. (கக)

## வினாவெழுத்துக்கள்.

சூஎ. எயா முதலு மாவோ வீற்றும்
ஏயிரு வழியும் வினாவா கும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) புறத்தும் அகத்தும் மொழிமுதற்கண் எகரமும் யாவும், ஈற்றின்கண் ஆகாரமும் ஓகாரமும், இவ்விரண்டிடத்திலும் ஏகாரமும் தனித்து வினாப்பொருளுணர்த்தவரின் வினாவெழுத்தாம். எ - று.

மேல் தனிவரியெனன்றதனை ஈண்டும் கூட்டுக. இவை புறத்தும் அகத்தும் வருதல் ஏற்ற பெற்றிகொள்க.

ஒன்றினமுடித்தறன்னினமுடித்தலென்னும் உத்தியான், யா வினாவையும் உடன்கூறினார்.

(உ - ம்.) எக்கொற்றன் எ-ம், எவன், யாவன் எ-ம் முதற்கண்வந்தன. கொற்றனா, கொற்றனோவென ஈற்றின்கண்வந்தன. ஏவன், கொற்றனே என ஈரிடத்தும் வந்தன. ஏனைப் பெயர்வினைகளோடும் ஏற்றபெற்றி ஒட்டிக் கொள்க. (கஉ)

## வல்லினம்.

சூஅ. வல்லினங் கசடத பறவென வாறே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறும் வல்லினமாம். எ - று. (கங)

## மெல்லினம்.

சூசு. மெல்லினம் ஙஞணந மனவென வாறே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறும் மெல்லினமாம். எ - று. (கச)

## இடையினம்.

எ0. இடையினம் யரல வழளவென வாறே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வாறும் இடையினமாம். எ - று. (கரு)

## இனவெழுத்து.

எக. ஐஔ இஉச் செறிய முதலெழுத்
திவ்விரண் டோரின மாய்வரன் முறையே.

எ - ன், இனமடைத்தனுதலிற்று.

(இ - ள்.) இனமில்லாத ஐகார ஔகாரங்கள் ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரங்களைத் தமக்கும் இனமாகப்பொருந்த முதலெழுத்துக்

கள் இவ்விரண்டு ஓரினமாய்வருதல் முறையாதலால் அவை இனவெழுத்தென்றும் பெயர்பெறும். எ - று. (கசு)

## இனமென்றதற்குக்காரணம்.

எஉ. தான முயற்சி யளவு பொருள்வடி
வானவொன் ருதியோர் புடையொப் பினமே.

எ - ன், மேல் இனமென்றதற்குக் காரணமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தானமுதலியவாய இவற்றுள் ஒன்றுமுதலாக ஒருபுடையொத்தலால் இனமாம். எ - று.

தானம்-உரமுதலியன; முயற்சி-இதழ்முயற்சி முதலியன ; அளவு-மாத்திரை; பொருள் - பாலவாவிருதலைறக்காலக் குறிலினது விகாரமே நெடிலாதலின இரண்டற்கும் பொருளொன்றென்று முதனூலால் நியமிக்கப்பட்டபொருள்; வடிவு-ஒலிவடிவு, வரிவடிவு. இவற்றுள் ஒன்றும் பலவுமொத்து இனமாய் வருதல் கண்டுகொள்க. சார்பெழுத்திற்குப் பெயர் கூறுதொழிந்தார், ஆய்தம் தனிநிலையாதலானும் ஏனைச் சார்பெழுத்திற்குச் சுட்டுவினுவென்று விதந்தோதினவையொழிந்த முதலெழுத்தின்பெயரே பெயராயடங்குதலானுமென்க.

இச்சூத்திரம் ஏதுவின்முடித்தலென்னும் உத்தி. (கஎ)

## ங. எழுத்தின் முறை.

எங. சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல்
நடத்த ருனே முறையா கும்மே.

எ - ன், நிறுத்தமுறையானே முறையாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) சிறப்பினாலும் இனத்தினாலும் பொருந்தி இவ்வுலகத்து அகரமுதலாக வழங்குதருனே எழுத்தினது முறையாம். எ - று.

குறிலினதுவிகாரமே நெடிலாதலாற் குறில் முன்னிற்றலிற் சிறப்பினென்றும், நெடில் இனமாய்ப் பின்னிற்றலின் இனத்தினென்றும், நாதமாத்திரையாய் எல்லாஎழுத்திற்கும் காரணமாய் முன்னிற்றலின் அம்முதலென்றும், எல்லாவெழுத்திற்கும் வைத்த முறைக்காரணம் உயிர்தானன் முற்றுமுணர்தலாகாமையின் நடத்தருனேயென்றுங் கூறினர். (கஅ)

## ச. எழுத்தின் பிறப்பு.

எச. நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப
எழுமணுத் திரளுரங் கண்டமுச்சி
மூக்குற் றிதழ்நா பல்லண நொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

எ - ன், நிறுத்தமுறையானே பிறப்பாமாறு உணர்த்துவான்றொடங்கி அதன் பொதுவிதி உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒலியெழுத்தாகிய காரியத்திற்கு வேண்டுங்காரணங்களில் ஒருவாற்றானும் குறைவின்றி நிறைந்த உயிரினதுமுயற்சியால் உண்ணின்ற

வளியெழுப்ப எழும் செவிப்புலனும் அணுக்கள் உரமுதலிய நான்கிடத்தையும் பொருந்தி இதழ்முதலிய நான்கின்தொழில்களால் வெவ்வேறுஎழுத்தாகிய ஒலிகளாய்த் தோன்றுதல் அவற்றின்பிறப்பாம். எ - று. (கக)

## முதலெழுத்துக்களின் இடப்பிறப்பு.

எரு. அவ்வழி,

ஆவி யிடைமை யிடமிட றாகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை.

எ - ன், முதலெழுத்துக்கட்கு இடம்வகுத்தனுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறியநெறியாற் பிறக்குங்கால், ஆவி இடையினமென்னும் இருவகையெழுத்தினது இடம் மிடறாகும்; மெல்லினம் மூக்கைஇடமாகப் பொருந்தும் ; வல்லினம் நெஞ்சை இடமாகப்பெறும். எ - று. (உ0)

## முதலெழுத்துக்களின் முயற்சிப்பிறப்பு.

எசு. அவற்றுள்,

முயற்சியுள் அஆ வங்காப் புடைய.

எ - ன், முதலெழுத்துட் சிலவற்றிற்கு முயற்சிவகையாற் பிறப்புணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேல் இடம்வகுக்கப்பட்ட முதலெழுத்துக்களுள், அகர ஆகாரங்கள் நால்வகைமுயற்சியுள் அண்ணத்தின்தொழிலாகிய அங்காத்தலையுடையவாய்ப் பிறக்கும். எ - று. (உக)

எஎ. இஈ எஏ ஐஅங் காப்போ
டண்பன் முதனா விளிம்புற வருமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வைந்தெழுத்தும் அங்காப்புடனே அண்பல்லை அடிநா விளிம்பு பொருந்தப் பிறக்கும். எ - று. (உஉ)

எஅ. உஊ ஒஓ ஔவிதழ் குவிவே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்வைந்தெழுத்தும் பிறத்தற்கு ஏதுவாயமுயற்சி இதழ் குவிவாம். எ - று. (உங)

எகூ. கஙவுஞ் சஞவு[illegible] ணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வரு[illegible]

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) கவ்வும் ஙவ்வும் முதனா முதலண்ணத்தையும், சவ்வும் ஞவ்வும் இடைநா இடையண்ணத்தையும், டவ்வும் ணவ்வும் நுனிநா நுனியண்ணத்தையும் பொருந்த இம்முறையே பிறக்கும். எ - று. (உச)

அ௦. அண்பல் லடிநா முடியுறத் தநவரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்பல்லடியை நாநுனிபொருந்தத் தவ்வும்நவ்வும் பிறக்கும். எ - று. (உ௫)

அக. மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேலிதழும் கீழிதழும் பொருந்தப் பவ்வும் மவ்வும் பிறக்கும். எ - று. (உ௬)

அஉ. அடிநா வடியண முறயத் தோன்றும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அடிநா அடியண்ணத்தைப்பொருந்த யகரம் பிறக்கும். எ - று. (உ௭)

அ௩. அண்ண நுனிநா வருட ரழவரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்ணத்தை நுனிநாத் தடவ ரவ்வும் ழவ்வும் பிறக்கும். எ - று. (உ௮)

அச. அண்பன் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்பன்முதலை நாவிளிம்பு வீங்கி ஒற்ற லகாரமாகியும், அண்ணத்தை நாவிளிம்புவீங்கிவருட ளகாரமாகியும் இவ்விரண்டெழுத்தும்பிறக்கும். எ - று. (உ௯)

அ௫. மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே.

எ - ன், இதுவுமது.

(இ-ள்.) மேற்பல் கீழிதழைப்பொருந்த வகாரம் பிறக்கும். எ-று. (௩௦)

அ௬. அண்ண நுனிநா நனியுறிற் றனவரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அண்ணத்தை நுனிநா [illegible]பொருந்தில் றவ்வும் னவ்வும் பிறக்கும். எ - று. (௩௧)

[illegible]

[illegible]பெழுத்தின் இடமும் முயற்சியும்.

அ௭. ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.

எ - ன், சார்பெழுத்துக்கட்கு இடமுயற்சிவகையாற் பிறப்புணர்த்து னுதலிற்று.

(இ - ள்.) ஆய்தம்பிறத்தற்கு இடம் தலை ; முயற்சி அங்காத்தலாம்; ஒழிந்த சார்பெழுத்துக்களும் இடமுயற்சிகள் தம் முதலெழுத்துக்களோடு ஒப்பனவாய்ப் பிறக்கும். எ - று.

சார்பின்சார்பாகிய ஆய்தக்குறுக்கமும் அதன் முதல்போலப்பிறக்குமென்பார் எதிரதுதழீஇ ஏனவுமென்றார். (௩௨)

## பிறப்பின்புறனடை.

அஅ. எடுத்தல் படுத்த னலித லுழப்பிற்
திரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும்.

எ - ன், மேற்கூறிய பிறப்பிற்கு ஒருபுறனடையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பலவெழுத்திற்கும் பிறப்புஒன்றாகச்சொல்லப்பட்டனவேனும் எடுத்தல் படுத்தல் நலிதலென்னும் எழுத்திற்குரிய ஒலிமுயற்சியான் ஒன்றற்கொன்று பிறப்புவேறுபாடுகளும் அவ்வவற்றின்கட் சிறிது உளவாம். எ - று.

## உயிர்மெய்.

அகூ. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
1 ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய்.

எ - ன், மேற் பிறப்புணர்த்திய சார்பெழுத்திற்குச் சார்ந்துவருமாறும் ஒருபிறப்பாதலிற் பிறப்பதிகாரத்துள் அடக்கியுணர்த்துவான்றொடங்கி அவற்றுள் உயிர்மெய் வருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மெய் புள்ளியைவிட்டு அகரத்தோடு கூடியவழி விட்டஉருவே உருவாகியும் ஒழிந்த உயிர்களோடு கூடியவழி உருவுவேறுபடும் தன்மாத்திரை தோன்றாது உயிர்மாத்திரையே மாத்திரையாய அதன்வரிவடிவினது விகாரவடிவேவடிவாய் உயிர்வடிவை ஒழித்து மெய்யுயிரென்னும் பெயராகிய இரண்டிடத்தும்பிறந்த உயிர்மெய்யென்னும் பெயருடனே ஒற்றொலிமுன்னும் உயிரொலி பின்னுமாகிவரும், உயிர்மெய்யெழுத்து. எ - று.

ஒழித்தென்றும் ஒற்றுமுன்னாயென்றும் வந்த சினைவினை இருவயிற்பெயரொடும் வருமென்னும் முதல்வினையொடு முடிந்தன. பூதிமுதலியவற்றிற்றீட்டிய வரிவடிவும் ஒலிவடிவும்போலப் பயன்தருமொற்றுமைகுறித்து ஈண்டு அவ்விருதிறனும் விரவிக்கூறினார். இவ்விலக்கணத்தான் ஒவ்வொருமெய்யிற் பன்னீருயிருங்கூடப் பன்னிரு பதினெட்டிருநூற்றிருபத்தாறுய்வருமாறு வழங்கும் வரிவடிவுள்ளும் ஒலிவடிவுள்ளும் காண்க. (௩௪)

## முற்றாய்தம்.

கூ0. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

எ - ன், முற்றாய்தம் வருமாறுணர்த்துதனுதலிற்று.

---

(பி - ம்.) 1 'ஏனவுயிரோடு'

(இ - ள்.) புள்ளிவடிவினதாய ஆய்தம் குற்றெழுத்தின் முன்னதாய் உயிரொடுகூடிய வல்லெழுத்தாறன்மேலதாய் வரும். எ - று.

உயிர்வருக்கத்து இறுதிக்கட்டடங்த ஆய்தவடிவைப் பிற்காலத்து வேறுபட வரைந்து வழங்குவராதலின், தொல்வடிவதோன்ற ஆய்தப்புள்ளியென்றார்.

(உ - ம்.) எஃகு, கஃசு, இருபஃது, அஃகடிய, அஃசான், வஃகான் எ - ம், தனிக்குறிலென்று வரைந்தோதாமையின், "விலஃஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாத, நிலஃஃஃகு முக்தி னினம்" எ - ம் வரும். பிறவுமன்ன.

இச்சூத்திரம் மேற்கோளாதலால் தானெடுத்துமொழிதலென்னுமுத்தி. வல்லினவகையான் இயல்பாகவந்த ஆய்தம் ஆறனோடு புணர்ச்சிவிகாரத்தான் வருமாய்தமும் செய்யுள்விகாரத்தான் வருமாய்தமுங்கூடி எட்டாய்வருமாறு காண்க. (௯௫)

## உயிரளபெடை.

௯௬. இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்
அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே.

எ - ன், உயிரளபெடைவருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் இசை குன்றின் மொழிமுதலினும் இடையினுங் கடையினுநின்ற நெட்டெழுத்தேழும் அவ்விசைநிறைக்கத் தம்மாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு அவற்றின்பின் அவற்றிற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவின்கண் அறிகுறியாய்வரும். எ - று.

(உ - ம்.) "ஆஅ அளிய வலவன்றன் பார்ப்பினோ, டீஇ ரிரையுங்கொண் டீரளைப் பள்ளியுட், டூஉங் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றேஎண், மேஎவலைப் பட்ட நம்போ னறுநுதால், ஓஒ வுழக்குங் துயர்" எ - ம், *"உறாஅர்க்குறு நோ யுரைப்பாய் கடலைச், செறாஅஅய் [1]வாழியவென்னெஞ்சு" எ-ம், †"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு, நல்ல படாஅ பறை" எ-ம் வரும். 'செறாஅஅய்வாழி' என்புழி நான்குமாத்திரையாயும் ஏனைய மூன்றுமாத்திரையாயும் அலகுபெற்றுச் செய்யுளிசைநிறைத்து மூவிடத்தும் வந்தவாறு காண்க. பிறவுமன்ன. இனி இசைகெடினென்று பொதுப்படக்கூறினமையான், ‡"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே, யெடுப்பதூஉ மெல்லா மழை" எனக் குறில்நெடிலாய் அளபெழுந்து அலகுபெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்பவருவனவும், §"உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார், வரனசைஇ யின்னு முளேன்" என அளபெழுந்து அலகுபெற்றும் பெறாதும் சொல்லிசை நிறைப்பவருவனவும், ||"வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார், வீழப் படாஅ ரெனின்" என்பதனுட் கெழீஇயிலரென அளபெழுந்து அலகுபெறாது சொல்லிசைநிறைப்ப வருவனவுங்கொள்க. எழுத்துப் பலவாயின ஒலிவேற்றுமையாதென்றே? அங்ஙனமாக, கொலை விகாரமாய் ஓரொலியாய்ப்பிறக்கும் அளபெடையை இரண்டெழுத்துக்கூடி மூன்றுமாத்திரையாயிற்றெனக்கொள்ளின், இரண்டெழுத்தொலி அங்ஙனம் இன்மையானும் அளபெடையென்னும்பெயர் ஏலாமையானும் அவ்வாறுகொள்ளாது அறிகுறியேயென்றுகோடற்குக் குறிய

* திருக்குறள், ௧௨௦௦.
† ,, ௧௧௧௫.
‡ ,, ௧௫.
§ திருக்குறள், ௧௨௬௩.
|| ,, ௧௧௯௪.
(பி - ம்.) 1 'வாழியநெஞ்சு'

யென்றார். இக்கருத்தேபற்றி ஆசிரியர் தொல்காப்பியரும், *"குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கு நெட்டெழுத்து" என்றும் 'அவற்றின்பின் அறிகுறியாய்வரும் ஒத்தகுற்றெழுத்து' என்றுங் [1] கூறினாரன்றோ? குறிலேயென்றது, இவ்விரண்டு மேற்கோளில் ஒன்று துணிதலான் ஒருதலைதுணிதலென்னு முத்தியும் அம்மதமும்பட வந்ததென்க.

இதனுள், இடவகையான் உயிரளபெடை எழுமூன்றாய் வருமாறு காண்க. (௯௧)

## ஒற்றளபெடை.

௯௨. ஙஞண நமன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே.

எ - ன், ஒற்றளபெடை வருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் இசைகுன்றின், குறிலிணைக்கீழும் குறிற்கீழுமாய் மொழியிடையினும் ஈற்றினுநின்ற இப்பத்தொற்றும் ஆய்தமும் அவ்வோசையைநிறைக்கத் தம்மாத்திரையின் மிக்கொலிக்கும்; இவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு அவற்றின்பின் அவ்வெழுத்துக்களே வரிவடிவின்கண் வேறு அறிகுறியாய்வரும். எ - று.

† "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனான் மேல் இசைகெடினென்றதனை இவ்வளபெடைக்கும் வருவித்துக்கொள்க. மாத்திரை நிறைத்தற்கன்றி அறிகுறி மாத்திரையாய் வருமென்று கோடற்கு வேறே யென்றார்.

(உ - ம்.) "இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக், கலங்ங்கு [2]நெஞ்சமிலைக் காண்" எ - ம், "எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயா, னெங்ங் கெனத்திரிவா ரின்" எ-ம், "கலங்ங்கொண்ட கவின்மார்பர்", "மடங்ங் கவந்த மனனே களைந்து, விடங்ங் கலக்தானை வேண்டு" எ - ம், "அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து, நங்ங் களங்கறுப்பா நாம்" எ - ம், ஙகாரம் குறிலிணைக்கீழும் குறிற்கீழும் மொழிக்கிடையினும் கடையினும் முறையே அளபெழுந்தது. "கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு, பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ, மின்ன் னுழைமருங்கு மேதகு சாயனா, ளென்ன் பிறமக ளாமாறு" என ணகாரமும் னகாரமும் குறிற்கீழ் மொழியீற்றின் அளபெழுந்தன. "எஃஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர், வெஃஃஃ குவார்க்கில்லை வீடு" என ஆய்தம் குறிற்கீழ் மொழிக்கிடையின் அளபெழுந்தது. பிறவுமன்ன. ஆய்தம் ஒற்றோடும் ஒருபுடையொத்துவருதலின் ஈண்டுச் சேர்த்துரைத்தார். ஙகரம் விதியீறாய்வருதலின் அதனை விலக்காது, ஆய்தம் ஒருமொழிக்கண்ணும் தொடர்மொழிக்கண்ணும் விட்டிசைத்த முதலெழுத்துக்கள் இருமருங்கு நின்றெழுப்ப இருசிறகெழுப்ப எழுமுடலதுபோல் இடையெழுந்து ஒலிப்பதன்றி ஒருவாற்

* "குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கு, நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே" தொல். மொழி. சூ. ௮.

† நன். சூ. ௩௫௮.

(பி - ம்.) [1] 'கூறினாரன்றேற்குறியே' [2] 'நெஞ்சமிலைகாண்'

ஈரொற் றாய்வரூஉந் தன்மைய தன்றாகலின், அஃகடிய முதலியவற்றின்கண் நிகழ்ந்த ஆய்தம் அஃகான்முதலியவற்றின்கட் டோன்றிய ஆய்தம்போலத் தொடர்மொழிக்கண் இடைநிலையா யன்றி விதியீறன்றென்று அதனுண்மை துணிந்து அதனை இறுதிக்கண் விலக்கி ஒற்றளபெடை நாற்பத்திரண்டென்று மேலுரைத்தவாறு இங்ஙனம் வருதல்காண்க. (கூஎ)

## குற்றியலிகரம்.

கூஙு. யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.

எ - ன், குற்றியலிகரம் வருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) யகரம் வருமொழிக்கு முதலாகிவர நிலைமொழிக்கு ஈறாகி நின்ற குற்றியலுகரந்திரிந்த இகரமும் மியாவென்னும் அசைச்சொல்லின்கண் இகரமும் குற்றியலிகரங்களாம். எ - று.

எனவே இங்ஙனம் வாராமாயின் இவ்வெழுத்தின்றொடர்பாற் குறுகுமென் பதுபெற்றாம்.

(உ - ம்.) நாகியாது, எஃகியாது, வரகியாது, கொக்கியாது, குரங்கியாது, அல்கியாது எ - ம், கேண்மியா, சென்மியா எ - ம் வரும். பிறவு மன்ன.

தொகுப்புக்கூறிய குற்றியலுகரம் முப்பத்தாறனாலும் அசைச்சொல் மியாவினாலும் குற்றியலிகரம் முப்பத்தேழாய் வருமாறு காண்க. (கூஅ)

## குற்றியலுகரம்.

கூச. நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே.

எ - ன், குற்றியலுகரம் வருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தனிநெடிலோடே ஆய்தமும் உயிரும் வல்லொற்றும் மெல்லொற்றும் இடையொற்றுமாகிய எல்லாவெழுத்தினுள் யாதானுமொன்று தொடரப்பட்ட மொழியிறுதிக்கண் வல்லொற்றுக்களை ஊர்ந்துவந்த உகரம் தன் மாத்திரையிற் குறுகும்; அது தன்மாத்திரையிற் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்குங்காரணம் இவ்வாறெழுத்துக்கள் தொடர்தன்மாத்திரையின் அமையாது பிறவெழுத்துக்களொன்றும் பலவும் மேலே தொடரவும்பெறும். எ - று.

நெடிலை ஒடுக்கொடுத்துப் பிரித்தார், தனிநெடிலாதற்கு ; உயிரென்றது, குற்றுயிர் நெட்டுயிரிரண்டையுமாம். தொடரென்னும் வினைத்தொகை வன்மையூ ருகரமென்னுந் தொடர்மொழியொடு முடிந்தது. பிறவென்றது, பகரம்ட்டு நேரும் பருப்பதமென்பதுமென்று வரையறுத்தவற்றின் இங்ஙனம் ஈற்றயலும் ஈறுமாகக்கூறிய இரண்டுமொழிக்கு ஒழிந்த எழும் ஐந்துமாய எழுத்துக்களை. தொடரவுமென்றவும்மை இறந்தது தழீஇ நின்றது. பெறுமேயென்றது, தனிநெடி லொழிந்த ஐந்தொடரும்; வன்மையூருகரம் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்கும் மேற்றொடர்தலும் இன்றியமையாமையின்,

(உ - ம்.) நாகு, எஃகு, வரகு, பலாசு, கொக்கு, குரங்கு, அல்கு என வரும்; பிறவுமன்ன.

ஆசிரியர் தொல்காப்பியர், *"நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங், குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" எனத் தொகுத்துக்கூறியவாறேகூறாது எல்லா எழுத்தையுங்கூறுவார், அவற்றையே ஆய்தமுதல் ஐந்தாகவகுத்துத் தனிநெடிலோடு ஆறாகக்கூறுதல் குற்றுகரத்தை அறுவகையாக வழங்குதற்கு இலக்கணந்தோன்றவெனக் கொள்க. இது முன்மொழிந்துகோடலென்னு முத்தி. அவ்வாசிரியர் நுந்தையென்னு முறைப்பெயர்க்கண் உகரத்தைக் குறுக்கமென்றார். அஃது இவர்க்கு உடன்பாடன்மையிற் கூறாதொழிந்தார். இது மறுத்தலென்னுமதம். ஏனையஉடன்படல். மயக்கவிதியின்மையின், இடையினந்தொடராத டகாரறகாரங்களை ஊர்ந்த உகரமிரண்டனையும் விலக்காது ஆனைமுசக்கடவுளை மும்மதத்தனென்றாற்போல இலக்கணையென்னும்விதியாற் குற்றியலுகரம் முப்பத்தாறென்று மேற்கூறியவாறே வன்மையூருகரம் ஆறோடு நெடில்முதலிய ஆறையுமுறழ முப்பத்தாறாய் வருமாறுகாண்க. (௩௯)

## ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும்.

௯௫. தற்சுட் [1]டளவொழி யைம்மூ வழியும்
நையு மௌவு முதலற் றாகும்.

எ - ன், ஐகார ஔகாரச்குறுக்கங்கள் வருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஐகாரம் தன்னைக்கருதித் தன்பெயர்கூறுமளவிற் குறுகாது ஒழிந்த மொழிமுதல கடை இடையென்னு மூன்றிடத்தும் முன்னும் பின்னும் இருமருங்குமாய எழுத்தின்றொடர்பால் தன்மாத்திரையிற் குறுகும். ஔகாரமும் தன்பெயர்கூறுமளவிற்குறுகாது ஒழிந்த மொழிமுதற்கட் பின்வருமெழுத்தின் தொடர்பால் தன்மாத்திரையிற்குறுகும். எ - று.

சுட்டளவென்பது வினைத்தொகை. அளவென்றார், எழுத்தின்சாரியை தொடரினும் குறுகுமென்பதுகருதி. எனவே ஓரெழுத்தொருமொழியாய் நிலைமொழிவருமொழியாய்த் தொடர்ந்து தனித்து ஓரோவிடத்துவரின், தன்மாத்திரை குறுகாதென்பதூஉம் பெற்றாம்.

(உ - ம்.) ஐப்பசி, மைப்புறம் எ - ம், வலையன், எ - ம், குவளை எ - ம், மௌவல் எ - ம் வரும்.

இனி அளபெனப்பாடங்கொண்டு அளபென்பதனை அளபெடையாக்கித் தன்னைச்சொல்லுதற்கண்ணும் அளபெடுத்தற்கண்ணும் குறுகாதெனப் பொருள்கூறுவாருமுளர். தன்னியல்பாய இரண்டுமாத்திரையினின்றும் குறுகுதலில்லனவற்றையொழிப்பார், விகாரத்தால் மூன்றுமாத்திரையும் நான்குமாத்திரையுமாய் மிக்கொலிக்கும் அளபெடையை ஒழிக்கவேண்டாமையின் அதுபொருந்தாதென்க.

இடவகையான் ஐகாரக்குறுக்கங்கள் மூன்றும், ஔகாரக்குறுக்கமொன்றும் வருமாறுகாண்க. (௪௦)

---

* தொல். மொழி. சூ. ௩.

(பி - ம்.) 1 'அளபொழி'

## மகரக்குறுக்கம்.

௩௬. ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.

எ - ன், மகரக்குறுக்கம் வருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ணகர னகரங்களில் ஒன்று நின்றுதொடர்ந்திட அதன்முன் வரினும் வகரம் வந்துதொடர்ந்திட அதன்மேல்நிற்பினும் மகரம் தன் அரைமாத்திரையிற்குறுகும். எ - று.

(உ - ம்.) "பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர், முசுப் போல 1 முள்காந்திருப்பார், பசுத்தான் வெருளினு மெல்லாம் வெருளு மஃ தன்றி, மருளினு மெல்லா மருண்ம்" எ - ம், *"திசையறி மீகானும் போன்ம்" எ - ம், "தரும்வளவன்" எ - ம் வரும்.

இனி ணகர னகரங்களின் முன்வந்த மகரம் செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றீற்றதென்பதூஉம், அவ்வீற்றயலுகரங்கெட அவ்வுகரமூர்ந்த ளகரலகரங்கள் ஈற்றுமகரத்தொடு மயங்காமையின் மயங்குதற்குரிய ணகரனகரமாய்த் திரிந்தன ஈண்டுநின்ற ணகரனகரமென்பதூஉம், இவற்றுள் ஒன்றுடன் ஈரொற்றாய் மயங்கின் மகரங்குறுகுமென்பதூஉம், இவற்றின்முன் குறுகுதல் செய்யுட்கண்ணதென்பதூஉம், காணும், கூனுமென இயல்பாகநின்ற ணகரனகரங்கண் முன் இவ்வாறுவந்து மகரங்குறுகாதென்பதூஉம், பிறவும் மேல்வருஞ் சூத்திரங்களெல்லாவற்றையும்வேண்டிப் பருந்தின்வீழ்வாய்நின்ற இச்சூத்திரத்து உய்த்துணர்ந்துகொள்க.

இஃது உய்த்துணரவைப்பென்னுமுத்தி. (சக)

## ஆய்தக்குறுக்கம்.

௩௭. லளவீற் றியைபினு மாய்த மஃகும்.

எ - ன், ஆய்தக்குறுக்கம் வருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) லகாரளகாரவீற்றுப் புணர்ச்சியினுல்வரும் "குறில்வழி லளத் தவ் வணையி னய்த, மாகவும் பெறூஉம்" (உ௨அ) என்ற ஆய்தம் இருமருங்கு மாய எழுத்தின்றொடர்பால் தன் அரைமாத்திரையிற்குறுகும். எ - று.

(உ - ம்.) கஃறீது, முஃடீது எனவரும்.

இது முடிவிடங்கூறலென்னுமுத்தி. இவ்வாய்தம் குறுகாதென்க் காண்டல் விரோதங்கூறுவாருமுளர். (சஉ)

## ரு. எழுத்தின் உருவம்.

௩௮. தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மெகர மொகரமெய் புள்ளி.

எ - ன், நிறுத்தமுறையானே உருவமாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எல்லாவெழுத்தும் பல்வேறுவகைப்பட்ட வரைந்துவழங்கும் பழையவடிவினையுடையவாம்; அவ்வடிவினவாய் வழங்குமிடத்துத் தனித்தும் உடம்பூர்ந்தும்வரும் எகரமும் ஒகரமும் தனிமெய்களும் இயல்பாய புள்ளி

* பரி. ௧0: 55. (பி - ம்.) 1 'முள்காத்திருப்பார்'

யைப் பிற்காலத்துஒழித்துவரைந்து ஏகார ஓகாரங்களோடும் உயிர்மெய்களோடும் ஐயப்படவழங்கும்வழக்கினையுடையவன்றித் துணியப்படும் தொல்லைவடிவினது உறுப்பாய புள்ளியைப்பெறும். எ - று.

(வ - று.) எ் எ; ஒ் ஒ; கெ் கெ; கொ் கொ; க் க எனவரும். (சங)

### கூ. எழுத்தின மாத்திரை.

கூகூ. மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையௌக் குறுக்க மொற்றள
பரையொற் றிஉக் குறுக்க மாய்தம்
கால்குறண் மஃகா னாய்த மாத்திரை.

எ - ன், நிறுத்தமுறையானே மாத்திரையாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரளபெடைக்கு மாத்திரை மூன்றாம்; நெடிலுக்கு மாத்திரை இரண்டாம்; குறிலுக்கும் ஐகாரக்குறுக்கத்திற்கும் ஔகாரக்குறுக்கத்திற்கும் ஒற்றளபெடைக்கும் தனித்தனி மாத்திரை ஒன்றாம்; ஒற்றிற்கும் குற்றியலிகரத்திற்கும் குற்றியலுகரத்திற்கும் ஆய்தத்திற்கும் தனித்தனி மாத்திரை அரையாம்; மகரக்குறுக்கத்திற்கும் ஆய்தக்குறுக்கத்திற்கும் தனித்தனி மாத்திரை காலாம். எ - று.

உயிர்மெய்க்கு அளவுகூறாதொழிந்தார், மேல் உயிரளபாயென்றுரைத்தலின். இஃது உரைத்தாமென்னுமுத்தி. உயிரளபெடை நான்குமாத்திரையவாதல் ஆரிடத்துள்ளும் அவைபோல்வனவற்றுள்ளும் அருகிவந்து செய்யுள்வழுவமைதியாயமுடிதலின், அதனையொழித்து எல்லார்க்கும் ஒப்பமுடிந்து பயின்றுவருவது மூன்றுமாத்திரையேயாதலான், மூன்றுயிரளபென்றார். (சச)

க00. இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.

எ - ன், எழுத்தொலியெழுச்சி பலவற்றையும் அளந்துகோடற்குக்கூறிய ஒருமாத்திரையென்னும் காலசங்கையினையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மாந்தருடைய இயல்பாகவெழும் இமைப்பொழுதும் நொடிப்பொழுதும் ஒருமாத்திரையென்னும் வரையறைப்பொழுதாம். எ - று.

இமையென்றது இமைத்தலை; நொடியென்றது ஒலித்தலை. இவ்வியல்பினும் ஆகும்பொழுதாய காலத்தையுணர்த்தினானெனை. இயல்பெழுமென்னும் பெயரெச்சம் இமைநொடியென்னும் பெயர்களோடுமுடிந்தது. எழுத்தொலிமுதலியவற்றை இயல்புகெடுத்து ஒருவன் வேண்டியவாறே யெழுப்பினும் அவ்வாறெழாநிற்கும்; இமையும் நொடியும் இயல்புகெடுத்தெழுப்பவேண்டினும் அவ்வாறெழாது இயல்பாகவே எழாநிற்குமாதலின் இயல்பெழுமெனவும் மேலைச்சூத்திரத்து எழுத்தொலிகளை வேண்டியவாறெழுப்பாது இவ்வளவான் அளந்தெழுப்புகவெனவுங்கூறினார்.

பின்னது நிறுத்தலென்னுமுத்தியான் இவ்வளவுகருவி பிற்கூறப்பட்டது. ()

க0க. ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலு
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்.

எ - ன், தவளைப்பாய்த்தாய் ஒன்றிடையிட்டு நின்ற மேலதற்கு ஒரு புறனடையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதல் சார்பெனத்துமாய ஆவியும் ஒற்றும் மேற்கூறிய அளவிறந்து மிக்கொலித்தலையும்பொருளும், இசை விளி பண்டமாற்றுமுதலியவற்றின்கண். எ - று.

ஆதியென்றமையான், நாவல் குறிப்பிசை முறையிடு புலம்பலுங்கொள்க. இசையின் அளவிறந்திசைக்குங்கால ஆவி பன்னிரண்டுமாத்திரை ஈறாகவும் ஒற்றுப் பதினொருமாத்திரையீறாகவும் இசைக்குமென்றார், இசைநூலார். இது பிறநூன்முடிந்தது தானுடன்படுதலென்னுமுத்தி; ஏனையவற்றின் அளபிறந்திசைக்குங்கால் உலகநடை பிறழாதிசைப்பதே வரையறையென்க.

நாவலென்பது வெற்றிபோர் [1]தெழிக்கும் பகட்டினங்களைத் துரப்பதோர் சொல்; * "காவ லுழவர் கடுங்களத்துப் போரேறி, நாவலோஓ வென்றிசைக்கு நாளோதை - மாவலன், கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே, நல்யானைக் கோக்கிள்ளி நாடு" என்பதனானறிக. [2]"கஃஃஃறென்னுங் கல்லதரத்தம்", "சுஃஃஃறென்னுந் தண்டோட்டுப் பெண்ணை" என்பன குறிப்பிசை; ஏனையபொருள் தோன்றிக்கிடத்தலின், அளபிறந்திசைத்தல் வந்தவழிக் காண்க. (சசு)

## எ.—முதனிலை.

கoஉ. பன்னீ ருயிருங் கசதந பமவய
ஞஙவீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்.

எ - ன், சிறந்தமுறையானே மொழிக்குமுதலாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பன்னிரண்டுயிரும் உயிரூர்ந்த இப்பத்துமெய்யும் மொழிக்கு முதலாம். எ - று.

(உ - ம்.) அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒதி, ஓதி, ஔவியம் எ - ம், களி, சவடி, தளிர், நலம், படை, மலை, [3]வளம், யவனர், ஞமலி, அங்ஙனம் எ - ம் வரும். பிறவுமன்ன.

உயிர்போல் தனித்து முதலாந்தன்மையவல்லவாதலின் உயிர்மெய்யென்றார். இஃது இன்னதல்லதிதுவென மொழிதலென்னுமுத்தி. (சஎ)

கoஙு. உஊ ஒஓ வலவொடு வம்முதல்.

எ - ன், பொதுவிதியுட் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குமல்லாத எட்டுயிரொடு வகரம் மொழிக்குமுதலாம். எ - று.

(உ - ம்.) வளி, வாளி, விளி, வீளி, வெளி, வேளை, வைகல், வௌவு, எனவரும். (சஅ)

கoச. அஆ உஊ ஓஔ யம்முதல்.

எ - ன், இதுவுமது.

---

* முத்தொள்ளாயிரம்.

(பி - ம்.) 1 'தெளிக்கும்' 2 'கல்லென்னுங்' 3 'வளம்'

(இ - ள்.) இவ்வாறுயிரோடும் யகரம் மொழிக்குமுதலாம். எ - று.

(உ - ம்.) யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம் எனவரும். மேலை ஒடுவை வருவித்துக்கொள்க. (சசு)

கOரு. அஆ எஒவ்வொ டாகு ஞம்முதல்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இந்நாலுயிரோடும் ஞகரம் மொழிக்குமுதலாகும். எ - று.

(உ - ம்.) ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று எனவரும். (ருO)

கOசு. சுட்டியா வெகர வினாவழி யவ்வை
ஒட்டி ஙவ்வு முதலா கும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மூன்றுசுட்டும் யாவினாவும் எகரவினாவுமாய இடைச்சொற்களின்பின் அகரத்தையொட்டி ஙவ்வும் மொழிக்குமுதலாம். எ - று.

(உ - ம்.) அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் எனவரும்.

இவற்றை அங்கு, எங்கு என்றாற்போல ஒருமொழிகளென்றால் என்னையெனின், அஞ்ஞான்று, எஞ்ஞான்று என்பனபோலப் பிளவுபட்டு இடையே மெல்லொற்றுமிக்குவருதலின், தொடர்மொழிகளேயாமென்க. ஙனமென்பது இடத்தினையும் தன்மையினையுமுணர்த்தும் பலபொருளொருசொல்லாய் வரினும் தனித்துவருந்தன்மையதன்றி முடவன் கோலூன்றிவந்தாற்போலச் சுட்டு வினாவாகிய இடைச்சொற்களை முன்னிட்டுவருதலான் வழியென்றும் ஏனையமெய்கள்போல முதலாகாமையின் அவ்வோடென்னாது ஒட்டியென்றும் ஒருவாற்றான் முதலாதலின் இழிவுசிறப்பாக ஙவ்வுமென்றுங்கூறினர். இங்ஙனங்கூறலான் ஙகரம் மொழிக்குமுதலாகாதென்பார்க்கு உடன்படலும் மறுத்தலுமாய்ப் பிறர்தம்மதமேற்கொண்டுகளைவேயென்னுமதம்படக்கூறினரென்றுணர்க.

இனி முதலாமென்ற பத்துயிர்மெய்யுள் வகரமுதலியநான்கினையும் விதந்துகூறவே ஒழிந்தஆறுமெய்யும் பன்னிரண்டுயிரோடு முதலாமென்பது அருத்தாபத்தியாற் பெற்றாம். (ருக)

## அ. ஈற்று நிலை.

கOஎ. ஆவி ஞணநம னயரல வழளமெய்
சாயு முகர நாலாறு மீறே.

எ - ன், நிறுத்தமுறையானே மொழிக்கீறுமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தனித்தும் ஒற்றொடும்வரும் ஆவிமுதலாக இங்ஙனங்கூறிய இருபத்துநான்கெழுத்தும் மொழிக்கீறாம். எ - று.

(உ - ம்.) ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எ - ம், சுட்டும் வினாவும் உயிர்மெய்வருபடியுமாய வோரெழுத்தொருமொழியாம்இடைச்சொல்லாகிய அ, இ, உ, எ, ஒ எ - ம், விள, பலா, கரி, குரீ, கடு, மரூ, சே, கை, கோ எ - ம், உரிஞ், மண்,

பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வாள், அஃகு எ - ம் வரும். காட்டாதொழிந்தன வருஞ்சூத்திரத்தாற்காண்க. குற்றுகரமும் உயிராய் அடங்குமேனும் புணர்ச்சிவேறுபாடுதோன்ற வேறெடுத்தோதினரென்க. (ருஉ)

கoஅ. குற்றுயி ரளபி னீறா மெகரம்
மெய்யொ டேலா தொந்நவ் வொடாமௌ
ககர வகரமொ டாகு மென்ப.

எ - ன், குற்றுயிர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எகரத்திற்கு எய்தியது ஒருமருங்குவிலக்கலும் ஒகரத்திற்கும் ஔகாரத்திற்குமெய்தியவற்றுட் சிறப்புவிதியுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) குற்றுயிர் அளபெடையின்கண் வரிவடிவின் அறிகுறியாய்த் தனித்து ஈறாம்; எகரம் மெய்யோடீறாகா ; ஒகரம் நகரமொன்றுடனீறாம்; ஔகாரம் ககரவகரங்களிரண்டுடனுமீறாமென்று சொல்லுவர்புலவர். எ - று.

(உ - ம்.) "ஆஅ வளிய வலவன்" எ - ம், நொ எ - ம், கௌ, வௌ எ - ம் வரும்.

நெடில் அளபெடுப்புழி வரிவடிவில் அறிகுறியாய்வருங் குற்றுயிர் நெடிலொடுதொடர்ந்து உடம்படுமெய்யுடன் ஈறாந்தன்மையதன்றித் தனித்து நிற்றலிற் குற்றுயிரளபினீறாமென்றார். தானே ஈறாதலன்றிக் குற்றுயிர் அளபினுமீறாமென உம்மைகொடாதொழிந்தார் ; உயிர்கழிந்தவுடம்பை, * "படுமகன் கிடக்கை காணூஉ" என்றாற்போல. அறிகுறிமாத்திரையாய்நின்றதனை இங்ஙனம் குற்றுயிரென்றதன்றி அஃது ஓரெழுத்தன்றாகலின், எகர ஒகர ஔகாரங்களை விதந்தோதவே ஏனையுயிர்கள் தமக்கேற்றமெய்களோடு ஈறாமென்பது பெற்றாம்.

முதலும் சார்புமாய் வகுத்து விரித்துக்கொண்ட எல்லாவெழுத்தும் உயிரும் மெய்யும் ஆய்தமுமாயடங்குதலின், முதலும் ஈறுமாகாத ஆய்தத்தையொழித்து ஒழிந்த உயிருமெய்யுமாய இரண்டினையும் உயிர்முதல், மெய்ம்முதல், உயிரீறு, மெய்யீறென வகுத்துக்கொண்டார், மேல்வரும் புணர்ச்சிவிதி அடங்குதற்பொருட்டெனக்கொள்க. (ருங)

கoகூ. நின்ற நெறியே யுயிர்மெய் முதலீறே.

எ - ன், எழுத்தினது முதலும் ஈறுமாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிர்மெய்யினதுமுதல் யாது, அதனீறுயாதெனின், ஒற்றுமுன் உயிர்பின்னுமாய் ஒலித்துநின்றநெறியே மெய் அதன்முதலாம், உயிர் அதனீறாம். எ - று.

எனவே உயிரும் ஒற்றும் ஆய்தமுதலியஒன்பதுசார்பெழுத்துக்களும் ஓரெழுத்தாதலின், அவற்றிற்கு முதலுமீறும் அவையேயாமென்பது அருத்தாபத்தியாற்கூறினார். இஃது எஞ்சிய 1சொல்லினெய்தக்கூறலென்னுமுத்தி. இத்தொடக்கத்தவல்லன சொல்லின்முடிவினப் பொருள்முடித்தலென்னுமுத்தி.

முன்னர் மொழிக்குமுதலீறென் !வற்றுள்ளும் பின்னர்இடைநிலை போலிபதம் பணர்ப்பென்பவற்றுள்ளும் உயிர்மெய்யைப்பிரித்துத் தனிமெய்யும்

---

* புறநா. உஎக.

(பி - ம்.) 1 'மொழியின்'

தனியுயிரும்போலவைத்து இலக்கணங்கூறலின், மொழிக்கு முதலும் ஈறுங் கூறுதலன்றி எழுத்திற்கு முதலு மீறுங் கூறினரென்றுணர்க. இச்சூத்திரம் சிங்கநோக்கம்; அற்றன்றி ஆசிரியர் முன்னின்ற மொழிமுதலீறுரைக்குஞ் சூத்திரங்களையே தொடர்ந்துரைக்கவெனப் படுமெனர். பின், "நம்முன் சவ்வாம்" என்றும், "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும்" என்றும், உயிர்மெய்யின் உயிரையும் மெய்யையும் வேறு பிரித்தோதுவது இலக்கணமன்றாய் முடியுமாதலின், அது பொருந்தாதென்க.

எண்ணதிகாரத்துள் உயிர்மெய்யை ஓரெழுத்தாக வெண்ணினர்; ஈண்டு இரண்டாகவைத்து இலக்கணங் கூறுவதென்னையெனின், அப்பொடுசெய்தவப் பேபோல உயிரொடு புணர்த்தியமெய் தன்னளவுதோன்றாது ஒன்றாய்நிற்றலின் ஒன்றாயும் ஒற்றுமுன்னும் உயிர்பின்னுமாய் ஒலித்து நின்றநெறியான் இரண்டாய் நிற்றலினென்றுணர்க. இவ்வாற்றான் உயிர்மெய்யென்னுஞ்சொல் மாத்திரைவகையான் உம்மைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகவும், ஒலிவகையான் உம்மைத்தொகையாகவுங் கொள்ளப்படும். (ருச)

## ௯. இடைநிலை மெய்ம்மயக்கம்.

௧௧௦. கசதப வொழித்த வீரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை
மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.

எ - ன், நிறுத்தமுறையானே மொழிக்கு இடைநிலையாமாறுணர்த்துங்கால் உயிரொடுயிர்மயங்கலும் மெய்யுடன்மெய்மயங்கலும் இவ்விரண்டும் மாறிமயங்கலுமென மூன்றாக வகுக்கப்படும்; இவற்றுள் உயிரொடுயிர்க்கு மயங்குந்தன்மை இன்மையின் அதனை யொழித்து ஏனையிரண்டினையுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மெய்பதினெட்டனுள், கசதபவென்னுநான்கையுமொழித்த பதினான்குமெய்யும் பிறமெய்களோடு கூடுங்கூட்டம் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாம்; ரகாரழகாரமென்னுமிரண்டினையுமொழித்து ஒழிந்த பதினாறுமெய்யும் தம்மொடுகூடுங்கூட்டம் உடனிலைமெய்ம்மயக்கமாம்; இவ்விரண்டு பகுதிமயக்கமும் மொழிக்கு இடையேவரும்; இவ்வாறு மெய்யுடன் மெய்மயங்குதலன்றி உயிருடன்மெய்யும் மெய்யுடனுயிரும் மாறி உயிர்மெய் மயங்குமயக்கத்திற்கு வரையறையின்று; வேண்டியவாறே மயங்கும். எ - று.

கூட்டமெனினும் மயக்கமெனினுமொக்கும். உடனிலையென்றதனாற் பிறமெய்யென்பது பெற்றாம். மொழியென்றது ஒருமொழிதொடர்மொழியென்னுமிரண்டினையும். உயிர்மெய்மயங்குதற்கு இடம் விதந்து கூறாது பொதுப்படக்கூறினர், மொழியிலும் உயிர்மெய்யென்னும் ஓரெழுத்திலும் வருதலின்.

இச்சூத்திரத்தான் மெய்யுடன் மெய்மயங்குங்கால் கசதபவென்னுநான்கும் தம்மொடுதாமே மயங்குமெனவும், ரழவென்னுமிரண்டும் தம்மொடுபிறவே மயங்குமெனவும், ஒழிந்த பன்னிரண்டுமெய்யும் தம்மொடுதாமும் பிறவுமயங்குமெனவும் பெற்றாம்.

உயிருமெய்யும்மயங்குதற்குஉதாரணம்: அல், வில் எ-ம், கா எ-ம் மொழி முதற்கண் மயங்கின. ச என எழுத்தின்கண்மயங்கின. மெய்யுடன் மெய் மயங்குதற்கு உதாரணம் மேல்வரும் சிறப்புச் சூத்திரத்திற்காண்க.

இவ்விடை நிலையை ஒருமொழி தொடர்மொழியிரண்டினுங்கொள்ளாது ஒருமொழிக்கேயெனக் கொள்வாருமுளர். எவ்விடத்துவரினும் இரண்டெழுத்து இணங்கிப் பொருந்தம்பொருத்துவாயை இடைநிலையென்றோதலானும், இணங்காதனவரின் விசாரப்படுதலானும் அது நூற்கருத்தன்றென்க.

இனி, உயிர்மெய்மயக்களவின்றேயென்பதற்கு உயிர்மெய்முன் உயிர்மெய் மயங்குதல் வரையறையின்றெனப் பொருள்கூறுவாருமுளர்; இங்ஙனம் உயிர்மெய்யை இரண்டெழுத்தாகப்பிரித்து மயக்கவிதிகூறுவார், அதனையே ஒன்றாகவைத்து மயக்கவிதிகூறாராதலானும் கூறினும் இடைநிலைமயக்கமுழுவதும் இச்சூத்திரத்து அடங்காமையானும் அதுபொருந்தாதென்க. (ருரு)

## மெய்ம்மயக்கம்.

ககக. ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.

எ - ன், வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துள் விதந்து சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஙகரமுன்னர்க் ககரமும் வகரமுன்னர் யகரமுமயங்கும் எ - று.

(உ - ம்.) கங்கன், தெவ்யாது எனவரும். (ருசு)

ககஉ. ஞநமுன் றம்மினம் யகரமொ டாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டுமெய்ம்முன்னரும் தமக்கினமாகிய சகரதகரங்களும் யகரமுமயங்கும். எ - று.

(உ - ம்.) கஞ்சன், உரிஞ்யாது; கந்தன், பொருந்யாது எனவரும்.(ருஎ)

ககரு. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்ம்முன்னரும் கசபவென்னு மூன்றுமெய்யும் இணங்கிமயங்கும். எ - று.

(உ - ம்.) கட்கம், கட்சி, நுட்பம்; கற்க, கற்சிறார், கற்ப எனவரும். ()

ககச. ணனமுன் னினங்கச ஞபமய வவ்வரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்ம்முன்னரும் தமக்கினமாகிய டறக்களும் கசஞபமயவ என்னுமேழுமெய்யும் மயங்கும். எ - று.

(உ - ம்.) விண்டு, வெண்கலம், வெண்சோறு,வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிது எ - ம், புன்றலை, புன்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர்,புன்மலர்,பொன்யாது, பொன்வலிது எ-ம் வரும். (ருக)

ககரு. மம்முன் பயவ மயங்கு மென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மகரமெய்முன்னர்ப் பகர யகர வகரங்கள் மயங்குமென்று சொல்லுவர் புலவர். எ - று.

(உ - ம்.) கம்பன், கலம்யாது, கலம்வலிது எனவரும். (கூ0)

கககூ. யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இம்மூன்று மெய்ம்முன்னரும் மொழிமுதற்கு விதந்து கொண்ட பத்துமெய்யும் மயங்கும். எ - று.

(உ - ம்.) வேய், வேர், வீழ்: கடிது, சிறிது, தீது, பெரிது, நீண்டது, மாண்டது, ஞான்றது, யாது, வலிது எ-ம், வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங் கிணறு எ - ம் வரும்.

சுருங்கச்சொல்லலென்னும் வனப்புவகையான் மொழிமுதன்மெய்யெனக் கூறலின், யகரத்தின்முன் யகரமயங்குமுடனிலை ஈண்டுக்கொள்ளாதொழிக. ()

கக௭. லளமுன் கசப வயவொன் றும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இவ்விரண்டு மெய்ம்முன்னரும், கசபவயவென்னும் ஐந்து மெய்யும் மயங்கும். எ - று.

(உ - ம்.) வேல், வாள் : கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது என வரும். (கூஉ)

## உடனிலைமயக்கம்.

ககஅ. ரழவல் லனதம்முற் றுமுட னிலையும்.

எ - ன், உடனிலைமெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ரகாரழகாரமல்லனவாகிய வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துட் கூறிய பன்னிரண்டுமெய்யும் உடனிலைக்கேயுரிய க ச த ப வென்னுநான்கும் தம்மிற்றும் உடனின்றுமயங்கும். எ - று.

(உ - ம்.) அங்ஙனம், அவ்வை, அஞ்ஞானம், அந்நீர், அட்டு, அற்றம், அன்னை, அண்ணம், அம்மை, அய்யம், அல்லி, அள்ளல் எ - ம், அக்கு, அச்சு, அத்து, அப்பு எ-ம் வரும். (கூந)

கககூ. யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றும்ரழத் தனிக்குறி லணையா.

எ - ன், தனிமெய்யுடன் தனிமெய்யாயும் மயங்குவன இனையவென்பதூஉம், மொழிக்குஉறுப்பாக மயங்காதன இனையவென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) யரழவென்னு மூன்றொற்றும், இவற்றின்முன் மயங்குமென விதித்த பத்தொற்றுள் இங்ஙனங்கூறிய எட்டொற்றும் தனிமெய்யும் உயிர்ந்தமெய்யுமாய் மயங்குவனவன்றி ஈரொற்றுயுமயங்குவனவாம்; ரகாரழகார வொற்றும் தனிக்குறிலும் மயங்குந்தன்மையவாயினும் மொழிக்குறுப்பாக வருவதும் நிற்பதுமாய் மயங்கா. எ - று.

ஈரொற்றுமாமென்னும் உம்மையும் மொழிக்குஉறுப்பாகவென்னுஞ்சொற் களும் எஞ்சிநின்றன.

(உ - ம்.) கெய்க்குறை, வேர்க்குறை, வீழ்க்குறை ; சிறை, தலை, புறம் எ - ம், வேய்க்குழல், ஆர்ங்கோடு, டாழ்ங்கிணறு ; காய்ந்தனம், நேர்ந்தனம், வாழ்ந்தனம் எ-ம் வரும்.

ஏனைய வந்தவழிக்காண்க.

அணையாவெனற ஆகாதனவற்றிற்கு உதாரணங்காட்டலாகாமையுணர்க.()

கஉ௦. லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றுஞ் செய்யு ளுள்ளே.

எ - ன், செய்யுட்குரியவாய் ஈரொற்றுடனிற்பன இனையவென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) லகார ளகார வொற்றுத்திரிந்த னகார ணகாரமுன்வரும் மகரவொற்று முன்னர்க்கூறியவாறே குறுகி அவற்றுடன் ஈரொற்றுடனிலையாம், செய்யுளகத்து. எ - று.

(உ - ம்.) *"திசையறி மீகாமனும் போன்ம்" எ - ம், †"மயிலியன் மாதர் மருண்ம்" எ - ம் வரும்.

மகாரநைந்தென அனுவதித்தார், மகரங்குறுகுதற்குத்தொடரும் னகர ணகரங்கள் லகரளகரந்திரிந்தனவென்பதூஉம், அக்குறுக்கம் செய்யுட்கண்ண தென்பதூஉம் உய்த்துணர்தற்கென்க. (கரு)

கஉக. தம்பெயர் மொழியின் முதலு மயக்கமும்
இம்முறை மாறியு மியலு மென்ப.

எ - ன், மொழிமுதல் ஈறுஇடைநிலைகட்கு ஆவதொரு புறனடையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கள் தம்பெயர்களை மொழிந்து நிலைமொழிவருமொழியாகப் புணர்க்குமிடத்து எல்லாமொழிமுதற்கும் இங்ஙனம்விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்தும் முதலாம், மயக்கத்திற்கு இங்ஙனம்விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்தும் மயங்குமென்று சொல்லுவர் புலவர். எ - று.

இங்ஙனம் எல்லாவெழுத்தும் தனித்தனி அதற்கதுவே முதலாகவருமெனவே ஈற்றிற்குவிதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்தும் தனித்தனி அதற்கதுவே ஈறாகவருமெனச் சொல்லாதே அருத்தாபத்தியான் அமைதலின் ஈறுமென மிகைபடக் கூறுதொழிந்தார்.

(உ - ம்.) ‡"அவற்றுள், லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்" என்புழி லகரம் முதலாகியும் கூனிறுதி ளகரவொற்றோடு மயங்கியும்நின்றது. கெப்பெரிது என்புழி எகரம் மெய்யோடீறாய்நின்றது. பிறவும் வரையறையின்றி வருதல்காண்க.

---

* பரி. க௦: 55.

† நன். சூ. கககூ - மயிலை. மேற்.

‡ தொல். நூன்மரபு, உச.

ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் வருவாய்கூறியவழி மயக்கவிதியமைந்து கிடந்தமையானும் தன்பெயர் மொழிய வாராமையானும் கூறுதொழிந்தார். ()

## கo. போலி.

கஉஉ. மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே.

எ - ன், நிறுத்தமுறையானே போலியாமாறு உணர்த்துவான்றொடங்கி மொழியிறுதிப் போலியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பால்பகாஅஃறிணைப்பெயர்களினிடத்து இறுதிமகரம் னகரத்தோடு ஒத்து நடப்பனவுளவாம். எ - று.

மகரவிறுதியென்றதனாற் பால்பகாவஃறிணைப்பெயரென்பது பெற்றாம். மகரம் னகரத்தோடொத்தலாவது, பெயரிறுதிக்கண் மகரம்நின்றநிலைக்களத்து னகரநிற்பினும் வேற்றுமையின்றி யொத்தல்.

(உ-ம்.) *"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து, நல்விருந் தோம்புவா னில்": இதனுள், அகம்-அகன், முகம்-முகன் எ-ம், தலம்-தலன், நிலம்-நிலன், கலம் - கலன், நலம் - நலன், வலம் - வலன் எ - ம் வருதல்காண்க. பிறவுமன்ன.

உறழாநடப்பவுளவென்னுஞ் சொல்லாற்றலான் உறழாதன பெரும்பாலவென்க. அவை: வட்டம், குட்டம், மாடம், கூடமுதலாயின. பால்பகாவஃறிணைப்பெயரிடத்து இயல்பாய மகரவிறுதிநிலையில் னகரம் போலியாய்வருமெனவே அகன், முகன்முதலிய சொற்களைப் பால்பகுத்த ஆடூஉவறிசொல்லெனக் கொள்ளற்கவென்பதூஉம், எகின், பயின், குயின், வயின் முதலிய னகரவீற்றுப்பெயர்க்கு இவ்வையப்பாடில்லை யென்பதூஉம் பெற்றாம்.

இனி, இவ்விறுதிப்போலியை முற்கூறியதனால், சுரும்பு-சுரும்பர், அரும்பு-அரும்பர், சாம்பல்-சாம்பர், பந்தல்-பந்தர் முதலியனவுங் கொள்க. (கூஎ)

கஉங. அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்.

எ - ன், மொழிமுதற்போலியும் மொழியிடைப்போலியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மொழிமுதலினும் இடையினும் அகரஐகாரங்கள் வேற்றுமையின்றி ஒத்து 1நடப்பனவாம், சகர ஞகர யகரங்கட்கு முன்னர்வருமாயின். எ-று.

ஈண்டு முன்னென்றது, காலமுன்னெனக்கொள்க.

(உ - ம்.) பசல்-பைசல், மஞ்சு-மைஞ்சு, மயல்-மையல் எ-ம், அமச்சு-அமைச்சு, இலஞ்சி-இலைஞ்சி, அரயர்-அரையர் எ - ம் வரும். பிறவுமன்ன. ()

## மொழியிடைப்போலி.

கஉச. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழு மென்மரு முளரே.

எ - ன், இதுவும் மொழியிடைப்போலியுணர்த்துதனுதலிற்று.

---

* திருக். அச. (பி - ம்.) 1 'நடப்பனவுள'

(இ - ள்.) மொழியிடைக்கட்சிலவிடத்து ஐகாரத்தின்பின்னும் யகரவொற்றின்பின்னும் இயல்பாய்வரும் நகரத்தோடு ஞகரம் உறழுமென்றுசொல்வாருமுளர். எ - று.

இப்போலி அருகிவருதலிற் சில்வழியென்றும் எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததன்றாகலின் என்மருமென்றுங்கூறினார்.

(உ - ம்.) * செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன், மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க, நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான், கைஞ்ஞின்ற வாடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே'' எ - ம், ஐஞ்ஞூறு எ - ம் வரும்.

இச்சூத்திரம் பிறன்கோட்கூறலென்னுமுத்தி.

''மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே'' - ''மண்ஞாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே'' எ-ம், ''பொன்யாத்த [1]தார்புரவிபரிக்குமே''-''பொன்ஞாத்ததார் புரவிபரிக்குமே'' எ - ம் வருமொழி வினைக்குமுன்னர் யாகின்ற நிலைகளத்து ஞாநிற்பினுமொக்கும்போலிக்கு ஆசிரியர் தொல்காப்பியர் † ''ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும், வினையோ ரனைய வென்மனார் புலவர்'' எனச்சூத்திரஞ்செய்தவாறு இவ்வாசிரியரும் சூத்திரஞ்செய்யாதொழிதல் இறந்ததுவிலக்கலென்னு முத்தி. பிறவுமன்ன.

இம்மூன்று சூத்திரத்தானுங்கூறிய போலிகளை இடைநிலை மயக்கத்தின்பாற்படுத்திப் பொருள்கூறுவாருமுளர். இங்ஙனங்கூறிய எழுத்துக்கள் மொழிக்குறுப்பாகி ஒன்றுநின்ற நிலைக்களத்து மற்றொன்று அதுபோல மொழிநிரப்ப நிற்பதன்றி ஒன்றோடொன்றுமயங்கி இரண்டெழுத்தும் உடனிற்பதின்மையானும் முதலீறிடைநிலைகட்குப் புறனடையுங்கூறிக் குறைவறுத்தமையானும் உறழாநடப்பனவென்றும் ஒக்குமென்றும் உறழுமென்றும் உவமவுருபு கொடுத்து இம்மூன்று சூத்திரமுங்கூறுதலானும் அதுபொருந்தாதென்க. (கூகூ)

## எழுத்துப்போலி.

கஉரு. அம்மு னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன.

எ - ன், எழுத்துப்போலியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அகரத்தின்முன்னர் இகரமும் யகரவொற்றும் வருமாயின், ஐகாரம் போன்றொலிக்கும்; அகரத்தோடு உகரமும் வகரவொற்றும் வருமாயின், ஔகாரம் போன்றொலிக்கும். எ - று.

உயிரோடுயிர்க்கு மயக்கமின்மையின் இங்ஙனங்கூறிய குற்றுயிர்களை வலிந்து மயக்கிக்கூறின், [2]ஐகார ஔகாரம்போல இசைத்தலானும் குற்றொற்றுக்கள் ஒன்றரைமாத்திரையவாதலின் இரண்டுமாத்திரையவாகிய ஐகார ஔகாரங்களோடு ஒவ்வாமையின ஒலிவகையான் மயக்கிக்கூறின் அவை ஒத்திசைத்தலானும் அவற்றுள்ளும் வகரம் பிறப்புவேறுபாட்டான் ஒலியும் ஒருபுடையொத்தலானும் எய்தினென்றார்.

* தேவாரம், கோயில், திருநா. திருவிருத்தம், ''பாளையுடை'', ரு.
† தொல். தொகை, சூ. ச.
(பி ம்.) [1] 'தார்ப்புரவி' [2] 'ஐகாரம்போலிசைத்தலானும்'

(உ - ம்.) அஇ-ஐ, அய்-ஐ, கஇ-கை, கய்-கை, அஉ-ஔ, அவ்-ஔ, கஉ - கௌ, கவ்-கௌ எ - ம், *"கய்வேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும் எ - ம், †"அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான், கேடு நினைக்கப் படும்" எ - ம் வரும். இச்செய்யுட்கண் தொடை நோக்கி ஐகார ஔகாரநின்ற நிலைக்களத்துப் போலிவந்தவாறு காண்க. (எ௦)

## எழுத்தின் சாரியை.

கஉசு. மெய்க ளகரமு நெட்டுயிர் காரமும்
ஐஔக் கானு மிருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற.

எ - ன், மேல் எழுத்திலக்கணங்கூறிய முகத்தாற் போந்த எழுத்தின் சாரியைகளைத் தொகுத்து இனமடைத்தனுதலிற்று.

(இ - ள்.) மெய்கள் அகரச்சாரியையும் நெட்டுயிர்கள் காரச்சாரியையும் அவற்றுள் ஐகார ஔகாரங்கள் காரச்சாரியையுடனே கான்சாரியையும் உயிர்க் குறிலும் உயிர்மெய்க்குறிலும் காரம் கானென்னும் இவ்விரண்டுடனே கரச் சாரியையும் பெறும். எ - று.

மெய்களைமுற்கூறினார், அவற்றிற்கு அகரச்சாரியை இன்றியமையாமையின்.மெய்களவ்வுமென்னாது அகரமுமென்றார், அங்ஙனம் கரம் காரம் கான்கள் வரிற் சாரியை அகரத்தினது சாரியையென்றுகோடற்கு. ஆஞ்சாரியையென்றார், காரமுதலியசாரியைகளை ஏற்றபெற்றி கோடற்கு.

(உ - ம்.) க ங எ - ம், ஆகாரம் ஐகாரம் ஔகாரம் எ - ம், ஐகான் ஔகான் எ - ம், அகாரம், அஃகான், அகரம்; மகாரம், மஃகான், மகரம் எ-ம் வரும். பிறவுமன்ன.

பிறவென்றமையாற் குறிலொடு கான்புணருங்கால் இடையே ஆய்தத் தோற்றமும் வழங்கும். பிறசாரியைகளுங்கொள்க. உயிர்மெய் நெடிலும் ஆய் தமுங்கூறாதொழிந்தார், உயிர்மெய் நெடில் இங்ஙனங்கூறிய மூன்றுசாரியை யும் ஏலாமையானும் ஆய்தம் பிறவழி வாராமையின் மொழியிடைப்படுத்து அம் மொழியிறுதிக்கட் பிறசாரியைதந்து உயிர்வருக்கத்து இறுதிக்கண்ணே வழங் குதலானுமென்க.

விகற்பத்தின் முடித்தலென்னு முத்தியான் மேல் விரிந்து முடிந்து கிடந் தனவற்றைப் புலப்படவேண்டி ஈண்டுத் தொகுத்து முடித்தலான் இச்சூத் திரம் முடிந்தது முடித்தலென்னுமுத்தி. (எக)

## புறனடை.

கஉஎ. மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே.

எ - ன், இவ்வியலுக்கு ஆவதொரு புறனடையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்வெழுத்துக்கள் பதமாயினும் அப்பதம் தம்மொடும் உரு பொடும் புணரினும் அவற்றாற் பிறழாது முன்னர்க்கூறிய அப்பத்திலக்க ணத்தையும் உடையவாம். எ - று.

எழுத்துச் சுண்ணத்தின் கண் அரிசனமுதலிய போலாது மாலையின்கண் மலர்போல அவற்றில் நிறதலின் முன்னனைத் தென்றார். எழுத்தென்பது சாதி யொருமையாதலின், அனைத்தென்னும் ஒருமையொடு முடிந்தது. முன்னனைத் தாதல் பதவியல் முதலிய நான்கியலுள்ளுங் காண்க. (எஉ)

எழுத்தியல் முற்றிற்று.

---

* திருக். எஎசு. † திருக். கசுசு.

இரண்டாவது

# பதவியல்.

---

கஉஅ. எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப.

எ - ன், நிறுத்தமுறையானே பதத்தினது இலக்கணமுணர்த்துவான் தொடங்கி எழுத்தாற் பதமாதலும் அஃது இத்துணையவென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கள்தாமே ஒவ்வொன்று தனித்தும் இரண்டு முதலாகத் தொடர்ந்தும் பிறபொருளைத் தருமாயின் அது பதமாம்; அப்பதம் பகாப்பதமெனவும் பகுபதமெனவும் இரண்டு பகுதியவாகி நடக்குமென்று சொல்லுவர் புலவர். எ - று.

எழுத்தானாய பதம் அரிசனமுதலியவற்றாற் சமைத்த சுண்ணம் போலாது மலராற்சமைத்த மாலைபோல்நிற்றலின் எழுத்தேயென்றும், ஓரெழுத்தேனும் பிறபொருள்தருதலிற் பதமாமென்பார் தனித்தென்றும், ஒன்று இரண்டு பலவென்பன வடநூல் வழக்கு ஒன்றல்லனவெல்லாம் பலவென்பது தமிழ் நடையாதலின், வடநூல் வழக்குப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியர் *"ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி, யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட, மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" என்றார்க்கு இரண்டெழுத்துத் தொடர்ந்தன வல்லவெனின் அது மொழியுமன்றென்பார் தனிநிலை யொழிந்தவற்றைத் தொடர்ந்தென்றும், இறிஞி மிறிஞி யெனிற் றொடருமேனும் தன்னை யுணர்த்துமன்றிப் பிறபொருள்தாராமையிற் பதமாகாதென்பார் பொருடரினென்றும், † "தன்னை யுணர்த்தி னெழுத்தாம் பிறபொருளைச், சுட்டுதற் கண்ணேயாஞ் சொல்" என்பவாகலிற் பொருளென்றது பிறபொருளென்பார் உணர்த்தினென்னுது தரினென்றும், அணுவென்னும் ஒலிநுட்பத்தான் எழுத்தானாற்போல எழுத்தென்னுமொலிநுட்பத்தான் மொழியாமென்பார் பதமாமென்றும், இப்பதவியலுக்கு மேற்கோள் ஆரியமேயென்பார் மொழியென்னுது பதமென்றுங் கூறினார்.

இச்சூத்திரத்துள் தொடர்ந்துமென்றது, பிறர்நூற் குற்றங்காட்டலென்னு மதம். (க)

கஉகூ. உயிர்மவி லாறுந் தபநவி லைந்தும்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின.

---

* தொல். மொழி. சூ. கஉ.

† அவிநயப்புறநடை ; நன். சூ. கஉஎ - மயிலை. மேற்.

எ - ன், மேல் எழுத்துத் தனித்துந் தொடர்ந்தும் ஒரு மொழியாமென்றார், அவற்றுள் ஓரெழுத்தொருமொழி இவை என்பதூஉம், இத்துணைய வென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிர் வருக்கத்தும் மவ்வருக்கத்தும் அவ்வாறும், தவ்வருக்கத்தும் பவ்வருக்கத்தும் நவ்வருக்கத்தும் ஐவைந்தும், கவ்வருக்கத்தும் வவ்வருக்கத்தும் சவ்வருக்கத்தும் நந்நான்கும், யவ்வருக்கத்து ஒன்றும் ஆகும் நெட்டெழுத்தாகிய மொழி நாற்பதும், நொவ்வும் துவ்வுமாகும் குற்றெழுத்தாகிய மொழி இரண்டுடனே ஓரெழுத்தாகிய மொழி இந்நாற்பத்திரண்டும் சிறப்பினவாம். எ - று.

(உ - ம்.) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ எ - ம், மா மீ மூ மே மை மோ எ - ம், தா தீ தூ தே தை எ - ம், பா பூ பே பை போ எ - ம், நா நீ நே நை நோ எ - ம், கா கூ கை கோ எ - ம், வா வீ வை வௌ எ - ம், சா சீ சே சோ எ - ம், யா எ - ம், நொ து எ - ம் வரும்.

இவற்றுள், ஊ - இறைச்சி ; ஓ-மதகுநீர் தாங்கும் பலகை ; பே-நுரை; நே-அன்பு ; சோ-அரண் ; நொ து என்னும் குறிலிரண்டும் துன்பி பொசி என்னும் ஏவல்.

இவை சிறப்பினவெனவே வகரவீற்றுச் சுட்டுப்பெயர்ப்பொருளை ஒப்புமையான் உணர்த்திநிற்றலான் ஔவென்னும் ஓரெழுத்தொருமொழியும் சுட்டு வினா உவமைப்பொருளைத் தரும் இடைச்சொல்லாதலாற் குற்றுயிரைந் தாகிய ஓரெழுத்தொருமொழிகளும் கௌவென்னும் உயிர்மெய்யாகிய ஓரெழுத்தொருமொழியும் இவைபோல்வன பிறவும் சிறப்பில்லனவெனக் கொள்க. (உ)

கநூ0. பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்
எழுத்தீ றாகத் தொடரு மென்ப.

எ - ன், தொடரெழுத்தொரு மொழியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பகாப்பதம் இரண்டெழுத்துமுதல் ஏழெழுத்தீறாகவும், பகுபதம் இரண்டெழுத்துமுதல் ஒன்பதெழுத் தீறாகவுந் தொடருமென்று சொல்லுவர் புலவர். எ - று.

(உ - ம்.) அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திரட்டாதி எ - ம், கூனி, கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன், அரங்கத்தான், உத்திராடத்தான், உத்திரட்டாதியான் எ - ம் வரும். எழுந்திருக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார், நடத்துவிப்பிக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார்கள், நடத்துவிப்பிக்கின்றார்கள், நடத்துவிப்பிக்கின்றவர்களெனப் பகுதிமுதலிய உறுப்பு வேறுபட்டுவருவனவற்றிற்கு இவ்வரையறையில்லையென்க. (ங)

கநூக. பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்.

எ - ன், மேற் பதம் பகாப்பதம் பகுபதமென இரண்டுபகுதியவாய் நடக்குமென்றார், அவற்றுட் பகாப்பதம் இனையவென்பதூஉம், இத்துணையவென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பகுபதம்போல் இதனைப் பகுத்துப்பார்க்கின் அப்பகுப்பாற் பகுதிவிகுதிமுதலியஉறுப்பின் பயன்விளைவதின்றிக் காரணத்தான்வரும் அப்பதம்போலாது இடுகுறியாய்ப் பகுதி விகுதி முதலிய ஆறுறுப்பானும் பின்பு முடிக்கப்படும் அப்பதம்போலாது படைப்புக்காலந்தொட்டு ஒன்றாய் முடிந்து நடக்கின்ற பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொலென்னும் நான்கும் பகாப்பதமாம். எ - று.

பகுபதத்திற்கு மறுதலைப்பட்டதென்பார் இவ்வாறுகூறினார்.

(உ - ம்.) நிலம், நீர் எ - ம், நட, வா எ - ம், மன், கொல் எ - ம், உறு, கழி எ - ம் வரும். பிறவுமன்ன. (௬)

## பகுபதம்.

௧௩௨. பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.

எ - ன், பகுபதம் இனையவென்பதூஉம், இத்துணையவென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங்கூறிய பொருளாதியாறுங்காரணமாக வரும் பெயர்ச்சொற்களும், தெரிநிலையாயும் குறிப்பாயும் காலத்தைக்கொள்ளும் வினைச்சொற்களுமாகிய இரண்டும் பகுபதமாம். எ - று.

பொழுதுகொள்வினை பகுபதமெனவே அவ்விருவகை வினையாலணையும் பெயரும் பகுபதமாமென்பது அருத்தாபத்தியாற்கூறினாரென்க. புளி, கடுமுதலிய ஆகுபெயரும் காரணத்தான்வருமேனும் விகுதிமுதலிய உறுப்பின்மையின் அஃதொழிந்தனவற்றையே வருபெயரென்றும், நட வாமுதலிய ஒருமையேவல் பொழுதுகொள்வினையாயினும் பகுதியொன்றுமே பொருளான் வேறுபட்டதன்றிப் பகுத்தற்கு விகுதிமுதலிய உறுப்பின்மையிற் பகாப்பதமேயன்றிப் பகுபதமாகாமையின் அஃதொழிந்தனவற்றைப் பொழுதுகொள்வினையென்றும் கூறினாரென்க.

(உ - ம்.) பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊணனெனப் பெயர்ப்பகுபதம் வந்தன. நடந்தான், நடக்கின்றான், நடப்பான் எ - ம், நடந்த, நடக்கின்ற, நடக்கும் எ - ம், நடந்து, நடக்க, நடக்கின் எ - ம், நடவான் எ - ம், நடவாத எ - ம், நடவாமல் எ - ம் தெரிநிலையுடன்பாட்டு வினைமுற்றும் எச்சமும் எதிர்மறைவினைமுற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கள் முறையேவந்தன. பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊணன் எ - ம், கரிய, பெரிய எ - ம், அன்றி, இன்றி எ - ம் குறிப்பு வினைமுற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கள் வந்தன. நடந்தான், நடந்தவனெனத் தெரிநிலை வினையாலணையும்பெயர்ப்பகுபதம் வந்தன. பொன்னன், ஊணனெனக் குறிப்புவினையாலணையும் பெயர்ப்பகுபதம் வந்தன. பிறவுமன்ன.

அவன், இவன், உவனென்னுஞ்சுட்டுப்பெயரும், எவன், யாவனென்னும் வினாப்பெயரும், தமர், நமர், நுமரென்னுங்கிளைப்பெயரும், தந்தை, எந்தை, நுந்தையென்னும் முறைப்பெயரும் இவைபோல்வன பிறவும் சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் கிளைப்பொருளும் முறைப்பொருளுங்காரணமாகப் பிறபொருட்குவரும் பெயராய்ப் பகுதி விகுதிமுதலியவுறுப்பும் உறுப்பின்பொருளுந்தந்து வெள்ளிடைக்கிடக்கும் பகுபதமாய்ப் பகுக்கப்படுதலால் இவற்றைப் பகுபதமென்னாது பகாப்பதமெனக் கூறின் அது பொருந்தாதென்க.

இனிப் பகுதிவிகுதிமுதலிய உறுப்பும் உறுப்பின் பொருளுந்தரும் ஒரு சொல்லைப் பகுபதமென்றமையின், சொன்மை, பொருண்மை, வின்மை, செம்மை, சிறுமை; நடத்தல், வருதல்முதலிய சொற்கள் பகுதிவிகுதியாகப் பகுக்கப்படுதலானும் மை விகுதிக்கு வேறு பொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் நிற்றலானும் சொன்னிலையாற் பகுபதமென்றும் பொருணிலையாற் பகாப்பதமென்றும் கொள்ளப்படுமென்க.

மேல், சொல்லதிகாரத்துள் திணைபாலிடமுதலிய இலக்கணங்களான் விதந்து, "கிளையெண் குழூஉமுதற் பல்பொருள்" என்னுஞ்சூத்திரமுதலியவற்றால் நான்கியலுள்ளுமுணர்த்தலால் ஆண்டுணரவரும் பெயர்வினையிடையுரிகள் ஈண்டு உணரவாராவேனும் உரைத்துமென்னுமுத்தியான் அவற்றைப் பகாப்பதம் பகுபதமென்றார். (௫)

௧௩௩. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.

எ - ன், பகுபதவுறுப்பு இத்துணையவென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங்கூறிய பகுதிமுதலிய ஆறுறுப்பினுள்ளும் இப்பதப்பொருண்மைக்கு ஏற்பனவற்றைக்கருதி அறிவுடையோராற்கூட்டிமுடிப்ப எவ்வகைப்பட்ட பகுபதங்களும் முடியும். எ - று.

பிரகிருதி, விகிருதியென்னும் ஆரியமொழிகள் பகுதி, விகுதியெனத் திரிந்துநின்றன. தன்னியல்பினிற்றலிற் பகுதியென்றும் தன்னியல்பினிற்கும் ஒருவனுள்ளத்தை ஆடை அணிமுதலியவற்றோடு ஒருத்தி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தல்போலத் தன்னியல்பினிற்கும் பகுதிப் பொருளை இடைநிலைமுதலியவற்றோடு விகுதி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தலின் விகுதியென்றும் முதனிலைப்பகுதிக்கும் இறுதிநிலைவிகுதிக்கும் இடைநிற்றலின் இடைநிலையென்றும் இவ்விகுதிமுதலிய புணர்ப்பைச் சார்ந்து ஆண்டைக்கு இயைந்துநிற்றலிற் சாரியையென்றும் நால்வகைச்சொல்லும் ஒன்றோடொன்று சந்தித்தலான்வருந் தோன்றல் திரிதல் கெடுதலைச் சந்தியென்றும் செய்யுட்டொடைமுதலியவற்றான் வலித்தல் மெலித்தன்முதலாக விகாரப்படுதலின் அவற்றை விகாரமென்றும் காரணக்குறியாய்வந்தன. அல்வழி வேற்றுமைப்புணர்ச்சிக்கு விதித்த தோன்றல் திரிதல் கெடுதலையும் செய்யுட்கு விதித்த ஒன்பது விகாரத்தையும் இப்பதம்பெறுமென மாட்டுதலின் இது மாட்டெறிந்தொழுகலென்னுமுத்தி. (௬)

பகுதி.

௧௩௪. தத்தம், பகாஅப் பதங்களே பகுதி யாகும்.

எ - ன், பகுபதவுறுப்புஆறனுட் பின்னையமூன்றும் புணரியலுள் உணர்த்தப்படுதலின் அவையொழித்து முன்னையமூன்றனுட் பகுதி இனையவென்பதுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பெயர்ப்பகுபதங்களுள்ளும் வினைப்பகுபதங்களுள்ளும் தத்தம் முதனிலையாய பகாப்பதங்களே அவற்றின்பகுதியாம். எ - று.

பகுபதத்துட் பகுதிவிகுதிமுதலிய உறுப்பெல்லாம் பகாப்பதமாயினும் விகுதிமுதலியவற்றை மேல்விதந்துகூறலின் ஈண்டுத் தத்தம் பகாப்பதங்களென்றது முதனிலைகளையேயென்பது பாரிசேடத்தாற்பெற்றாம்.

பகுபதவுறுப்பாம் முதனிலை இறுதிநிலை இடைநிலைகளாய பகாப்பதங்களினின்றும் முதனிலைப்பகாப்பத மொன்றினையுமே பிரித்துத் தந்தமையிற் பகாப்பதங்களேயென்னுமேகாரம் பிரிநிலைக்கண்வந்தது.

முதனிலை பெயர்வினையென்றது தத்தம்பகாப்பதங்களென்றமையின், இருவகைப் பகுபதத்துள்ளும் பகுதியும் ஒருறுப்பாதலின், விகுதிமுதலியவற்றோடு தொடர்ந்துநிற்பதன்றிப் பிரிந்துநில்லாமையானும் பிரித்தவழிப் பகுதியாயஉறுப்பின் பொருள்தாராமையானும் இருவகைப்பகுதியுறுப்புக்களும் இடைப்பகாப்பதமென்பதுபெற்றும். (எ)

கருரு. செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.

எ - ன், பண்புப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங்கூறியபதினொன்றும் இவற்றிற்கெதிரான வெண்மை, கருமை, பொன்மை, பசுமைகளும், பெருமை, அணிமை, நன்மை, தண்மை, பழமை, வன்மை, கீழ்மை, கொய்ம்மை, இன்மை, பருமையும், இவ்வபோல்வனபிறவும் பகுதியாய பண்புப்பொருளினின்றும் வேறுபொருள் பகுக்கப்படாத நிலைப்பதமாம். எ - று.

இங்ஙனங்கூறிய வாய்பாடுமுதலியவெல்லாம் சொன்னிலையாற்பகுபதமாயினும் மைவிகுதிக்குப் பகுதிப்பொருளன்றி வேறுபொருளின்மையிற் பொருணிலையாற் பகுக்கப்படாதென்பார் பண்பிற்பகாவென்றும் *“ மெய்யி னியக்க மகரமொடு சிவணும்” என்றாற்போல இங்ஙனங்கூறிய வாய்பாட்டுப்பண்புகள் மைவிகுதியின்றி இயங்காமையின் இவ்விகுதியினையும் பகுதியாகநிறீஇ மேல்வரும் விகுதியொடுபுணர்க்கப்படுமென்பார் நிலைப்பதமென்றுங்கூறினர்.

பண்புப்பகாப்பதமென்னது பண்பிற்பகாநிலைப்பதமென்றல் சொற்பொருள் விரித்தலென்னுமுத்தி. செம்மை சிறுமை முதலிய வாய்பாடுகள் எடுத்துக்காட்டலென்னுமுத்தி. (அ)

கருசா. ஈறு போத லிடையுகர மிய்யாதல்
ஆதி நீட லடியகர மையாதல்
தன்னொற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மேற் செம்மை சிறுமைமுதலாகத் தெரித்த வாய்பாடுகளின் இறுதிவிகுதிபோதலும் இடையினின்ற உகரம் இகரமாதலும் முதனின்றகுறில் நெடிலாதலும் முதனின்றஅகரம் ஐகாரமாதலும் இடையே தன்னொற்றுமிகுதலும் முன்புநின்றமெய் திரிதலும் வருமெழுத்திற்கு இனவெழுத்து மிகுதலும் இவைபோல்வனபிறவும் அப்பண்பினுக்கு இயல்பாம். எ - று.

* தொல். மொழி. சூ. கரு.

''மெய்யி னியக்க மகரமொடுசிவணும்'' என்ற அகரம் பன்னிருயிரும் மெய்யொடு புணரவருங்காலத்து நீங்கினாற்போல விகுதிமுதலிய புணரவருங்காலத்துப் பண்படிசிற்க அப்பகுதிப்பொருள்விகுதி நீங்குமென்பார் ஈறுகெடுதலென்னாது ஈறுபோதலென்றும் விதந்துகூறு விகாரங்களுமுள, அவை வந்தவழிக்காண்கவென்பார் இனையவென்றும், இவ்விகாரம் ஒருதலையன்று; சுவப்பன், கறுப்பனென்னும் பிறவாய்பாடுகள்போலச் செம்மையன், சிறுமையனெனவு முடியுமென்பார் எதிர்மறையும்மைகொடுத்து இனையவுமென்றும், பெயர்விகுதியொடும் வினைவிகுதியொடும் பதங்களொடும்புணரினும் ஒருவழி இவ்விகாரப்படுமென்பார், பகுதிக்கென்னாது பொதுமையிற் பண்பிற்கியல்பே யென்றுங்கூறினர்.

பதப்புணர்ச்சிக்கும் ஈண்டுக்கூறல் ஒப்பின்முடித்தலென்னுமுத்தி.

(உ - ம்.) நல்லன், வல்லன் என்பன ஈற்றுவிகுதிபோயின. கரியன் பெரியன் என்பன ஈற்றுவிகுதிபோய் உகரம் இகரமாயின. பாசி, பாசடையென்பன ஈற்று விகுதிபோய் ஆதிநீண்டன. பைங்கண், பைந்தார் என்பன ஈற்று விகுதிபோய் இடையுகரம் சகரத்தொடுகெட்டு வருமெழுத்துக்கு இனமிகுந்து அடிஅகரம் ஐகாரமாயின. வெற்றிலை, வெட்டணை என்பன ஈற்றுவிகுதிபோய்த் தன்னொற்றிரட்டின. சேதா, சேதாம்பல் என்பன ஈற்றுவிகுதிபோய் ஆதி நீண்டு முன்னின்ற மகரவொற்றுத் தகரவொற்றாய்த்திரிந்தன.

செம்மை, சிறுமைமுதலாக விதந்தும் இன்னவுமென அடக்கியுங்கூறிய பல வேறுவகைப்பட்ட பண்புவாய்பாட்டுவிகற்பங்களெல்லாம் பொதுவிதியானும் ஈறுபோதன்முதலாக விதந்தும் இனையவுமென அடக்கியுங்கூறிய சிறப்புவிதியானும் விகுதிபதங்களொடு புணர்ந்து அமைந்துகிடந்தமை உற்றுணர்ந்து கொள்க.

இங்ஙனம் விதந்துகூறியவிகாரங்கள் அன்பன் அழகன்முதலிய வாய்பாடுகட்கு எய்தாமையானும் செம்மை சிறுமைமுதலாக எடுத்துக்காட்டுமொழிகட்கு எய்தினமையானும் இஃது எடுத்தமொழியினெய்தவைத்தலென்னுமுத்தி. (கூ)

கஙஎ. நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வெளவுரி றுண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகென்
றெய்திய விருபான் மூன்று மீற்றவும்
செய்யென் னேவல் வினைப்பகாப் பதமே.

எ-ன், தெரிநிலை வினைப்பகுதிக்கு எய்தியதன்மேற்சிறப்புவிதி யுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல்வ் வாழ் கேள் அஃகு என்று தனிநிலையாயும் முதனிலையாயும் எய்திக்கிடந்த இவ்விருபத்துமூன்றும் உயிரும் ஒற்றும் குற்றுகரமுமாகிய ஈற்றினையுடைய இதுதொடக்கத்து வாய்பாடுகளெல்லாம் செய்யென்னும் ஏவல்வினையும் செய்யென்னும் வினையினது பகாப்பதமாகிய பகுதியுமாம். எ - று.

மேற்கூறிய அகரவகரப்போலியை வலியுறுத்துவார் வௌ-(வவ்) எ-ம், இத்தொடக்கத்து வாய்பாடுகளென்பார் அஃகாமை ஞது அஃகென்று எ-ம், ஈற்றசும் எ-ம், எகரவுயிர் விறுவிடைச்சொற்கண்ணும் தன்பெயர்க்கண்ணு மன்றிப் பிறவழி ஈறாகாமையின் அஃதொழிந்தவை ஈண்டைக்காமென்பார் ஆமீற்ற எ-ம், விகற்பத்தின்முடித்தலென்னுமுத்தியான் இருபத்துமூன்று ஈற்றவாக விகற்பித்து எடுத்துக்காட்டிய வாய்பாடுகள் முதலியவெல்லாம் இப்பொது வாய்பாட்டினுள் அடங்குமென்பார் முடிந்தது முடித்தலென்னுமுத்தியாற் செய் எ-ம் கூறினார்.

இரட்டுறமொழிதலென்னுமுத்தியான் எடுத்துக்கொண்ட ஏவற்பொருளும் பகுதிப்பொருளும் தந்துநிற்கும் நட வா முதலிய வாய்பாடுகளை எண்ணித் தொகுத்த இருபான்மூன்று மீற்றவென்னுந்தொகை செய்யெனேவலென்னும் பயனிலையோடும் செய்யென்வினைபகாப்பதமென்னும் பயனிலையோடும் தனித் தனி முடிந்தன.

விகுதிப்புணர்ச்சியோடு பதப்புணர்ச்சிக்கு மேலைச்சூத்திரத்து இலக்கணங் கூறினாற்போலப் பகுதியோடு ஏவல்வினைக்கும் ஈண்டிலக்கணங்கூறலின், இதுவும் ஒப்பின்முடித்தலென்னுமுத்தி.

முன்னர் வினைப்பதமுணர்த்தி அதனகத்து வினையடியைப் பின்னுணர்த்தி வருதலின், வினையியலுட்கூறாத ஏவல்வினையை முற்கூறினார்.

ஏவல்வினைக்குதாரணம், இச்சூத்திரத்து எடுத்துக்காட்டிய வாய்பாடுகளைப் பகுதிப்பொருளொழியக்கொள்க.

பகுதிக்குதாரணம்: நடந்தான், வந்தான், மடித்தான், சீத்தான், விட்டான், கூவினான், ஏவினான், வைத்தான், நொந்தான், போயினான், வெளவினான், உரிஞினான், உண்டான், பொருநினான், திருமினான், தின்றான், தேய்த்தான், பார்த்தான், சென்றான், வவ்வினான், வாழ்ந்தான், கேட்டான், அஃகினான் எ-ம், [1] கடந்தான், கண்டான், எ-ம், ஏகினான், குறுகினான், கட்டினான், பொருந்தினான், எய்தினான் எ-ம் வரும். பிறவுமன்ன.

இவற்றுட் பகுதி முதனிலையாய் எய்திக்கிடந்தமை காண்க.

கையறியாமாக்கட்கன்றி நூலியற்றும் அறிவினையுடைய மக்கட்குப் பல கலைக்குரிசில் பவணந்தியென்னும் புலவர்பெருமான் புகழ்போல விளங்கிநிற்றலான், உலகமலையாமையுள்ளிட்ட பத்தழகோடும் பிறங்குகின்றது இச்சூத்திரமென்றுணர்க.

வடநூன்மேற்கோளாக ஒருமொழிகளை விதந்து பகாப்பதம் பகுபதமெனக்காரணக்குறிதாமேதந்து அவற்றை நல்விருந்தென்னா நாவலர்பயில எழுத்தே தனித்துமென்னுஞ் சூத்திரமுதலாக இச்சூத்திரமீறாகப் பகாப்பதம் பகுபதமெனப் பலகாற்கூறுதல் தன்குறிவழக்கமிக வெடுத்துரைத்தலென்னுமுத்தி. (௪௦)

௧௩௮. செய்யென் வினைவழி விப்பி தனிவரிற்
செய்வியென் னேவ லிணையினீ ரேவல்.

எ-ன், மேல் இரட்டுறமொழிந்தவற்றுள் ஏவல்வினைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதனுதலிற்று.

(பி-ம்.) [1] 'கிடந்தான்'

(இ - ள்.) மேற்கூறிய செய்யென்னும் வாய்பாட்டு நடவாமுதலிய ஏவல்வினையின் பின், வி பி யென்னும் இரண்டுவிகுதியினுள் ஒன்றுவருமாயிற் செய்யென்னும் ஏவன்மேல் ஓரேவலாய்ச் செய்வியென்னும் வாய்பாட்டு ஏவல் வினையாம்; அவற்றின்பின் இவ்விகுதிகள் தன்னொடும் பிறதொடும் இணைந்துவருமாயின், செய்யென்னுமேவன்மேல் ஈரேவலாய்ச் செய்விப்பியென்னும் வாய்பாட்டு ஏவல்வினையாம். எ - று.

விதந்த ஏவற்சிறப்பு வாய்பாட்டையெல்லாஞ் செய்யென்னும் ஏவற்பொது வாய்பாட்டுள் அடக்கி மேற்கூறலின், நடவாமுதலிய வினைவழியென்பார் செய்யென்வினைவழியென்றும், இவைபெருவழக்கல்லவென்பார் தனிவரினென்றும், இணையினென்றும், இவ்விகுதி ஒன்றும் இரண்டும் ஏற்றபெற்றிவருமென்பார் செய்பியென்றது செய்வியென்றும், செய்யென்னும் வாய்பாடுகள் ஏவல்வினை முதலொன்றையும் இயற்றும் வினைமுதலொன்றையும் இருவருள் ஒருவர்க்கு ஒருகருத்தனையும், செய்வியென்னும் வாய்பாடுகள் ஏவல்வினை முதலிரண்டையும் இயற்றும் வினைமுதலிரண்டையும் மூவருள் இருவர்க்கு ஒருகருத்தனையும், செய்விப்பியென்னும் வாய்பாடுகள் ஏவல்வினைமுதல்மூன்றையும் இயற்றும்வினைமுதல்மூன்றையும் நால்வருள் மூவர்க்கு ஒருகருத்தனையுந் தருமென்பார் ஈரேவலென்றுங் கூறினர்.

இவ்வாறு செய்யென்னும் வாய்பாட்டு நட வா முதலிய ஏவல், நடப்பி, வருவி, நடப்பிப்பி, வருவிப்பி என்னுமேவன்மேல்ஏவலாமெனவே செய்வியென்னும்வாய்பாட்டு நடத்து வருத்துமுதலிய ஏவலும் தனித்தும் இணைந்தும் வரும்; விப்பியென்னும் விகுதிகளோடுபுணர்ந்து நடத்துவி, வருத்துவி, நடத்துவிப்பி, வருத்துவிப்பியென்னும் ஏவன்மேலேவலாமென்பது அருத்தாபத்தியாற் கூறினரென்க.

இவ்வாய்பாடுகளுள் நடத்து, வருத்து முதலியன, ஏவல்வினைமுதலிரண்டையும் இயற்றும்வினைமுதலிரண்டையும் மூவருள் இருவர்க்கு ஒருகருத்தனையும், நடத்துவி, வருத்துவி முதலியன, ஏவல்வினைமுதல் மூன்றையும் இயற்றும் வினைமுதல்மூன்றையும் நால்வருள் மூவர்க்கு ஒருகருத்தனையும், நடத்துவிப்பி வருத்துவிப்பி முதலியன, ஏவல்வினைமுதனான்கையும், இயற்றும்வினைமுதனான்கையும் ஐவருள் நால்வர்க்கு ஒருகருத்தனையும் தந்துநின்றன.

இங்ஙனம், இருவர்முதல் ஐவரை உள்ளுறுத்த வாய்பாடுகளை எடுத்துக் கூறவே வரம்பின்றி ஏவன்மேலேவலும் இயற்றன்மேலியற்றலுமாய் வருவனவற்றிற்கு வாய்பாடின்றென்பது பெற்றாம்.

நடவாமுதலிய ஏவற்சிறப்பு வாய்பாட்டிற்கு இலக்கணங் கூறியமுகத்தே ஏவற்பொதுவாய்பாட்டிற்கும் செய், செய்வி, செய்விப்பியெனக் கூறுக்கூற்றாய் இலக்கணம் அமைந்துகிடந்தமையின், இக்கூற்று இட்டுரமொழிதலென்னுமுத்திக்கு இனம். இவைபோல்வனபிறவும் அது. (கக)

கருசு. விளம்பிய பகுதிவே றாதலும் விதியே.

எ - ன், வினைப்பகுதிக்கு ஆவதோர் புறனடையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஏவல் வேறுதல்போல அதிகரித்து விளம்பிய வினைப்பகுதி வேறுதலும் விதியாம், விலக்கன்று. எ - று.

ஏவலும் விளம்பப்பட்டதேனும் அதிகரித்ததன்றாகலின் வினைப்பகுதியினை விளம்பிய பகுதியென்றார்.

(உ - ம்.) நடத்தினன், நடப்பித்தான், நடப்பிப்பித்தான், நடத்துவித்தான், நடத்துவிப்பித்தானெனவரும். பிறவுமன்ன.

ஈண்டும் 1விப்பிகள் ஏற்றபெற்றிகொள்க.

இவற்றுள் நடவென்னுந் தன்வினைப்பகுதி பிறவினைப்பகுதியாய் வேறுபட்டு நின்றவாறு காண்க.

வேறுபடாதது பிரகிருதியாமன்றி வேறுபட்டது பிரகிருதியாகாதேனும் தந்தையைக்குறிக்க மகனெனப்பட்டானொருவன் தன்மகனைக்குறிக்கத் தந்தையானாற்போலப் பிறவினைப்படுத்தவரும் இவ்விகுதிகளும் மேல்வரும் அன் ஆன் முதலிய விகுதிகளைக்குறிக்கப் பகுதியாமாதலின், விதியேயெனப் புறனடை தந்தார். இச்சூத்திரத்திற்கு வாவென்பகுதிமுதலியன வந்தான் வருகின்றானென விகாரப்படுதலைப் பொருளாகக்கூறுவாருமுளர்; இவ்விகாரங்கள், பகுபதவுறுப்பாய் மாட்டெறிந்துகொண்ட மூன்றுசந்தியுள்ளும் ஒன்பதுவிகாரத்துள்ளும் அமைந்துகிடத்தலின் அதுபொருந்தாதெனக. (கஉ)

## விகுதி.

கசாO. அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்அன்
அம்ஆம் எம்ஏம் ஓமோ டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
ஈயர் கயவு மென்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.

எ - ன், விகுதி இனையவென்பதுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் அன் ஆன் முதல் முப்பத்தேழாகச் சொல்லப்படுவனவும் இவைபோல்வன பிறவும் தெரிநிலைவினையின் விகுதிகளாம்; பெயரிடத்தும் இவற்றுட் சிலவிகுதியாம். எ - று.

இரட்டுறமொழிதலென்னுமுத்தியால் தன்மையொருமைக்கும் அஃறிணைப்படர்க்கையொருமைக்கும் பொதுவாக டு து று என்றும், அன்னென்னுந் தன்மையொருமைவிகுதி தொன்றுதொட்டதன்றி இலக்கியங்கண்டமையின் எதிரதுபோற்றலென்னுமுத்தியால் தழீஇக்கொண்டதாதலின், அதனை வலியுறுத்திப் பின்னும் அன்னெனவிதந்தும் இன்னும் இவற்றுள் இரட்டுறமொழிதலான் அடங்குவன அடங்க அடங்காவாய பெயரெச்சம் வினையெச்சம் நடத்து நடப்பி முதலிய பிறவினையென்பவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் பகுதியை விகுதிப்படுத்தி வருவனயாவை அவையெல்லாம் விகுதியென்று கருதிக்கோடற்குப் பிறவுமென்றுங் கூறினர்.

பெயரினுஞ் சிலவென்றமாத்திரையிற் குறிப்புவினையினுஞ் சிலவென்பது கூறாதேயமைதலின், இங்ஙனம் வினையென்றது அவ்விரண்டும் ஒழிந்த தெரிநிலைவினையென்பது பெற்றாம்.

வ - று. நடந்தனன், நடந்தான்: இவை ஆண்பாற்படர்க்கை; நடந்தனள், நடந்தாள்: இவை பெண்பாற்படர்க்கை; நடந்தனர், நடந்தார், நடப்ப,

(பி - ம்.) 1 'விப்பிக்கள்'

நடமார்: இவை பல்லோர்படர்க்கை; நடந்தன, நடவா: இவை பலவின்படர்க்கை; நடக்கு, உண்டு, நடந்து, சேறு, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன்: இவை ஒருமைத்தன்மை; நடந்தது, கூயிற்று, குண்டுகட்டு: இவை ஒன்றன்படர்க்கை; நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், நடக்கும், உண்டும், நடந்தும், சேறும்: இவை தன்மைப்பன்மை; நடந்தனை, நடந்தாய், நடக்கி: இவை ஒருமைமுன்னிலை; நடமின், நடந்தனிர், நடந்தீர்: இவை பன்மைமுன்னிலை; நிலீயர், நடக்க, வாழிய: இவை வியங்கோள்; நடக்கும்: இது செய்யுமென்முற்று; பிறவுமன்ன.

இவை திணைபாலிடங்களையுணர்த்தி வினையின் இறுதிநிலையாய் முழுவதும் வந்தன.

வில்லன், வில்லாள், வளையள், வளையார், ஊரர், ஊரார், வில்லி, வாளி, அரசி, செட்டிச்சி, காதறை, மூக்கறை: இவை பெயர்க்கட் சிலவந்தன. பிறவுமன்ன. (௧௫)

## பெயரிடைநிலை.

௧௪௧. இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே.

எ - ன், இடைநிலையாமாறுணர்த்துவான்றொடங்கிப் பெயர்க்கு இடைநிலையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அறிவுடையோரால் நியமிக்கப்படும் இலக்கியங்கண்டு அதனுக்கு அவ்விலக்கியத்தின் அமைதியே இலக்கணமாகக்கூறலின், மேற்கூறிய பகுதியையும் விகுதியையும் பகுத்து இடையேநின்றதியாது அதனை வினையாலணையும்பெயரல்லாத பெயர்கட்கு இடைநிலையென்று சொல்லுக. எ - று.

குறிக்கப்படும் இலக்கணத்தையுடையனவெல்லாம் இலக்கியமாயினும் ஈண்டு இலக்கியமென்றது, பெயர்ப்பகுபதத்தை; இலக்கணமென்றது, அதனகத்துப் பகுதிமுதலிய உறுப்புக்களை.

மாபலாமுதலியன, பராரைமுதலிய சினையொடுநின்றனவெனக் கண்டது கூறுவார்போலப் பகுபதம், பகுதிமுதலிய உறுப்போடு நின்றதெனக் கண்டது கூறி அப்பதந்தந்த தோலாநாவின் மேலோராணையினிற்றலிற் கண்டதற்கென்றார், சாரியை சந்தி விகாரங்களும் இடைநிற்குமேனும் அவை மேல் [1]விதக்கப்படுதலின் அவையொழிந்தனவற்றை இடைநின்றதை யென்றும், மேல் வினைக்கு விதந்துகூறுமிடைநிலை வினையாலணையும்பெயர்க்கும் அமைதலின் வினைப்பெயரல் பெயர்க்கென்றும், இப்பெயரிடைநிலை வரையறுக்கப்பட்டதன்று, ஆங்காங்கு உணர்ந்துரைக்கவென்பார் எனலேயென்றுங்கூறினார்.

(உ - ம்.) அறிஞனென்பது ஞகரவிடைநிலை பெற்றது. ஓதுவான், பாடுவானென்பன வகரவிடைநிலைபெற்றன. வலைச்சி, புலைச்சியென்பன சகரவிடைநிலைபெற்றன. வண்ணாத்தி, பாணத்தி, மலையாட்டி, வெள்ளாட்டி, தந்தை, எந்தை, நுந்தையென்பன தகரவிடைநிலைபெற்றன. பிறவுமன்ன. (௧௬)

## வினையிடைநிலை.

௧௪௨. தடறவொற் றின்னே யைம்பால் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை.

---

(பி - ம்.) [1] 'விதிக்கப்'

எ - ன், இறந்தகாலவினைக்கு இடைநிலையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தகர டகர றகரமெய்களும், இன்னென்பதும் குற்றொற்றும் ஐம்பான்மூவிடத்தும் இறந்தகாலத்தைத்தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம். எ - று.

(உ - ம்.) நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன, நடந்தேன், நடந்தேம், நடந்தாய், நடந்தீர் எ - ம், உண்டான் எ - ம், சென்றான் எ - ம், உறங்கினான் எ - ம் வரும். பிறவுமன்ன. (கரு)

கசங. ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை.

எ - ன், நிகழ்காலவினைக்கு இடைநிலையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஆநின்றென்பதூஉம் கின்றென்பதூஉம் கிறுவென்பதூஉம் ஐம்பான்மூவிடத்திலும் நிகழ்காலத்தைத்தரும் வினைப்பகுபதவிடைநிலைகளாம். எ - று.

தருவினையை அறைவினையென்றது இலக்கணை. மேலைச்சூத்திரத்தில் வருவதூஉமது.

(உ - ம்.) நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறானென வரும்.

ஏனைப்பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க. (கசு)

கசச. பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.

எ - ன், எதிர்காலவினைக்கு இடைநிலையும், முக்காலஇடைநிலைகட்கு ஆவதோர்புறனடையுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பகரவொற்றும் வகரவொற்றும் ஐம்பான்மூவிடத்தும் எதிர்காலத்தைத்தரும் வினைப்பகுத இடைநிலைகளாம்; இம்முக்காலமும் முறையே காட்டும் தகரவொற்று முதல் வகரவொற்றீறாய இடைநிலைகள் சிலமுற்றுவினை எச்சவினைக்குஇலவாம். எ. - று.

(உ.- ம்.) நடப்பான், வருவான் எனவரும்.

ஏனைப்பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க.

இனி, இவை சிலவிலவெனவே காலத்தை இறுதிநிலைதருமென்பதூஉம், முதனிலைதருமென்பதூஉம், பிறஇடைநிலைதருமென்பதூஉம் பெற்றாம். இவ்விகற்பமெல்லாம் வருஞ்சூத்திரத்தாற் கூறுப. (கஎ)

## காலங்காட்டும் விகுதி.

கசரு. றவ்வொ டுகரவும் மைநிகழ் பலவும்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தம்

செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே.

எ - ன், மேலைச்சூத்திரத்து "இவைசிலவில" என்றார், அவை இவை யென்பதுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) றகரத்தோடுகூடிய உகரவீறும் உம்மீறும் இறந்தகாலமும் எதிர்காலமும், தகரத்தோடுகூடிய அவ்விரண்டீறும் அவ்விருகாலமும், டகரத்தோடுகூடிய அவ்விரண்டீறும் இறந்தகாலமும், ககரத்தோடுகூடிய அவ்விரண்டீறும் எதிர்காலமும், மின்னீறும் ஏனைஏவலின்வரும் அனைத்தீறும் வியங்கோளீறும் இகரவீறும் மாரீறும் எதிர்காலமும், பகரவீறு இறந்தகாலமும் எதிர்காலமும், செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றீறுகள் நிகழ்காலமும் எதிர்காலமும், முற்றுவிகுதி எச்சவிகுதிகளொடுபுணர்தற்குரிய எதிர்மறை ஆகாரவீறு மூன்றுகாலமுமேற்கும்; மேலைச்சூத்திரத்து இவைசிலவில என்றவற்றுள். எ-று.

அந்தமென்பதனை எல்லாவற்றினும் ஒட்டிக்கொள்க.

றவ்வொடுகரவும்மீறும் தவ்வொடுகரவும்மீறும் பாந்தமும் இறந்தகாலமும் எதிர்காலமு மேற்குமெனத் தொகுத்துக்கூறாது விகற்பத்தின்முடித்தலென்னு முத்தியான் வகுத்துக்கூறினார், புலப்படவேண்டியென்க.

இகரவீறு தனித்தியலாமையின் யாதானும் ஒருமெய்யினை ஊர்ந்துவருமென்பதூஉம், அதுகாலங்காட்டாதென்பதூஉம், அதுகாலங்காட்டியதேல் இவ்வீறு காலங்காட்டாதென்பதூஉம், செய்யுமென்னும் வாய்பாட்டெச்சமும் இடைநிலையின்றி ஈறு காலங்காட்டுமேனும் அஃது எதிர்காலங்காட்டுமென மேல் [1]விதத்தலின் இங்ஙனம் செய்யுமென எடுத்தோதியது முற்றென்பதூஉம் பெற்றாம். மூன்றுகாலமும் அவைபற்றிப் புடைபெயரும் வினையுமில்லன வற்றை எதிர்மறைவினை மூன்றுகாலமு மேற்குமென்று கூறுதல் இலக்கணையாதலிற் பிற்கூறினார்.

(உ - ம்.) சென்று, சென்றும், சேறு, சேறும், வந்து, வந்தும், வருது, வருதும், உண்டு, உண்டும், உண்கு, உண்கும், உண்மின், உண், உண்க, வாழிய, வாழியர், சேறி, உண்மார், உண்ப, உண்ணும், உண்ணான் எனவரும்.

மும்மையுமென்னும் முற்றும்மையை 'முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்' என்பதனான் எச்சவும்மையாக்கி நடந்திலன், நடவாநின்றிலனென எதிர்மறை ஒருகாலமேற்றுவருதலுங் கொள்க.

சென்றி, செல்லாநின்றி எனவருமாயின், இடைநிலை காலங்காட்டிய இகரவீற்றவாம்.

'இவை சிலவில' என்றவற்றுள், இறந்தநிலை காலங்காட்டுவனவற்றை விதந்தோதி முதனிலையும் பிறவிடைநிலையும் காலங்காட்டுவனவற்றை ஓதாமையின், அவை சிறுபான்மைய, வந்தவழிக்காண்கவென்றாராயிற்று; அவை வருமாறு:—

தொட்டான், விட்டான், உற்றான், பெற்றான், புக்கான், நக்கான் என்பவற்றுள், இடைநிலையின்றி முதனிலைவிகாரமாய் இறந்தகாலங்காட்டின.

(பி - ம்.) 1 'விதித்தலின்'

என்மனார், என்றிசினோர், என்மர் என்பவற்றுள், எந்தோறாய்ப் பிற விடைநிலைகளின்றி முன்னையவிரண்டும் இறந்தகாலமும் பின்னையதொன்று எதிர்காலமுங்காட்டின. பிறவுமன்ன.

ஈங்கேயென்றமிகையானே, "வருதி பெயர்தி வருந்துதி அஞ்சாய் பொருதி புலம்புதி நீயும்" என இவ்வீறு நிகழ்காலங்காட்டலும், ஏனைய கூறியகாலத்திற் பிறழ்ந்து வருவனவுளவேல் அவையும், பெயரெச்ச வினையெச்சங்களில் இடைநிலையின்றி இறுதிநிலை காலங்காட்டுவனவுங்கொள்க.

இனிப் பகுதிமுதலிய உறுப்புக்களாற் பதமுடியுமாறு :—

அவனென்னுஞ் சுட்டுப்பொருட் பெயர்ப்பகுபதம், அ என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும்பெற்று, "எகர வினாமுச் சுட்டின்" என்னுஞ் சூத்திரத்தால் வகரந்தோன்றி, "உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே" என்பதனான் வகரத்தின்மேல் விகுதியுயிரேறி முடிந்தது.

தமனென்னுங் கிளைப்பொருட் பெயர்ப்பகுபதம், தாமென்னும் பகுதியும் அன்என்னும் விகுதியும்பெற்று, "தான்றா நாமுதல் குறுகும்" என்பதனாற் பகுதிமுதல்குறுகி, உடன்மேலுயிரேறி முடிந்தது.

குறிஞ்சியானென்னும் இடப்பெயர்ப்பகுபதம், குறிஞ்சியென்னும்பகுதியும் ஆனென்னும் விகுதியும்பெற்று யகரவுடம்படுமெய்தோன்றி உயிரேறி முடிந்தது.

பிரபவனென்னுங் காலப்பெயர்ப்பகுபதம், பிரபவவென்னும்பகுதியும் அன்என்னும்விகுதியும்பெற்று, "ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே" என்பதனாற் பகுதி கடைக்குறையாய் வகரவொற்றின்மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

திணிதோளனென்னுஞ் சினைப்பெயர்ப் பகுபதம், திணிதோளென்னும் பகுதியும் அன்னென்னும் விகுதியும்பெற்று உடன்மேலுயிரேறிமுடிந்தது.

பெரியனென்னுங் குணப்பெயர்ப்பகுபதம், பெருமையென்னும் பகுதியும் அன்னென்னும்விகுதியும் பெற்றுப் பகுதியீறுபோய் இடையுகரம் இகரமாய் யகரவுடம்படுமெய்தோன்றி உயிரேறிமுடிந்தது.

ஓதுவானென்னுந் தொழிற்பெயர்ப்பகுபதம், ஓதுஎன்னும் பகுதியும் ஆனென்னும்விகுதியும் வகரவிடைநிலையும்பெற்று உயிரேறிமுடிந்தது.

நன்மையென்னும்பகுபதம், நல்என்னும் பகுதியும் மையென்னும் விகுதியும் பெற்று, "மெல்மேவி னணவும்" என்பதனான் லகரம் னகாரமாய்த் திரிந்துமுடிந்தது.

வருதலென்னும்பகுபதம், வாஎன்னும் பகுதியும் தலென்னும் விகுதியும்பெற்று, "வலித்தல் மெலித்தல்" என்பதனாற் பகுதிமுதல்குறுகி ரகரவுகரம் விரிந்துமுடிந்தது.

நடந்தனனென்னும் இறந்தகாலவினைப் பகுபதம், நடஎன்னும் பகுதியும் அன்என்னும் விகுதியும் இறந்தகாலந்தரும் தகரவிடைநிலையும் அன்சாரியையும் பெற்றுப் பகுபதவுறுப்புக்கள் இடைச்சொல்லாதலின், "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்" என்பதனாற் பகுதி [illegible] உயிர்முன

வந்த தகரவிடைநிலைமிகாது அதற்கினமிகுந்து இடைநிலைத் தகரவொற்றின்மேற் சாரியையகரவுயிரேறிச் சாரியையீற்று னகரவொற்றின்மேல் விகுதிஅகரவுயிரேறிமுடிந்தது.

நடவாநின்றான் என்னு நிகழ்கால வினைப்பகுபதம், நடவென்னும் பகுதியும் ஆனென்னும் விகுதியும் ஆநின்று என்னுமிடைநிலையும் பெற்று உடம்படுமெய்தோன்றிக் குற்றுகரங் கெட்டு உயிரேறி முடிந்தது.

நடப்பானென்னும் எதிர்கால வினைப்பகுபதம், நடவென்னும் பகுதியும் ஆனென்னும் விகுதியும் பகரவிடைநிலையும்பெற்று, ''இயல்பினும் விதியினு நின்றவுயிர்முன், கசதபமிகும்'' என்பதனாற் பகரமிகுந்து உடன் மேலுயிரேறிமுடிந்தது.

நடந்தது என்னும் அஃறிணை ஒருமைப்படர்க்கை இறந்தகால வினைப்பகுபதம், துவ்விகுதிக்கும் தகரவொற்றுக்குமிடையே அகரச்சாரியைபெற்று முடிந்தது.

நடத்துஎன்னும் ஏவற்பிறவினைப்பகுபதம், நடஎன்னும்பகுதியும் துஎன்னும்விகுதியும்பெற்றுத் தகரமிகுந்துமுடிந்தது.

நடப்பிஎன்னும் அவ்வினைப்பகுபதம், நடஎன்னும்பகுதியும் பிஎன்னும் விகுதியும்பெற்றுப் பகரமிகுந்துமுடிந்தது.

நடப்பிப்பிஎன்னும் அவ்வினைப்பகுபதம், நடப்பிஎன்னும்பகுதியும் பிஎன்னும்விகுதியும்பெற்றுப் பகரமிகுந்துமுடிந்தது.

நடத்துவிஎன்னும் அவ்வினைப்பகுபதம், நடத்துஎன்னும்பகுதியும் விஎன்னும்விகுதியும்பெற்று முடிந்தது.

நடத்துவிப்பிஎன்னும் அவ்வினைப்பகுபதம், நடத்துவிஎன்னும்பகுதியும் பிஎன்னும்விகுதியும்பெற்றுப் பகரமிகுந்துமுடிந்தது.

விளம்பியபகுதி வேறாதலையும், இவ்வாறமுடிந்து அனைத்தும் ஒருபகுதியாய்நின்று மேல்வரும் அன் ஆன் முதலிய விகுதியோடுபுணர்ந்தமை காண்க.

நடவானென்னும் எதிர்மறைவினைப்பகுபதம், நடவென்னும்பகுதி எதிர்மறைஆகாரவிகுதியோடுபுணர்ந்து இரண்டும் ஒருபகுதியாய்நின்று மேல்வரும் ஆன் விகுதியொடுபுணர்ந்து, ''ஒருமொழிமூவழிக்குறைதலுமனைத்தே'' என்பதனான் விகுதியினது ஆகாரங்குறைந்துமுடிந்தது.

நடவாஎன்னும் அஃறிணைப்பன்மைப்பகுபதம், ''ஆவே யெதிர்மறைக் கண்ணதாகும்'' என்பவாகலிற் பாலைகாட்டும் ஆகாரவிகுதியன்றி எதிர்மறையாகாரம்வேண்டாதுமுடிந்தது.

நடத்திலன், நடவாநின்றிலனென்பவற்றுட் காலவிடைநிலையும் அவற்றைமறுத்த இல்லென்னுமெதிர்மறைவிகுதியுந்தந்து அவற்றை ஒருபகுதியாக்கி முடிக்க.

இவ்வாறே பெயரெச்சவினையெச்சங்களும் பிறவும் பகுதிவிகுதிமுதலிய உறுப்புக்களோடு ஏற்றவாறு அமைந்துகிடந்தமைகாண்க.

''பகுதிவிகுதி'' என்னுஞ் சூத்திரமுதல் இச்சூத்திரமீறாகப் பகுபதங்களை மேலோர்முடித்தவாறு முடித்துக்காட்டுமுறைமையின், இது முடித்துக்காட்டலென்னுமுத்தி.

(இ - ள்.) மேல் திரியுமென்றவற்றுட் சிறப்பெழுத்தாகிய ஏழாமுயிர் இகரமும் இருவுமாம்; ஐந்துவருக்கங்களினும் இடையினின்றமூன்றும் அவ்வவ்வருக்கங்களின் முதலெழுத்தாம்; எட்டாமெய்யான சவ்வருக்கத்துள் எடுத்துச்சொல்லுமெய் ஓரோவிடத்து யகரமுமாம்; முப்பதாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் யகரமுமாம்; முப்பத்தொன்றாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் டகரமுமாம் ; முப்பத்திரண்டாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் தகரமுமாம் ; முப்பத்துமூன்றாமெய் மொழிமுதற்கண் அகரமும் இடைக்கட் ககரமுமாம்; முப்பத்தைந்தாமெய் இரண்டுககரமாம் ; பொதுவெழுத்துள் மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாம்; மொழியிறுதி ஈகாரம் இகரமாம். எ - று.

மேல் திரியுமெனப் பொதுவிதியோந்தவற்றுட் பயின்றுவருவனவற்றிற்குத் திரிபுகூறி ஏனைய வந்தவழிக்காண்கவென்பார், இகரமுமாகுமெனப் பயனில்லகொடுத்துமுடியாது இகரமுமென அவாய்நிலையாக முடித்தார்.

(வ - று.) இடபம், விடபம், திடம் எ - ம், இருடி, மிருகம், விருத்தி எ - ம் ஏழாமுயிர் இகரமுமிருவுமாயிற்று. நகம், நாகம், மேகம் எ - ம், *சலவாதி, விசயம், சருச்சரை எ - ம், பீடம், பீடை, திடம் எ - ம், தலம், திடம், தரை எ-ம், பலம், பந்தம், பாரம் எ - ம் ஐந்துவருக்கத்திலும் உரப்பியும் எடுத்தும் கனைத்துஞ்சொல்லுமூன்றும் [1] அவ்வம் முதலாயின. அயம், பங்கயமென எட்டாமெய் யகரமுமாயிற்று ; சாலை, சூலை எ - ம், மயானம் எ - ம் முப்பதாமெய் சகரமும் யகரமுமாயிற்று. சட்டி எ - ம், இடபம் எ - ம் முப்பத்தொன்றாமெய் சகரமும் டகரமுமாயிற்று. சித்தி, சூத்திரம், சேனை எ - ம், ஆதனம், வாதனை எ - ம் முப்பத்திரண்டாமெய் சகரமும் தகரமுமாயிற்று. அரன், அரி எ - ம், சங்கம், மோகம் எ-ம் முப்பத்து மூன்றாமெய் அகரமும் ககரமுமாயிற்று. பக்கம், †தக்கணமென முப்பத்தைந்தாமெய் இரண்டு ககரமாயிற்று. வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை என ஆகாரவீறு ஐகாரவீறாயிற்று. புரி, மேதினி, குமாரி என ஈகாரவீறு இகரவீறாயிற்று. (உ0)

கசஅ. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்
கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ரகர வகர யகரங்களை முதலாகவுடைய ஆரியமொழிகள் வடமொழியாங்கால அகர இகர உகரமென்னும் இம்மூன்று குற்றுயிரும் இவைகளுஞ்சொன்னவாற்ற அவ்வடமொழிகட்குமுதலாய் அம்மூன்றெழுத்திற்குமுன்னர்வரும். எ - று.

(வ - று.) அரங்கம், இராமன், உரோமம் எ - ம், இலாபம், உலோபம் எ - ம், இயக்கன் எ - ம் வரும். (உக)

---

* ஒரு கருத்துப்பற்றி ஒருவன் கூறியமொழிக்கு வேறுபொருள் கற்பித்துக்கொண்டு பழித்துக்கூறுபவன். † தெற்கு; பாகதச்சிதைவு.

(பி - ம்.) [1] 'அவ்வவ்'

கசுகூ. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமு நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஆரியமொழியுள் இரண்டெழுத்திணைந்து ஓரெழுத்துநீர்மையாய் நடக்குங்காற் பின்னிற்கும் யரலக்கண்மீதே இகரமும், மகரவகரங்கண்மீதே உகரமும் நகரமீதே அகரமும்வந்து வடமொழியாம்; இணைந்து முன்னிற்கும் ரகரத்திற்குப்பின்னர் உகரமும்வரும். எ - று.

(வ - று.) வாக்கியம், சாச்சியம், நாட்டியம் எ-ம், வக்கிரம், வச்சிரம், சத்திரம், அப்பிரம் எ-ம், சுக்கிலம், ஆமிலம் எ - ம், பதுமம் எ - ம், பக்குவம் எ - ம், அரதநம் எ - ம், அருக்கன், அருத்தம், கருப்பம், சருக்கம், தருமம் எ - ம் வரும்.

பிறவென்றமையானே சத்தி, கட்சி, காப்பியம்,பருப்பதம் என்றற்றொடக்கத்துத்திரிபும், தூலம், அத்தம், ஆதித்தன், அநத்தம் என்றற்றொடக்கத்துக்கேடும் மற்று விகாரத்தால் வருவனவுங்கொள்க. (உஉ)

கடுo. றனழஎ ஒவ்வு முயிர்மெய்யு முயிரள
பல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே.

எ - ன், வடமொழியாக்கங்கூறவேண்டி ஆரியத்திற்குப் பொதுவெழுத்துச் சிறப்பெழுத்தென விதந்தமையின் அவ்விதப்புத் தமிழிற்குஉண்டோ இன்றோவென்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தனுதலிற்று.

(இ - ள்.) முதலுஞ்சார்புமான நாற்பதெழுத்துள்ளும் றகர னகர ழகர எகர ஒகரமான முதலெழுத்தைந்தும், உயிர்மெய்யும் உயிரளபெடையுமல்லாத சார்பெழுத்தெட்டும் தமிழிற்குச் சிறப்பெழுத்தாம்; ஒழிந்த இருபத்தேழும் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம். எ - று.

மெய்யைமுற்கூறினர், எகர ஒகரம் பிராகிருதத்திற்கும் உரியவாதலினென்க. (உரு)

பதவியல் முற்றிற்று.

மூன்றாவது

# உயிரீற்றுப் புணரியல்.

## புணர்ச்சி.

கருக. மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.

எ - ன், நிறுத்தமுறையானே மேலியைபுகூறிய பதங்கள் ஒன்றோ டொன்றுபுணருமாறு உணர்த்துவான்றொடங்கிப் புணர்ச்சியின்னதென்ப தூஉம் பொதுப்புணர்ச்சியும் முறையேதலைப்பெய்து உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சிகூறுவார், கமுகந்தோட்டமென்றாற்போல மிகுதிபற்றியகுறி யாய் இவ்வியற்கு உயிரீற்றுப்புணரியலெனப் பெயர்தந்தமையின் இவ்வியலின் வைத்தமுறையே புணர்ச்சி இன்னதென்பதுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாகவுடைய பகாப் பதம்பகுபதமென்னுமிரண்டுபதங்களும், தன்னொடுதானும்பிறிதொடுபிறிதுமாய் அல்வழிப்பொருளினானுதல் வேற்றுமைப் பொருளினானுதல் பொருந்துமிடத்து, நிலைமொழியும் வருமொழியும் இயல்பொடும் விகாரத்தொடும் பொருந்துவது மேற்கூறிய புணர்ச்சியாம். எ - று.

உயிர்மெய்முதலீறுமெனின் உயிர்மெய்யென்னும் ஓரெழுத்தாகப் பொ ருள்படுமாதலின், மெய்யுயிர்முதலீறுமென மெய்யை முற்கூறினார்.

திசைச்சொல்லும் வடசொல்லும் பெயர்வினையிடையுரியாயடங்குமாத லின் அவற்றுளடக்கி இருபதங்களுமென்றார்.

வேற்றுமையல்லாதவழி அல்வழியாதலின், வேற்றுமையல்வழியெனக் கூறவேண்டும்; அங்ஙனங்கூறின், வேற்றுமைப்பொருள் அல்வழிப்பொரு ளென இருபொருட்படாது வேற்றுமையென்பது அல்வழியை விசேடித்ததாய் அல்வழிப்பொருளொன்றிலும் பொருந்துழியெனப் பொருள்படுமாதலின், அல் வழிவேற்றுமையென அல்வழியை முற்கூறினார்.

இயல்பெனினும் தன்மையெனினும் இயற்கையெனினும் ஒக்கும்; விகார மெனினும் செயலெனினும் செயற்கையெனினும் விதியெனினுமொக்கும். இவ் விரண்டனுள் *"நின்ற சொன்முன் னியல்பா கும்மே" என இயற்கையைச் செயற்கையாகவும், †"இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசை யன்று வையத் தியற்கை" எனச் செயற்கையை இயற்கையாகவுங்கூறுதல் இலக்கணை.

---

*தொல். தொகை, உ. † நாலடியார், மெய்ம்மை, க.

புணரியன்மூன்றனுள்ளும் மெய்யுயிர் முதலீருமிருபதங்களும் இவ்வாறு புணர்ந்துவருதல்காண்க. (௧)

வேற்றுமை அல்வழி இவையென்பது.

கருஉ. வேற்றுமை யைம்முத லாறு மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே.

எ - ன், மேல் அல்வழிவேற்றுமையென்றார், அவை இவையென்பது உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைப்புணர்ச்சி, "பெயரே ஐயால்" என்னுஞ்சூத்திரத்து ஐமுதலிய ஆறுருபும் தொக்கும் விரிந்தும்வரப் பதங்கள்பொருந்துந் தொடர்ச்சியாம்; அல்வழிப்புணர்ச்சி, வினைத்தொகைமுதலிய ஐந்துதொகைநிலையும் எழுவாய்முதல் ஒன்பதுதொகாநிலையுமெனப் பதங்கள்பொருந்துந் தொடர்ச்சி பதினான்காம். எ - று.

வேற்றுமைத்தொகைநிலை தொகாநிலையென விதவாமையின் அவ்விரண்டும் வேற்றுமைப்புணர்ச்சியென்பதூஉம், முற்றெச்சங்களை விதந்தமையின் தொழிலென்றது வினைத்தொகையையென்பதூஉம், வினைத்தொகைமுதலைந்தும் விரிந்தவழி, வினைத்தொகை பெயரெச்சமாயும் பண்புத்தொகையிரண்டும் பெயரெச்சக்குறிப்பாயும், உவமைத்தொகை இரண்டாம் வேற்றுமையொடு பயனிலையாயும், உம்மைத்தொகை இடைச்சொற்சந்தியாயும், அன்மொழித்தொகை, பொற்றொடியென்பது பொன்னாலாயதொடியினையுடையாளெனச் சொற்களும்சந்திகளும் பலவாயுமுடிதலானும், வேற்றுமைத்தொகையன்றி இத்தொகைகள் தொகாநிலையுமாமென மேற்சூத்திரஞ்செய்யாமையானும் இவ்வைந்துதொடரும் தொகைநிலையென்பதூஉம் பெற்றும்.

இரண்டென்பதனை முற்றென்பதனோடும் தழுவுதொடரென்பதனை எல்லாவற்றோடுமொட்டுக.

அடுக்கும் தழுவுதொடராயினும் ஒருசொல்அடுக்கிவருதலின் ஏனையபோல் தழுவுதொடரன்றென்பார், விதந்து பிற்கூறினர்.

(வ - று.) பொன்னுடையான், பொன்னையுடையான்; கல்லெறிந்தான், கல்லாலெறிந்தான்; கொற்றன்மகன், கொற்றற்குமகன்; மலைவீழருவி, மலையின் வீழருவி; மலையுச்சி, மலையினதுஉச்சி; மலைமுழை, மலைக்கண்முழையென வேற்றுமைப்புணர்ச்சிவந்தன. கொல்யானை, கருங்குதிரை, ஆயன்சாத்தன், பொற்சுணங்கு, இராப்பகல், பொற்றொடி, கொற்றன்கொடுத்தான், கொற்றாகொள், உண்டசாத்தன், உண்டுவந்தான், உண்டான் சாத்தன், குண்டுகட்டெருமை, * "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை", † "கனியேதையே", "படைபடையென்றஞ்சி" என அல்வழிப்புணர்ச்சிவந்தன.

தழுவுதொடர் ஆறும் பதினான்குமெனக்கூறவே தழுவாததொடரும் சிலவள, அவ்விருவழியுமென்றாராயிற்று. அவைவருமாறு :—கைக்களிறு, பொற்

* திருக்குறள், ௧௦௮௧. † புறநா. உஉ௭.

குடம், ஆடகப்பூண் என்பன, தழுவுதொடராகிய உருபும்பயனுமுடன்றொக்க மையின், களிறு குடம் பூணென்பனவற்றோடு நிலைமொழிகள் தழுவாது தொடர்ந்து மூன்றுவிகாரமுமேற்ற வேற்றுமைப்புணர்ச்சி. *"இரும்பு திரித் தன்ன மாயிரு மருப்பிற், பரலவ லடைய விரலை தெரிப்ப" என்பதனுள், மருப் பினிரலை எனக் கொண்டுகூட்டாகவந்து இரண்டாம்வேற்றுமைஉருபும்பயனும் உடன்றொக்கு மருப்பென்பது இரலையென்பதனோடுபுணராது மருப்பிற்பரலெ னப் புணர்ந்து திரிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாம் தழாததொடராய வேற்றுமைப் புணர்ச்சியாமென்க. "சுரையாழ வம்மி மிதப்ப" என்பதனுள் மொழிமாற்றுய்ச் சுரைமிதப்பவெனத் தழுவுதொடராகவருவழி இயல்பாகமுடி யும் எழுவாய்ப்புணர்ச்சி சுரையாழவெனத் தழாத்தொடராய் உடம்படுமெய் தோன்றிமுடிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாம் தழாத்தொடராய அல் வழிப்புணர்ச்சியாமென்க.

மாடத்தைதக்கட்டினனென வேற்றுமையுருபும் சாரியையும்விரிந்துநின்ற இருமொழியொருசந்தியாகிய வேற்றுமைச்சந்தியை வேற்றுமைநயங்கருதி நான்குசொல் மூன்றுசந்தியாக்கி, உருபுஞ்சாரியையும் இடைச்சொல்லாதலின் அல்வழியுள் இடைச்சொற்சந்தியென்று கோடலுமொன்று.

†"எட்டே வேற்றுமை" என மேற்கூறுவார் எழுவாயும்விளியுமொழித்து 'வேற்றுமையைம்முதலாறு' என்றதென்னையெனின், பெயர்ப்பொருளை வேற் றுமை செய்தலான் வேற்றுமை யெட்டென்பார், எழுவாய்க்கும் விளிக்கும் உருபு பெயரும் பெயரது விகாரமுமன்றி வேறுருபின்மையின் அவ்விரண்டி னையுமொழித்துத் தமக்கென உருபுடையன இடைநின்ற ஆறுவேற்றுமையு மேயாதலின், அவற்றின் உருபாறும் தொக்கும் விரிந்தும் இடைநிற்க அவ்வா றோடு பதங்கள் பொருந்தும் புணர்ச்சியை வேற்றுமைப்புணர்ச்சியென்று ரென்க.

வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகையென்னும் அல் வழிப்புணர்ச்சியாய தொகைநிலைத்தொடர்மொழிகளை ஒருமொழிகளென் பாருமுளர்; அவர்கூற்றுத் தாய்மலடியென்றாற்போலும். (உ)

## இயல்புபுணர்ச்சி.

கருரு. விகார மனைத்து மேவல தியல்பே.

எ - ன், மேல் இயல்பொடுவிகாரத்தியையவென்றார், அவற்றுள் இயல் பாவது உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேல்வரும் விகாரவகையனைத்தும் மேவாதது இயல்பு புணர்ச்சியாம். எ - று.

(வ - று.) பொன்மலை, புகழழகிது, ஒளிமணி எனவரும்.

இயல்புக்கு விதிகூறவேண்டியவதென்னையெனின், மலர்க்கலை தொடுத் தானென விகாரமாயவழி மலரானியைகலையைத்தொடுத்தானெனவும், மலர்கலை தொடுத்தானென இயல்பாயவழி மலரையுங்கலையையுந் தொடுத்தானெனவும் பொருள் வேறுபடுதலிற் கூறவேண்டுமென்க. (ரு)

* அகநா. ச.     † நன். சூ. உசுக.

## விகாரப்புணர்ச்சி.

கருச. தோன்றறிரிதல் கெடுதல் விகாரம்
மூன்று மொழிமூ விடத்து மாகும்.

எ - ன், விகாரமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மெய்யேனும் உயிரேனும் உயிர்மெய்யேனும் சாரியையேனும் ஒன்றும்பலவும் தோன்றுதலும் திரிதலும் கெடுதலும் மேற்சொன்ன விகாரமாம். இம்மூவகைவிகாரமும் நிலைமொழிவருமொழிகளின் முதலிடைகடையென்னுமூன்றிடத்தும் ஏற்றபெற்றிவரும். எ - று.

(வ - று.) பூக்கொடி, பூங்கொடி: வருமொழிக்குமுதலில் மெய்தோன்றின. பஃறலை: வருமொழிமுதலினும் நிலைமொழியீற்றினும் மெய்திரிந்தன. நிலவலயம்: நிலைமொழியீற்றின்மெய்கெட்டது. அறுபது: நிலைமொழிமுதலுயிர்திரிந்து வருமொழி இடையொற்றுக்கெட்டது. பல்பொருள்: நிலைமொழியீற்றுயிர் கெட்டது. நாடுரி: நிலைமொழியீற்றுயிர்மெய்கெட்டு டகரந்தோன்றிற்று. தமிழப்பிள்ளை, பனங்காய்: நிலைமொழியீற்றிற் சாரியைதோன்றின. காட்டாதொழிந்தன வந்தவழிக்காண்க.

இவ்விகாரங்கள், நிலைமொழிவருமொழிகளுள் ஒருமொழியைச்சார்ந்து வந்தன.

ஒருமொழிதொடர்மொழியென விதவாது பொதுப்பட மொழிமூவிடத்துமாகுமென்றமையின், இருமொழியைச்சார்ந்து வருவனவும் உளவெனக்கொள்க. அவைவருமாறு:—ஆவழகிது: வகரவுடம்படுமெய்தோன்றிற்று; உரியநெய்: யகர உயிர்மெய்தோன்றிற்று; புளியங்காய்: அம்முச்சாரியைதோன்றிற்று. இத்தோன்றல்விகாரங்கள் நிலைமொழிவருமொழிகளுள் ஒருமொழிக்கே உரியவன்றி இருமொழியையுஞ்சார்ந்து வந்தமைகாண்க. (ச)

## செய்யுள் விகாரம்.

கருரு. வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்
விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.

எ - ன், செய்யுள்விகாரமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அல்வழிவேற்றுமையான்வரும் மேற்கூறிய மூன்றுவிகாரமுமேயன்றி, ஆறக இங்ஙனங்கூறியவிகாரங்களும் வருவனவாம், செய்யுளகத்து அடிதொடைமுதலியநோக்கி அமைக்கவேண்டுமிடத்து. எ - று.

இவ்வதிகாரத்துட்கூறுஞ் செய்யுண்முடிபும் பிறவும் அடங்குதற்கு இன்னதுநோக்கியென வரைந்துகூறாராயினர்.

(வ - று.) "குறுத்தாட் பூதஞ் சுமந்த, அறக்கதி ராழியெம் மண்ணலைத் தொழினே:" இது குறுந்தாளெனற்பாலது குறுத்தாளென வலித்தவாறு. "தண்டையினினக்கிளி கடிவோள், பண்டைய ளல்லண் மானோக்கி னளே:" இது தட்டையெனற்பாலது தண்டையென மெலித்தவாறு. *"தீத்தொழிலே கன்றித்

* நாலடி. கயமை, க.

திரிதந் தெருவைபோற், போத்தறார் புல்லறிவி னார்:'' இது, 'பொத்தறார்' எனற்பாலது போத்தறாரென நீட்டியவாறு. * "யானை, பெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன், திருத்தார்நன் றென்றேன் றியேன்:'' இது, 'தீயேன்' எனற்பாலது தியேனெனக் குறுக்கியவாறு. † "சிறியிலை வெதிரி னெல்விளையும்மே:'' இது, 'விளையுமே' எனற்பாலது விளையும்மேயென ஒற்றில்வழி ஒற்றை விரித்தவாறு; இதனுள், 'சிறியவிலை' எனற்பாலது சிறியிலையெனத் தொகுத்தவாறு. ‡ "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறு மறிவு:'' இதுவும் தொட்டது, கற்றதெனற்பாலது தொட்டு, கற்றுஎனத் தொகுத்தவாறு. பிறவுமன்ன. (ரு)

கருசு. ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அடி தொடை முதலியநோக்கித் தொகுக்கும்வழித் தொகுத்தலன்றி வழங்கின்கண்மரூஉப்போலச் செய்யுட்கண்மரூஉவாய் அடிப்பாடாக ஒருமொழி முதல் இடை கடையென்று மூன்றிடத்தும் குறைந்துவருதலும் செய்யுள்விகாரமாம். எ - று.

(வ - று.) "மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி'' எ - ம், § "வேதின வெரிநி னோதிமுது போத்து'' எ - ம், "நீலுண் டுகிலிகை கடுப்ப'' எ - ம் முறையே தாமரை, ஓந்தி, நீலமெனற்பாலன குறைந்தவாறு காண்க.

செய்யுட்கேயுரியவிகாரங்களை ஈண்டுக்கூறியதென்னையெனின், செய்யுளகத்து அல்வழிவேற்றுமையான்வரும் மூன்றுவிகாரமும் இவ்வொன்பதுவிகாரமும் வருதலின் வேறுபாடறிதற்கென்க. (சு)

கருஎ. ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும்.

எ - ன், அல்வழிவேற்றுமைப் புணர்ச்சிவிகாரத்தின் வருவதோரையமறுத்தனுதலிற்று.

(இ - ள்.) ஒருபுணர்ச்சிக்கண், தோன்றல் திரிதல் கெடுதலென்றவிகாரம் எத்துணைவருமென்று ஐயுறற்க; ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் வரப்பெறும். எ - று.

'விகாரத் தியைவது புணர்ப்பு' எனவே ஒன்றுவருதல் கூறுதேயமைதலின் இரண்டுமூன்றுமென்றார்.

(வ - று.) யானைக்கோடு, நிலப்பனை, பனங்காயென முறையே காண்க. (எ)

## பொதுப்புணர்ச்சி.

கருஅ. எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்க ளியல்பும்
குறில்வழி யத்தனி யையொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.

---

* "பன்மாடக்கூடல்'' என்னுஞ் செய்யுளிறுதியிலுள்ளது.

† புறநா. கoகூ. ‡ திருக்குறள், ருகசு. § குறுந். கசo.

எ - ன், பொதுப்புணர்ச்சியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இயல்பாகவும் விதியாகவும் இருபத்துநான்கெழுத்தையும் ஈறாகவுடைய பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொலென்பன நிலைமொழியாகநிற்க, இவற்றிற்கு முன்னர்வரும் ஞகார நகார மகார யகார வகாரங்கள் அல்வழிவேற்றுமையாய இருவழியும் இயல்பாதலும் குற்றெழுத்தின்பின்வரும் யகரவொற்றே ஓரெழுத்தொருமொழியான உயிர் உயிர்மெய்யென்னும் ஐகாரமே நொவ்வே துவ்வே என்பவற்றிற்கு முன்னர்வரும் ஞகார நகார மகாரங்கள் பிறசொற்கண்முன் இயல்பாதலன்றி மிக்குமுடிதலுமாம்; ணகார ளகார னகார லகாரங்கட்குமுன்வரும் நகாரம் பிறவற்றின்முன் இயல்பாதலன்றித் திரியும். எ - று.

எவ்வகைமொழிக்குமென்றமையான், விதியீறும்பெற்றும்.

நகரம் இவ்வாறுதிரியுமென ஈண்டுக்கூறிக் குறைவுறுமையின், மேல வற்றோடு ஒருங்கெண்ணாது விதந்தார். புணரியலிடத்து யாண்டும் அல்வழி வேற்றுமையெனக் குறிப்பாயேனும் வெளிப்படையாயேனும் விதவாராயின், இருவழியுங்கொள்க.

(வ - று.) விள, பலா, புளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ, உரிஞ், மண், பொருந், மரம், பொன், மெய், வேர், வேல், தெவ், யாழ், வாள், எஃகு எனநிறுத்தி ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எ - ம், ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலுமை எ - ம், விளவைநாட்டினான், மண்ணைவைத்தான் எ - ம் வருவித்து இருவழியும் வருமொழிக்குமுதலாய மென்கணமும் இடைக்கணமும் இயல்பாயவாறுகாண்க. ஒழிந்தஉயர்திணைப்பெயர்முதலிய அறுவகைச்சொற்களினும் இவ்வாறேயொட்டுக. மெய்,கை:ஞான்றது, நீண்டது, மாண்டது எ - ம், ஞாற்சி, நீட்சி, மாட்சி எ - ம் இருவழியுமிக்கன. நொ, து: ஞெள்ளா,நாகா,மாடா என இவை வினையாகலின், அல்வழியில்மிக்கன. தொழிற்பெயரிறுதிமெய் உகரம்பெறுதலும் நகரத்திரிபும் மேல்வருஞ் சிறப்புச்சூத்திரத்துட்காண்க.

மெலிமிகலுமாமென எண்ணின்கண்ணிற்கும் எச்சவும்மையானே நொ,து என்னும் இரண்டு சொன்முன்னும் இடையினமிகலுமாமெனக் கூறினாராயிற்று.

அவை வருமாறு: நொய்யவளு, நொவ்வளவா, துய்யவளு, துவ்வளவா எனவரும். இடையினமிகுதல், குறில்வழியவ்விற்கும் தனியைக்கும் பொருந்தாமையின் உம்மையாற்றழீஇயினார், இவ்வாறு இடையினமிகுதலை ஆசிரியர் தொல்காப்பியரும், *"அவற்றுள் மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்" என உம்மையாற்றழீஇயினர். அச்சூத்திரத்திற்கு அவ்வாசிரியர்கருத்தன்றி வேறுரைசெய்வாருமுளர். நொ, துஎன்னும் இவ்விரண்டுசொல்முன்னும் மெல்லினமும்இடையினமும் மிகாவேற் புணர்ச்சியின்றி விட்டிசைபோலும். அன்றேல், வாழைபழம், கீரைகறி என்றாற்போலும்.

எகரவீற்றிற்கு உதாரணங்காட்டிற்றிலம்; அது வினாவிடைச்சொற்கணன்றி ஈறாகாமையானும், அவ்வினாவிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி மேற் கூறுதலானுமென்க.

இச்சூத்திரமுதலியன தொடர்ச்சொற்புணர்த்தலென்னுமுத்தி. (அ)

---

* தொல். தொகை, ந.

கருசு. பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பா மாவி யரமுன்
வன்மை மிகாசில விகாரமா முயர்திணை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இருதிணைப்பொதுவான பெயர்க்கும் உயர்திணைப்பெயர்க்கு மீறாகியமெய்கள் வல்லினமுதன்மொழிவந்தால் இயல்பாம். உயிரே, யகாரமே, ரகாரமே என்றுமிவ்வீற்று அவ்விருபெயர்கண்முன்னரும் வரும் கசதபக்கள் மிகாவாம். மெய்யுயிரீற்று உயர்திணைப்பெயர்கள் நாற்கணங்களோடும்புணரு மிடத்து நிலைமொழிவருமொழிகள் விகாரப்படுவனவும் சிலவுளவாம். எ - று.

வல்லினத்துள் மயங்காதனமயங்கின் ஈற்றுமெய் விகாரப்படுவனவுமுள வாகலிற் பொதுப்பட வலிவரினென்றும், வல்லினமிகுதற்குரிய ழகரம் அஃறிணைக்கன்றி இவ்விருபெயர்க்கும் ஈறாகாமையின், அதனையொழித்து யரமுன்னென்றும், வன்கணமேயன்றி ஏனைக்கணங்கள்புணரினும் விகாரப்படுமாதலின் இறந்ததுதழீஇய எச்சவும்மைகொடுத்து விகாரமுமாமென்னாது விகாரமாமென்றும், அவ்விகாரம் நிலைமொழிவருமொழியிரண்டினும் ஏற்றபெற்றியாக வருதலின் உயர்திணையீறென்னாது உயர்திணையென்றுங்கூறினார். உயர்திணைப் பெயரைப் பின்வைத்தார், பின்பும் எடுத்துவிதித்தற்கென்க.

(வ - று.) சாத்தன், கொற்றன், ஆண்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியன், சிறியன், தீயன், பெரியன் எ - ம், கை, செவி, தலை, புறம் எ - ம் பொதுப்பெயரிறுதி னகர ணகரங்கள் வன்மைவர இருவழியும் இயல்பாயின. ஊரன், அவன்: குறியன், சிறியன், தீயன், பெரியன் எ - ம், கை, செவி, தலை, புறம் எ - ம் உயர்திணைப்பெயர்களீற்று னகரம் வன்மைவர இருவழியும் இயல்பாயிற்று. பிறவுமன்ன.

சாத்தி, கொற்றி, தாய்: குறிது, சிறிது, நீது, பெரிது; குறியள், சிறியள், தீயள், பெரியள் எ-ம், கை, செவி, தலை, புறம் எ-ம் பொதுப்பெயரீற்று இகரயகரங்கள்முன்வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. நம்பி, விடலை: குறியன், சிறியன், தீயன், பெரியன் எ - ம், கை, செவி, தலை, புறம் எ - ம், அவர், ஒருவர்: குறியர், சிறியர், தீயர், பெரியர் எ - ம், கை, செவி, தலை, புறம் எ-ம், உயர்திணை இகர ஐகார ரகரங்கள் முன்வந்த வல்லினம் இருவழியு மிகாவாயின. பிறவுமன்ன.

கபிலபரணர், வடுகநாதன், அரசவள்ளல் எ - ம், ஆசீவகப்பள்ளி, குமரகோட்டம், குமரக்கோட்டம் எ-ம் இருவழியும் உயர்திணையுட் சில தமக்கேற்ற விகாரமாயின. பிறவுமன்ன. (சு)

கசூ0. எற்றியா வினாவிளிப் பெயர்முன் வலியியல்பே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முன்னீற்றுவினாமுன்னும் யாவென்னும் வினாப்பெயர்முன்னும், உயிரீற்று ஒற்றீற்றுய விளிப்பெயர்கள்முன்னும் வரும் வல்லினம் இயல்பாம்.

(வ - று.) நம்பியா கொண்டான், சென்றான், தந்தான், போயினான்; உண்கா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எ - ம், யாகுறிய, சிறிய, தீய,

பெரிய எ - ம் வினைமுன் வல்லினம் இயல்பாயின. நம்பி, நம்பீ, விடலை, விடலாய், கிள்ளை, கிள்ளாய், சாத்தி, சாத்தீ, தாய், தாயே; கொள், செல், தா, போ என உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் பொதுப்பெயரின் அண்மைவிளி முன்னும் சேய்மைவிளிமுன்னும் வரும் வல்லினம் இயல்பாயின. பிறவுமன்ன.

இறுதி ஏகார ஒகார வினைமுன்னர் வரும் வல்லினமியல்பாதற்கு உதாரணங் காட்டிற்றிலம், அவ்விரண்டற்கும் மேற் சிறப்புவிதி, "இடைச்சொல் லேயோ" என்னுஞ் சூத்திரத்துள் அடக்கிக்கூறுதலின். (௧௦)

௧௬௧. ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) உயிரையும் யரழவென்னு மூன்றொற்றையும் இறுதியாக வுடைய விகுதியுருபினவாய முன்னிலைமுன்னும், ஏவன்முன்னும் வரும்வல்லினம் இயல்புடனே விகற்பமாம். எ - று.

(வ - று) உண்டி, தின்றி, உண்டனை, தின்றனை, உண்டாய், தின்றாய்; உண்டனிர், தின்றனிர்: கொற்றா, சாத்தா, தேவா, பூதா; கொற்றரே, சாத்தரே, தேவரே, பூதரே என முன்னிலைவினைமுன் இயல்பாயின. கொணா, எறி, விடு, ஆய், சேர், தாழ்: கொற்றா, சாத்தா, தேவா, பூதா என ஏவன் முன் இயல்பாயின. விகற்பம் வந்தவழிக்கண்டுகொள்க. நடகொற்றா நடக்கொற்றா, எய்கொற்றா எய்க்கொற்றா, ஈர்கொற்றா ஈர்க்கொற்றா, தாழ்கொற்றா தாழ்க்கொற்றா என ஏவன் முன் விகற்பித்தனவென்று கோடலுமொன்று. இவ்வாறு அருகிவருதலின் இயல்பொடு விகற்பேயென விகற்பத்தைப் பிரித்துக்கூறினார்.

ழகாரவீறு முன்னிலைவினையேலாமையின் உதாரணம் காட்டிற்றிலம்.

முன்னிலைவினையென்றார் ஏவலை விதந்ததென்னையெனின், முன்னிலை வினையென்பது தன்மைவினை படர்க்கைவினைகட்கு இனமாகிய முன்னிலை வினையை உணர்த்துமல்லது இனமின்றி முன்னிலையொன்றற்கேயுரிய ஏவல் வினையையுணர்த்தாமையினென்க. (௧௧)

## உயிரீற்றுச் சிறப்புப்புணர்ச்சி.

௧௬௨. இஈ ஐவழி யவ்வு மேனை
உயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையும்
உயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும்.

எ - ன், உயிரீற்றுப்பதம்புணருஞ்சிறப்புப்புணர்ச்சி கூறுவான்றொடங்கி உயிரீற்றின்முன் உயிர்முதல்வந்து புணருமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இகர ஈகார ஐகாரங்களின்வழியே யகரமும், அ ஆ உ ஊ ஒ ஓ ஔவென்னும் இவ்வேழுயிர்களின்வழியே வகரமும், ஏகாரத்தின்வழியே யகரமும் வகரமும் உயிர்முதன்மொழிவந்தால் உடம்படுமெய்யென்றாகும்.

இருமையென்பது, * "ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந் தான்புக் கழுந்து மளறு" என்றாற்போலக் குணியைக் குணமாகக்கூறுவதொரு மரபுவழுவமைதி.

* திருக்குறள், ௮௩௫.

(வ - று.) மணியழகிது, தீயெழுந்தது, அவையெளவியம் எ - ம், விளவழகிது, பலாவழகிது, கடுவழகிது, பூவழகிது, நொவ்வழகா, சோவழகிது, கௌவழகிது எ - ம், * "ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்", சேவழகிது எ-ம் அல்வழிக்கட் கூறியமுறையேஉடம்படுமெய்பெற்றன. மணியொளி, விளவடி, மணியையளித்தானென வேற்றுமைக்கண்வந்தன. பிறவுமன்ன.

† "மாயிருஞாலம்" என உரிச்சொல்லாகாரவீற்றின்வழி யகரவுடம்படுமெய்வந்ததென்னையெனின், அஃது "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்" என்னுஞ் சூத்திரத்தான் அமையுமென்க.

"விண்வத்துக் கொட்கும்" என மெய்யீற்றின்வழியும் உயிர்வரினுடம்படுமெய்பெறுமென்பாரு முளராலோவெனின், உயிரீற்றின்முன் உயிர்முதல்வரின் உயிரோடுயிர்க்கு மயக்கமின்மையிற் புணர்ச்சியின்றிவிட்டிசைத்து நிற்குமாதலின் உடம்படாதஅவ்விரண்டும் உடம்படுதற்பொருட்டு இடையேவருமெய்யை உடம்படுமெய்யென்பவாகலின், வருமுயிரேறி ஒற்றுமைப்பட்டுப் புணர்தற்குரிய மெய்யீற்றின்வழித்தோன்றுமெய்யை உடம்படுமெய்யென்பது பொருந்தாது. அவ்வகரமெய்தோன்றுதற்கு விதி வருஞ் சூத்திரத்துட்கூறுப.

உடன்படலென்பது உடம்படலென மரீஇயிற்று. ‡ "உடம்பா டிலாதவர் வாழ்க்கை" என வருதல்காண்க. உயிரோடு உயிர்க்கு மயக்கமின்மையின், வருமுயிர்க்கு உடம்பாக அடுக்குமெய் உடம்படுமெய்யெனப் பொருள்கூறுதலுமொன்று.

இவ்வுடம்படுமெய்களின் தோற்றம் ஏனைத் தோன்றல்விகாரம்போலாது மயங்காதன மயங்குதற்கு ஆசுபோலவந்தமையின் இப்புணர்ச்சியை இயல்புபுணர்ச்சியென்று கூறுவார்கூற்றும் அமையுமென்பார் உடம்படுமெய் தோன்றுமென்னாது உடம்படுமெய்யென்றாகுமென்றார்.

ஈண்டும் எகரவீறெழியக்கொள்க. (கஉ)

கசுரு. எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுத னெறியே.

எ - ன், 'இ ஈ ஐவழி' என்னுஞ் சூத்திரத்தானும் 'எண்மூவெழுத்தீற்று' என்னுஞ்சூத்திரத்தானும் எய்தியவிதிவிலக்கிப்பிறிதுவிதிவகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) எ என்னும் வினாவிடைச்சொன்முன்னும், அ இ உ என்னும் மூன்று சுட்டிடைச்சொன்முன்னும், உயிரும் யகரமும் வந்தால் வகரமும், ஒழிந்தமெய்கள்வந்தால் அம்மெய்களும், செய்யுட்கட் சுட்டுநீண்டிசைத்தவழி யகரமும் மிகுதல்முறைமையாம். எ - று.

(வ - று.) எவ்வணி, எவ்யானை; அவ்வணி, அவ்யானை; இவ்வணி, இவ்யானை; உவ்வணி, உவ்யானை எ - ம், அ இ உ : குதிரை, சேனை, தண்டு,

* சீவக. கூுகஉ.

† "மாயிரு ஞால மெல்லா மலரடி வணங்கும் போலும்" தேவாரம், திருவாவடுதுறை.

‡ திருக்குறள், அகூO.

படை, ஞாலம், நாடு, மனை, வளை எ - ம், எங்ஙனம், அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம் எ-ம், * "ஆயிடைத்தமிழ் கூறுநல்லுலகத்து" எ-ம் வகரமும் வந்த மெய்களும் யகரமும் முறையே தோன்றியவாறுகாண்க. பிறவுமன்ன.

யகரமுமெய்யின் வவ்வுமென்றமையின், இங்ஙனந்தோன்றிய வகரயகரங்கள் உடம்படுமெய்யல்லவென்பதூஉம், சுட்டுநீளினெனவே நீடல் உடன்பாடென்பதூஉம், நீடல் வரைநிலையன்றென்பதூஉம், யகரந்தோன்றுமெனவே இந்நீட்சி அச்சொற்றொடைநோக்கி நீட்டும்வழி நீட்டலன்றென்பதூஉம், யகரமுமென்ற எண்ணின்கணின்ற இழிவுசிறப்பும்மையான் யகரத்தோற்றம் உயிர்வரும்வழியன்றிப் பிறவழித் தோன்றாதென்பதூஉம், செறியென்றமையின் இவ்வாறு செறிப்படவருவனவெல்லாம் கோடல்வேண்டுமென்பதூஉம் பெற்றாம். † "ஆவயினான்" எனச் சுட்டுநீண்டு பிறவழி யகரந்தோன்றாதாயிற்று. இவ்வாறு செறிப்படவருவனவருமாறு: யாங்ஙனமென யாவினுமுன் வருமொழி நகரம் மிகுந்தது. ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனமெனச் சுட்டுநீண்டவழியும் வருமொழி நகரம்மிகுந்தது. ஈது எ - ம், ஆங்கு, ஈங்கு, ஊங்கு எ - ம், ஆண்டு, ஈண்டு எ - ம், சுட்டுப்பெயர்ச்சொல் நீண்டன. "விண்வத்துக்கொட்கும்" எ - ம், "செல்வுழிச் செல்க" எ - ம், "சார்வுழிச் சார்ந்த தகையள்" எ - ம் மெய்யீற்றுமுன் உயிர்வருங்கால் இங்ஙனம் உடம்படுமெய்யன்றெனக் கூறும் வகரந்தோன்றின. பிறவுமன்ன. (க௩)

கசுச. உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி.

எ - ன், குற்றியலுகரத்திற்கு "இ ஈ ஐவழி" என்னுஞ்சூத்திரத்தான் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தலும் முற்றியலுகரத்திற்கு அச்சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) குற்றியலுகரம் உயிர்முதன்மொழிவந்தால் தனக்கு ஆதாரமானமெய்யிற்கத் தான்கெடும்; யகரமுதன்மொழிவந்தால் இகரமாகத்திரியும்; முற்றியலுகரமும் அவ்விருவிதியும்பெறும் ஒரோவிடத்து. எ - று.

(வ - று.) நாகரிது, நாகியாது; நாகின்வளர்ச்சி, "நாகியமன்கொள்ளான்", தனைதடி எ - ம், கதவு, செலவு: அழகிது, யாது எ - ம், அதனை, இதனை எ - ம் இருவழியும்வந்தன. பிறவுமன்ன.

கெடுமெனாது ஒடுமென்றமையாற் குற்றுகரம் ஒரோவழி இ ஈ ஐவழி யென்னும் பொதுவிதி பெறுதலுங்கொள்க.

(வ - று.) ‡ "தன்முக மாகத் தானழைப் பதுவே", "ஆறனொருமைக் கதுவு மாதுவும்" எனவரும்.

ஆசிரியர் தொல்காப்பியர் § "அவற்றுள், மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" எ - ம், "குற்றிய லுகரமு மற்றென மொழிப" எ - ம் கூறிய சூத்திரங்களுள், 'அற்று' என்னு மாட்டேற்றிற்கு மெய்யீறுபோலக் குற்றியலுகர வீறும் புள்ளியொடுநிற்குமெனப் பொருள்கொள்ளாது இம்மூன்றுஞ் சூத்தி

* தொல். பாயிரம்.
† தொல். புள்ளி, க.
‡ நன். சூ. ௩0௩.
§ தொல். புணர், உ.

ரத்தைப் *"புள்ளி யீற்றுமுன் னுயிர்தனித் தியலாது, மெய்யொடு சிவணு மவ்வியல் கெடுத்தே" என்னுஞ் சூத்திரத்தாற் சூத்திரச்செய்தி மாட்டெறிந்ததாகக் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுத்துக் கெடாது இரண்டுயிரும் ஒருங்குநிற்குமெனக்கூறிச் சாதிப்பாருமுளர். அவ்வாறுகூறல் மாட்டேற்றிலக்கணமன்றாம்; அன்றியும் மெய் உயிரென்பன உவமவாகு பெயராய்வந்த காரணக்குறியல்லவாகவேண்டும். அதனால், அஃது அந்நூலாசிரியர்க்குக் கருத்தன்றாம். இவ்வாறு அந்நூலொடு பொருந்தாவுரைக்கோள் பலவுள. அவற்றை அந்நூற்கருத்தாகத் துணிந்து அந்நூலோடு இந்நூல் மறுதலைப்பட்டதென்று கோடற்க. (கசச)

## உயிரீற்றுமுன்வல்லினம்.

கசுரு. இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்
கசதப மிகும்விதவாதன மன்னே.

எ - ன், உயிரீற்றின்முன் வல்லினம்புணருமாறு உணர்த்துவான்றொடங்கி உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் அஃறிணைப்பெயர்க்கும் வினைமுதலியவற்றிற்கும் எய்தாததெய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) இயல்பினானும் விதியினானும் இறுதியாகநின்ற உயிர்களின் முன்னர்வரும் கசதபக்கள் பெரும்பாலும் மிகும், விதந்துசொல்லாதன. எ-று.

விதியீறாவன: முன்னையஉயிரீறும் மெய்யீறுமொழிய உயிரீறாய்நிற்பனவும் யாதானும் ஒருயிர் பின்னர் இறுதிக்கட்டோன்றி நிற்பனவுமாம்.

விதப்பாவன சிறப்புவிதி.

(வ - று.) ஆடூஉக்குறியன், சிறியன், தீயன், பெரியன், நம்பிக்கொற்றன் எ - ம், சாத்திப்பெண் எ - ம், தாராக்கடிது எ - ம், ஒற்றைக்கை, வட்டக்கல், தாழக்கோல் எ - ம் அறுவகைப்பெயர்ப்பதமுன் அல்வழியில் மிக்கன. இவற்றுள், ஒற்றை, வட்ட, தாழ என்பன விதியீறு. ஆடூஉக்கை, செவி, தலை, புறம், † எட்டிப்பூ, காவிதிப்பூ எ - ம்; விளக்கோசி, கடுக்காய், ஆட்டுக்கால் எ-ம், உயர்திணையஃறிணைப்பெயர்ப்பதமுன் வேற்றுமைக்கண் மிக்கன. ஆடிக் கொண்டான், ஆடாக்கொண்டான், ஆடூஉக்கொண்டான், ஆடெனக்கொண்டான், ஆடக்கொண்டான், உண்பாக்குச்சென்றான், பூத்துக்காய்த்தது; பொன்னெனப்பரந்தது, சாலப்பகைத்தது எ - ம், இருளின்மிக்கண்டார், பொருநன்மிக் காணார் எ-ம் பலவகைத் தெரிநிலை குறிப்பாய வினையெச்சங்கண்முன் மிக்கன. மற்றைச்சாதி எ - ம், ‡ கடிக்கமலம் எ -ம், சொன்றிக்குறிசி எ - ம், கங்கைச் சடை எ - ம் இடைச்சொல் உரிச்சொல் இசைச்சொல் வடசொன்முன் மிக்கன. பிறவுமன்ன.

விதவாதன பெரும்பாலுமிகுமெனவே விதந்தன சிறுபான்மைமிகுமெனவும், விதவாதன சிறுபான்மை மிகாவெனவுங் கூறினாராயிற்று. அவைவருமாறு:

---

* தொல். புணர், ஙசு.

† "எட்டிப்பூப்பெற்று" மணி. உஉ: ககங.

‡ "கடிக்கமலத் திருந்தபனம்" தே; "காரொளிய திருமேனி"—கோயில்; "கடிக்கமல மலர்மேவி னிதுறை யண்ணல்" தே. அப்பர். "கங்கை [illegible]"

பொற்கொற்று, நக்கொற்று, சாத்தா, தேவா, பூதா என்பன, "ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே" என்று முற்கூறிய விதப்புவிதிபெறாது மிருந்தவை. எனவே, கோ தூமுன் மூவினமுமிகுமென்றாராயிற்று. ஏரிகரை, குழந்தைகை, குழலிசை, * "பழமுதிர் சோலை மலைகிழ வோனே" எ-ம், கூடப்புகாரம், நாட்டேதனம், நாடுபுகழ் எ-ம் இருவழியும் பின்விதவாதன மிகாவாயின. பிறவுமன்ன. (௧௫)

௧௬௬. மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.

எ-ன், உயிரீற்றுச் சிலமரப்பெயர்முன் வரும்வல்லெழுத்திற்கு எய்தியது ஒருவழிவிலக்கிப் பிறிதுவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) உயிரீற்று மரப்பெயர்கண்முன் மேலைப்பொதுவிதியான் வல்லெழுத்துமிகாது வருமவல்லெழுத்திற்கினமான மெல்லெழுத்து மிகப்பெறுவனவுஞ்சிலவுள, வேற்றுமைக்கண். எ-று.

பெறுவனவென்னுஞ்சொல் பெறுனவெனத் தொகுத்தல்விகாரமாயிற்று.

(வ-று.) விளங்காய், களங்கனி, மாங்கொம்பு, செதிள், தோல், [1] பூ எனவரும். பிறவுமன்ன.

இனமெல்லெழுத்தென்றமையிற் பொதுவிதி இங்காட்டேலாவெனக. ()

## அகரவீற்றுச் சிறப்புவிதி.

௧௬௭. செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரி னெச்சமுற் றற னுருபே
அஃறிணைப் பன்மை யம்மமு னியல்பே.

எ-ன், உயிரீறுகட்குத் தனித்தனி சிறப்புவிதியுணர்த்துவான்றொடங்கி, அகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியதுவிலக்கல் நுதலிற்று.

(இ-ள்.) இங்ஙனம்விதந்த அகரவீற்றுச் சொற்கள் ஆறன்முன்னும் வரும் வல்லினம் இயல்பாம். எ-று.

பல்வகையென்பதனை முற்றென்பதனோடுங்கூட்டுக. பெயரினெச்சமென இன்சாரியை தவிர்வழிவந்தமையின், விரித்தல்விகாரம்.

இதன்முதலிறுதிகளின் அகரவீற்றுச்சொல் வைத்தமையான் இடையவும் அகரவீற்றவென்பதூஉம், பல்வகையென்றதனான் வினையடிநான்கினும்பிறந்த பெயரெச்சமுற்றென்பதூஉம், முற்றென விதந்தமையின் அஃறிணைப்பன்மையென்றது பெயரென்பதூஉம் பெற்றாம்.

வினையடிநான்காவன: இயல்பாகிய வினையடியொன்றும், ஏனைப்பெயரிடையுரியடியாகப்பிறந்த வினையடிமூன்றுமாம்.

(வ-று.) உண்ணியகொண்டான், சென்றான், தந்தான், போயினானெனச் செய்யியவென்னும் வினையெச்சமுன் இயல்பாயின. உண்ட, உண்ணு

* திருமுருகாற்றுப்படை, ௩௧௭.
(பி-ம்.) [1] 'பழம்'

நின்ற, உண்ணுத எ-ம், கடைக்கணித்த, சித்திரித்த, வெளுத்த, சிவணிய, கழுவிய, அமரிய எ-ம், நின்னென்ற, பொன்போன்ற எ-ம், சான்ற, உற்ற எ-ம், குதிரை, செந்நாய், தகர், பன்றி எ-ம் நால்வகைத் தெரிநிலைப்பெயரெச்சமுன்னும் இயல்பாயின. அமர்முகத்த, *"கடுங்கண்ண", சிறிய, பெரிய, உள, இல, பல, சில எ-ம், பொன்னன்ன எ-ம், கடிய எ-ம், குதிரை, செந்நாய், தகர், பன்றி எ-ம் மூவகைப் பெயரெச்சக்குறிப்பின்முன் இயல்பாயின. முற்றிற்கும் பொருள்வேறுபாடன்றிச் சொல்வேறுபாடின்மையின் இவையே காட்டாகக்கொள்க. வாழ்க, வாழிய: கொற்றா, சாத்தா, தேவா, பூதா என வியங்கோண்முற்றின்முன் இயல்பாயின. 'முற்றுமுன்னியல்பாம்' என்றமையின், அருத்தாபத்தியான் இவ்வினைமுற்று வினையெச்சமாயும் குறிப்பு முற்று ஈரெச்சமாயுநின்றவழி வரும் வல்லினம் இயல்பாதலுங்கொள்க.

(வ-று.) உண்டகண்டன எ-ம், அமர்முகத்தகுதிரை எ-ம், அமர்முகத்த கலக்கின எனவும் வரும். தனகைகள், செவ்கள், தாள்கள், பதங்கள் என ஆறனுருபின் முன் இயல்பாயின. பலகுதிரை, செந்நாய், தகர், பன்றி எ-ம், பலகொடுத்தான், செய்தான், தந்தான், படைத்தான் எ-ம் இருவழியும் அஃறிணைப் பன்மைப் பெயர்முன் இயல்பாயின. பிறபெயர்களும் அன்ன. அம்மகொற்றா, சாத்தா, தேவா, பூதா என உரையசையிடைச்சொன்முன் இயல்பாயின.

ஒருசொல்லையே பலவிடத்துங்காட்டியது என்னையெனின், இங்ஙனங்காட்டியவற்றுட் பலவென்றவொருசொல் பெயரெச்சக்குறிப்பாயும், வினையெச்சக் குறிப்பாயும், குறிப்புவினைமுற்றாயும், குறிப்புமுற்றீரெச்சமாகும் பெயரெச்சக் குறிப்பாயும், வினையெச்சக்குறிப்பாயும், குறிப்புவினையாலணையும் அஃறிணைப் பன்மைப்பெயராயும், பொருளாதியாறனுட் பண்புகாரணமாகவரும் அஃறிணைப் பன்மைப்பெயராயும் அறுவகைப்பட்டுப் பொருணோக்கமுதலியவற்றான் இன்ன தென்று துணியப்படுமாதலானென்க. பிறசொற்களுமன்ன. இவ்விகற்பமெல்லாம் சொல்லதிகாரத்துட்காண்க. (கள)

கசுஅ. வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே.

எ-ன், வியங்கோண்முற்றுச்சொற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்திய வழிப்புணரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

(இ-ள்.) வாழியவென்னும் வியங்கோண்முற்றினது ஈற்றுயிர்மெய் குறைதலுமுரித்து; குறைந்து இகரவீறாய்நின்றவழியும் வல்லினம் பொதுவிதியான்மிகாது சிறப்புவிதியுட்கூறிய இயல்பேயாம். எ-று.

(வ-று.) "ஆவாழி யந்தணர் வாழி", † "படாஅதிவாழி" என ஈற்றுயிர்மெய் குறைந்துவந்தது. வாழி கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனக் குறைந்தவழியும் வல்லினமியல்பாயின.

[illegible] முடித்தபின்பு அம்மைத்தனைச்சுட்டிப் புணர்ச்சிவிதிகூறுதலானும் செய்யுளிறுதிக்கண் வாழியெனமுடிந்துநிற்றலானும் இது புணர்ச்சி

* "கடுங்கண்ணகொல்களிற்றால்" புறநா. கச.

† திருக்குறள், கஉகo.

விகாரமன்று; கடைக்குறையென்பதூஉம், இவ்வடிப்பாடாகக் குறைந்தியலுந் தன்மை செய்யியவென்னும் வாய்பாட்டு வாழியவென்னும் வினையெச்சத்திற் கின்மையின், வாழியவென்னும் வியங்கோண்முற்றிற்கே இவ்விகாரங்கூறினு ரென்பதூஉம் பெற்றாம். (௧அ)

௧௬௯. சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி.

எ - ன், சாவவென்னுநிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) சாவவென்னும் செயவென்னெச்ச வினைச்சொல்லினது ஈற்றுயிர்மெய் கெட்டுப் புணர்தலும் விதியாம். எ - று.

(வ - று.) சாக்குத்தினான் எனவரும்.

இப்புணர்ச்சி சாவக்குத்தினானென்னும் புணர்ச்சிபோற்சிறந்தது அன்மையிற் சாதலுமென்றும், ஒரோவழி அருகிவருதலின் விதியென்றுங்கூறினார். (௧௯)

௧௭௦. பலசில வெனுமிவை தம்முன் றாம்வரின்
இயல்பு மிகலு மகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற.

எ - ன், வருமொழிக்கு எய்தியதிகந்துபடாமைக்காத்தலும் அதன்மேற் சிறப்புவிதியும் நிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தலும் நுதலிற்று.

மிகுதல் செய்யியவென்னுஞ் சூத்திரத்தால் விலக்கி ஈண்டுவிதித்தமையிற் சிறப்புவிதியாயிற்று.

(இ - ள்.) பலசிலவென்னும் இவ்விருசொல்லும் தம்முன்னர்த் தாம் வருமாயின் இயல்பாகலும், மிகுதலும், அகரங்கெட லகரம் றகரமாகலும், இவற்றின்முன் பிறமொழிகளுள் யாதானுமொன்றுவரின் அகரம் நிற்றலும் நீங்கலுமுளவாம். எ - று.

(வ - று.) பலபல, சிலசில என இயல்பாயின. பலப்பல, சிலச்சில என மிக்கன. இம்மிகுதி இயல்புபோற் பயின்றுவாராமையின், வல்லெழுத்து விகற்பமாதலுமென்னாது இயல்பும் மிகலுமென்றார். பற்பல, சிற்சில என அகரமேக லகரம் றகரமாயின. பலகலை, பல்கலை; பலசாலை, பல்சாலை; பலதாழிசை, பஃறாழிசை; பலபடை, பல்படை; பலஞானம், பன்ஞானம்; பலநாள், பன்னாள்; பலமணி, பன்மணி; பலவளை, பல்வளை; பலயானை, பல்யானை; பலஅணி, பல்லணி; பலஆயம், பல்லாயமெனப் பிறவரின் அகரம் விகற்பமாயின. சிலவென்பதற்கும் இவ்வாறேகொள்க.

பிறவென்றதனானே பல்பல, சில்சில என அகரமேக லகரம் றகரமாகாது அருகிவருதலும் பிறவல்லினமொழிவரின் லகரம் றகரத்தொடு உறழும்வழி உறழாது இயல்பாதலும், அகரநிற்றற்புணர்ச்சியுள் அமையாதொழிந்தன உளவேல் அவையுங்கொள்க.

அகரங்கெட்ட பல்லாயமுதலியன நன்மை, வன்மை, மென்மை, அன்மை, இன்மை என்பனபோல லகரமெய்யீற்றுப் பண்புப்பெயராய் நின்று வருமொழியோடு புணர்ந்தனவன்றே, அவற்றை அகரவீற்றனவாகவைத்துப் புணர்த்ததென்னை

யெனின், அப்பண்படி பன்மை சின்மையெனப் பகுதிப்பொருள்விகுதியோ டேனும் பலர், பல, சிலர், சில என விகுதிப்பொருள்விகுதியோடேனுமன்றித் தனித்துநில்லா ஒற்றுமை நயம்பற்றியென்க.

இஃது ஒன்றினமுடித்தறன்னின முடித்தலென்னு முத்திக்கினம்.

அகரம் விகற்பமாமென்ற துணையானே பல் சில்லெனப் பண்படிதோன்றினமையின் இவ்விதி அல்வழிக்கேயென்பது கூறுதேயமையுமென்க. (உ0)

## ஆகாரவீற்றுச் சிறப்புவிதி.

### களக. அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா.

எ - ன், ஆகாரவீற்றுச்சொல்லுட் சிலவற்றிற்கு எய்தியது ஒருமருங்கு விலக்குதனுதலிற்று.

(இ - ள்.) அல்வழிக்கண் ஆவும் மாவுமாகிய இருபெயரும், மியாவென்னு முன்னிலையசையிடைச்சொல்லும், ஆகாரவீற்று அஃறிணைப்பன்மை எதிர்மறைமுற்றுவினையுநிற்க இவற்றின்முன்வரும் வல்லினம் மிகா. எ - று.

(வ - று.) ஆகுறிது, மாகுறிது, சிறிது, தீது, பெரிது எ - ம், கேண்மியாகொற்று, சாத்தா, தேவா, பூதா எ - ம், உண்ணுகுதிரைகள், தின்னு குதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் எ - ம் வரும்.

ஆமா வென்றதுணையானே காட்டாவெனவும் பொருட்ட இரட்டுறமொழிந் தமையான் ஆமாகுறிது, சிறிது, தீது, பெரிதென மிகாமையும், முற்றுமுன் மிகாவென்றமையின் அருத்தாபத்தியான் அவ்வினையாலணையும்பெயர்முன் உண்ணுகுதிரைகள், தின்னுகுதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் என மிகாமையும், அவ்வினைமுற்றுவினையெச்சமாயவற்றின்முன் உண்ணுகிடந்தன, தின்னுகிடந்தன, சென்றன, தந்தன, போயின எனமிகாமையுங்கொள்க. உண்ணுக்குதிரைகள், உண்ணுக்கிடந்தனவெனப் பொதுவிதியான் மிகுமேல் எதிர் மறைப்பெயரெச்சமும், செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சமுமா மென்க. (உக)

### களஉ. குறியதன் கீழாக் குறுகலு மதனோ டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.

எ - ன், ஆகாரவீற்றுட் சிலசொல்லினது இறுதிக்கு எய்தாததெய்து வித்தலும் அவ்வழிவருவதோர் ஐயம்அறுத்தலுநுதலிற்று.

(இ - ள்.) குற்றெழுத்தின்கீழ் நின்ற ஆகாரம் குறுகலும் அக்குறுக லுடனே உகரம்பெறுதலும் அவ்விரண்டுமின்றித் தன்னியல்பினிற்றலுமாகிய மூன்றுவிதியும்பெறும், செய்யுட்கண். எ - று.

(வ - று.) * "சுறமறிவன துறையெல்லாம்", "நிலவிரிகானல்வாய்" எ - ம், † "இறவுப் புறத்தன்ன", "சுறவுக்கோட்டன்ன", "மருவின்னென் செய்யு மோ நிலவு" எ - ம், ‡ "நிலாவணங்கு வெண்மணலே னின்று", "செடிய கழியுமிரா" எ - ம் முறையேகாண்க.

ஈண்டு இயல்பு ஐயமறுத்தற்குரைத்தாரென்க.

---

* யா - வி. மேற்.    † நற். கக.

‡ யா - வி. மேற். "குலாவணங்கு" என்னுஞ்செய்யுளிலுள்ளது.

இம்மூன்றுமாந்தாக்கினெனவே வழக்கின் இரண்டும் ஒன்றுமாமென்றா ராயிற்று.

வ - று. உதித்தது நிலவு, நிலா, கண்டேன்களவு, கள எனக் குறுகக லோடு உகரமேற்றலும் தன்னியல்பு மாறிய இரண்டும் வந்தன. தாரா மிடா எனத் தன்னியல்பு ஒன்றுமாய்நின்றன.

இவ்விகாரங்கள் அல்வழிவேற்றுமைப்புணர்ச்சியான் வந்தனவல்லவென்று ஐயமறுத்தற்குக் கூறப்பட்டனவென்க; இவ்வாறுவருவனவெல்லாமன்ன. ()

## இகரவீற்றுச் சிறப்புவிதி.

க௭௩. அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.

எ - ன், இகரவீற்றுச்சொற்களுள் அன்றியின்றியென்னும் வினையெச்சக் குறிப்பிற்கு எய்தாததெய்துவித்தலும் எய்தியவழிப்புணரும் வல்லினத்திற்கு எய்தியது விலக்கலு நுதலிற்று.

(இ - ள்.) அன்றியின்றியென்னும் வினையெச்சக்குறிப்புச்சொல்லினது ஈற்றிகரம் செய்யுட்கண் உகரமாய்வருமாயிற் கசதபக்கள் பொதுவிதியான் மிகாது இயல்பாம். எ - று.

என்னென்னும் வினைத்தொகையும் எஞ்சென்னும் வினைத்தொகையும் சொல்லென்னு முதற்பெயரோடு முடியாது அதனகத்து இகரமென்னுஞ் சினைப் பெயரோடுமுடிந்தன.

இவ்வாறு [1]உடம்பொடுபுணர்த்திக் கூறினமையின் இதற்கிதுவே விதி யென்பதூஉம், உகரமாய்வரினெனவே உகரமாதல் உடன்பாடென்பதூஉம், அஃதொருதலையன்றென்பதூஉம் பெற்றாம்.

(வ - று.) * "நாளன்று போகிப் புள்ளிடை தட்பப் பதனன்று புக் குத் திறனன்று மொழியினும், வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப், பாடான் றிரங்கு மருவிப், பீடுகெழு மலையற் பாடி யோரே" எ - ம், "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கையோனே" எ - ம் வரும். பிறவுமன்ன. (உ௩)

க௭௪. உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகரவுயிர் மெய்யா மேற்பன வரினே.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தனுதலிற்று.

(இ - ள்.) உரியென்னும் அளவுப்பெயர்வரின், நாழியென்னும் அளவுப் பெயரினது ஈற்றுயிர்மெய்கெட அவ்வழி டகரவொற்றுவரும்; உரியென்னும் அளவுப் பெயரின்பின் யகரவுயிர்மெய்வரும்; அவ்வுயிர்மெய்வருதற்கேற்ற வரு மொழிகள் வருமாயின். எ - று.

(வ - று.) நாடுரி எ - ம், உரியவுப்பு, உரியப்பயறு, உரியமிளகு, உரிய வரகு எ - ம் வரும்.

* புறநா. க௨௪.
(பி - ம்.) 1 'உடம்படுபுணர்த்தல்'

ஏற்பனவரினெனவே ஏலாதனவரின் உரியரிசி, உரியர்மூக்கு, உரியெண்ணெய் என இச்சிறப்புவிதிபெறாது பொதுவிதியே பெறுதல்கொள்க. நாழியென்பது நாலுரியென இக்காலத்து மரீஇயிற்று. பொதுவிதியான்வருமுடம்படுமெய்யை இச்சிறப்புவிதிவிலக்கினமையின், நாழியுரியென்பது இலக்கணமன்றென்க.()

கஎரு. சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) புளியென்னுமரமும் பழமுமன்றி அறுசுவையுளொன்றையுணர்த்தும் பெயர்முன் வரும்வல்லினமிகுதலேயன்றி அவற்றிற்கு இனமாய மெல்லினமும் ஒரோவழி மிகும். எ - று.

(வ - று.) * புளிங்கறி சோறு, தயிர், பாளிதம் எனவரும்; பலசுவையுமடைத்தெனம் மிகுதியாற் புளிப்பாய கறியெனவும் புளிப்பையுடையகறியெனவும் விரிதலின் இருவழிக்கும் இவையே காட்டாமென்க. மென்மையுமென்ற இறந்ததுதழீஇய இழிவுசிறப்பும்மையாற் புளிக்கறியெனப் பொதுவிதியான்வரும் வல்லெழுத்தப்பேறே சிறப்புடைத்தென்க. (உரு)

## இகர ஐகாரவீற்றுச் சிறப்புவிதி.

கஎசு. அல்வழி இஐம் முன்ன ராயின்
இயல்பு மிகலும் விகற்பமு மாகும்.

எ - ன், இகரஐகாரவீற்று அஃறிணைப்பெயர்முன்வரும் வல்லினத்திற்கு ஒருவழி எய்தியதுவிலக்கலும் எய்தியது இகந்துபடாமைக்காத்தலும் எய்தியதுவிலக்கலுடன் விலக்காமையுமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இகரஐகாரவீற்று அஃறிணைப்பெயர்முன் வல்லினம் அல்வழிக்கண் வருமாயின் இயல்பாயும், பொதுவிதியான் மிகுந்தும் ஒன்றற்கே ஒருகால்மிகாது ஒருகால்மிகுந்தும் புணரும். எ - று.

இவ்வீற்று உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்வினைகட்குப் பொதுச்சூத்திரங்களான் இம்மூன்றுவிதியும் வரைந்துகிடக்கைமையின் இச்சூத்திரத்தாற்கூறுதல் மிகைபிறபொன்றுமே உரைந்துகிடந்த அஃறிணைப்பெயர்க்கென்பது பெற்றாம்.

ஒப்பின்முடித்தலான் ஐகாரவீறும் உடன்கூறினார்.

(வ - று.) பாத்தி, ஒசி, யானை, சுதினை: குறிது, சிறிது, தீது, பெரிது என இயல்பாயின. கிளிகுறிது, கிளிக்குறிது; தினைசிறிது தினைச்சிறிது என விகற்பித்தன. பிறவுமன்ன.

மிகுதி, எய்தியதிகந்துபடாமைக்காக்கினமையிற் காட்டாதொழிலம், (உசு)

## ஈகாரவீற்றுச்சிறப்பு விதி.

கஎஎ. ஆமுன் பகரவீ யனைத்தும்வரக் குறுகும்
மேலன வல்வழி யியல்பா கும்மே.

எ - ன், தொடர்மொழியுட் பின்னின்ற இடைக்கர் சொல்லினீற்று ஈகாரத்திற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியவழி அதன்முன்வரும்வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக்காத்தலும் நுதலிற்று.

---

* சீவக. கூஉஅ - உரை.

(இ - ள்.) ஆவென்னும்பெயர்முன்னின்ற பகரவீகாரம் இருவழியும் நாற்கணங்களும்வரிற் குறுகும்; குறுகி விதியிகரவீறாகநின்ற அதன்மேல்வரும் வல்லினம் அல்வழிக்கண் மேலைச்சூத்திரத்துட் கூறியவிதி மூன்றனுள் இயல்பைப்பெறும். எ - று.

குறுகுதற்குக்காரணம் அனைத்தும்வருதலேயன்றி மேனின்ற ஆவுமாமென்பார் ஆமுன்னென்றார்.

பகரவீயென்றது இடக்கரடக்கல். வருஞ்சூத்திரத்துட் பவ்வீயுமது.

ஆவென்னுஞ்சொல்லும் நாற்கணத்துளொன்றும் முன்னும்பின்னுந்தொடராவேற் குறுகாதென்பார் வரக்குறுகுமென்றும்.

இருமொழியை நிலைமொழியாக நிறீஇப் புணர்த்தமையான் வரும்விதி இகரவீறாதலின் எய்தியது இகந்துபடாமை இயல்பாகுமென்றார்.

ஆகும்மேயென்றது விரித்தல்விகாரம்.

(வ - று.) * ஆப்பியரிது, ஆப்பிகுளிரும், ஆப்பிநன்று, ஆப்பிவலிது எ - ம், ஆப்பியருமை, ஆப்பிக்குளிர்ச்சி, ஆப்பிநன்மை, ஆப்பிவன்மை எ - ம் இருவழியும் ஈகாரம்குறுகுதலும் அல்வழிக்கண் வல்லினவியல்பு இகந்துபடாமையுங்காண்க. (உஎ)

களஅ. பவ்வீ நீமீ முன்ன ரல்வழி
இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே.

எ - ன், ஈகாரவீற்று இடக்கர்ப்பெயர்க்கும் நீயென்னும்பெயர்க்கும் மீயென்னும்பெயர்க்கும் முன்னர்வரும்வல்லினத்திற்கு ஒருவழிஎய்தியதுவிலக்கலும் இவற்றுள் மீயென்பதன்முன்வரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக்காத்தலும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதிவகுத்தலுநுதலிற்று.

(இ - ள்.) பகரவொற்றையூர்ந்துநின்ற ஈகாரவீற்று இடக்கர்ப்பெயரும் நீயென்னுமுன்னிலையொருமைப் பொதுப்பெயரும் மீயென்னும் மேலாயபண்பையும் பண்பாகுபெயராய் மேலாய இடமுதலியவற்றையுமுணர்த்திநிற்கும் பலபொருளொருசொல்லும்நிற்க, இவற்றின்முன்வரும் வல்லினம் அல்வழிக்கண் இயல்பாம்; இங்ஙனம்புணரும் மீயென்னுஞ்சொற்குமுன் அல்வழிக்கண் வல்லெழுத்துமிகலுமாம் மெல்லெழுத்துமிகலுமாம். எ - று.

(வ - று.) பீ குறிது, சிறிது, தீது, பெரிது எ - ம், நீ குறியை, சிறியை, தீயை, பெரியை எ - ம், மீகண் எ - ம் இயல்பாயின. மீக்கூற்று, † மீக்கோளென எய்தியதிகந்துபடாமை மிக்கது. ‡ மீந்தோலென மெலிமிகுந்தது. பிறவும் ஏற்றபெற்றிவருவனவுளவேல் அவையுங்கொள்க.

மீகண்ணென்பது கண்ணினதுமேலிடமெனப் பொருள்தந்துநிற்குமேனும் ஆறனுருபின்பயனிலையாம் மீயென்னும்வருமொழி நிலைமொழியாய்நின்று வல்லெழுத்துமிகாது புணர்ந்தமையின் இலக்கணப்போலியாய் அல்வழியாயிற்று.

---

* ஆப்பி - கோமயம்; புறநா. உ௯௯; "ஆப்பிநீ ரெங்கும் தெளித்து" ஆசாா. ௬௬.

† மீக்கோள் - மேற்போர்வை; ஆசாா. ருக.

‡ மீந்தோல் - மேற்றோல்; அகநா. ரு - (பிரதிபேதம்.)

11

மீக்கூற்றென்பது புகழ். அது மேலாயசொல்லாற் பிறந்த புகழென்னு மேம்பாடெனப் பொருள்தந்துநிற்றலிற் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. மீக்கோளென்பது மேற்போர்வை. அதுயாக்கையின்மேற்கொள்ளுதலையுடையபோர்வையெனப் பொருள்தந்து நிற்றலின், ஏழாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. ஈண்டு மீயென்றது இடப்பொருளோடு ஏழாம்வேற்றுமையுருபின் பொருள்படநின்றதேனும் கண்ணுதியுருபு வேண்டாமையின், வேற்றுமைத்தொகையாயிற்று. மீந்தோலென்பது மேற்றோல். அது மேலாயதோலெனப் பொருள்தந்துநிற்றலிற் பண்புத்தொகை. இஃது இக்காலத்துப் பீந்தோலென மரீஇயிற்று.

நீயென்பதன்முன் வல்லினமியல்பாதல், "பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்" என்னுஞ்சூத்திரத்தான் அமையாதோவெனின், விகாரமொழியன்றி அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் ஆவியரக்களில் ஓரீற்றதாய்நின்றுபுணரும் பொதுப்பெயர்க்கே வன்மைமிகாவென இருவழிக்குங்கூறியது அமையுமன்றி அல்வழிக்கண் நீஎன உயிரீறாயும் வேற்றுமைக்கண் நின்னென நெடில் குறுகி னகரவொற்றீறாயும் விகாரப்பட்டுநிற்கும் அப்பொதுப்பெயர்க்கு அவ்விதி அமையாதென்க. (உஅ)

## முற்றுகரவீற்றுச் சிறப்புவிதி.

கஎகூ. மூன்று றுருபெண் வினைத்தொகை சுட்டீ
றூகு முகர முன்ன ரியல்பாம்.

எ - ன், முற்றுகரவீற்றுட் சிலவற்றின்முன்வரும் வல்லினத்திற்கு எய்தியதுவிலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றுகரவீற்று மூன்றுமுருபே ஆறுமுருபே இயல்பாயும் விகாரமாயும் வருமெண்ணே வினைத்தொகையே சுட்டுப்பெயரே யென்னுமிவற்றின்முன்வரும் வல்லினம் இயல்பாம். எ - று.

மூன்றுறுருபென்புழி ஆமென்னுஞ்சாரியை தொக்கன.

(வ - று.) சாத்தனொடுகொண்டான், சென்றான், தந்தான், போயினான் எ - ம், சாத்தனதுகை, செவி, தலை, புறம் எ - ம், ஏழு, ஒரு, இரு, அறு: கை, செவி, தலை, புறம் எ - ம், அடுகளிறு, சேனை, தானை, படை எ-ம், அது, இது, உது: குறிது, சிறிது, தீது, பெரிது எ - ம், அதுகண்டான், [1]செகுத்தான், தந்தான், படைத்தான் எ - ம் வரும்.

உதுகாண், உதுக்காண் என இயல்பாயும் விகாரமாயும் வரப்பெறுமாலோவெனின், அஃது "இயல்பின் விகாரமும்" என்னுஞ்சூத்திரத்து "அன்னபிறவும்" என்பதனான் அமையுமென்க. (உகூ)

கஅ0. அதுமுன் வருமன் றுன்றாந் தூக்கின்.

எ - ன், அதுவென்னுஞ்சுட்டுப்பெயர்முன்வரும் அன்றென்னுஞ்சொற்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) அதுவென்னுஞ் சுட்டுப்பெயர்முன் வரும் அன்றென்னும் வினைக்குறிப்புச்சொல் முதலீறும், செய்யுளாகற்து. எ - று.

---

(பி - ம்.) [1]'செருத்தான்'

(வ - று.) * அதான்று எனவரும்.

ஆன்றேயாமென இயல்பைவிலக்காமையின், அதுவன்று, அதன்று என வருவனவுங்கொள்க. அதுமுன்வருமன்று ஆன்றாமென விதந்தமையான், ஏனை இது உதுமுன்வரும் அன்று ஆன்றாகாதென்பதுபெற்றாம். (௩௦)

## குற்றுகரவீற்றுச் சிறப்புவிதி.

௧௮௧. வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி.

எ - ன், குற்றுகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது ஒருவழி விலக்கனுதலிற்று.

(இ - ள்.) வன்றொடரொழிந்த ஐந்துகுற்றுகரவீற்றின்முன்னும் வரும் வல்லினம் மிகா, அல்வழிக்கண். எ - று.

(வ - று.) நாகு, எஃகு, வரகு, குரங்கு, தெள்கு: கடிது, சிறிது, தீது, பெரிது எ - ம், ஏகுகால், அஃகுபிணி, பொருதுசென்றான், அறிந்து தந்தான், எய்துகொன்றான் எ - ம் வரும். பிறவுமன்ன. (௩௧)

௧௮௨. இடைத்தொட ராய்தந் தொடரொற் றிடையின்
மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இடைத்தொடர்முன்னும் ஆய்தத்தொடர்முன்னும் ஒற்றிடையேமிகாத நெடிற்றொடர்முன்னும் உயிர்த்தொடர்முன்னும் வரும்வல்லினம் மிகா, வேற்றுமைக்கண். எ - று.

(வ - று.) தெள்கின்கடுமை, எஃகின்கடுமை, நாகின்கடுமை, வரகின்கடுமை, சிறுமை, தீமை, பெருமை எனவரும். சாரியைப்பேறு "இதற்கிதுசாரியை" என்னுஞ்சூத்திரத்தான் அமைந்தன. சாரியைமிகுதலின், வல்லெழுத்து மிகாவென ஏது வரைந்துகூறாது மிகாவென வாளாகூறினமையின், வரகுகதிரெனச் சாரியைமிகாவழி வல்லினமிகாது வருவனவுளவேல் அவையுங்கொள்க.()

௧௮௩. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

எ - ன், மேனிலைமொழிக்கு ஒருபுறனடையாய் எய்தாததெய்துவித்தலும் எய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நெடிற்றொடர்க் குற்றுகரவீற்று மொழிகளுள்ளும் உயிர்த்தொடர்க்குற்றுகரவீற்று மொழிகளுள்ளும் அவ்வுகரம்பற்றுக்கோடாகிய வல்லெழுத்து ஆறனுள் டகார றகாரமான இரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டும். எ - று.

குற்றுகரங்களென்றும் எழுத்துக்குறிப்பு அம்மொழிகளையுணர்த்திநின்றது; வருமொழிவரையாமையின், நாற்கணமுங்கொள்க.

(வ - று.) ஆட்டுக்கால், பாற்றுக்கால், முருட்டுக்கால், முயிற்றுக்கால், செவி, தலை, புறம், ஞாற்சி, நிறம், மயிர், யாப்பு, வன்மை, அடி எனவரும்.

---

* திருமுருக. ௭௭; அகநா. ௯௮.

இவ்விரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டுமெனவே சிறு பான்மை வேற்றுமைக்கண் இரட்டாமையும், சிறுபான்மை அல்வழிக்கண் இரட்டுதலும், சிறுபான்மை இருவழியிலும் பிறவொற்றிரட்டுதலுங்கொள்க.

(வ - று.) *"காவிரி புரக்கு நாடுகிழ வோனே", †"காடக மிறந்தார்க்கே யோடுமென் மனனேகாண்", ‡"கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை" என் வேற்றுமைக்கண் இரட்டாவாயின. காட்டரண், களிற்றியானையென அல் வழிக்கண் இரட்டின. §"வெருக்குக்கண் வெங்கருனை", எருத்துக்கால் எ-ம், எருத்துமாடு எ-ம் இருவழியும் பிறவொற்றிரட்டின. (௩௩)

கஅச. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையில்
தம்மின வன்றொட ராகா மன்னே.

எ - ன், மென்றொடர்க் குற்றுகரமொழிகளுட் சிலநிலைமொழிக்கு எதிர் மறைமுகத்தான் எய்தாததெய்துவித்தலும் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மென்றொடர்க் குற்றுகரமொழிகளுட் சில வேற்றுமைக்கண் தமக்குஇனமான வன்றொடராதலை யொழிந்தன, பெரும்பால. எ - று.

சிலவென்னுமெழுவாய் ஆகாவென்னும் எதிர்மறைவினையாலணையும் பெய ரகத்து முதனிலையொடுமுடிந்தது. வருமொழி வரையாமையின் நாற்கணமுங் கொள்க.

(வ - று.) மருத்துப்பை, சுருப்புநாண், கருப்புவில், கற்று எனவரும்.

இவ்வாறுசிலவருதலையும் எதிர்மறைமுகத்தாற்கூறினமையின் வழக்கின் கண்ணும், சான்றோர்செய்யுட்கண்ணும் ஏற்றபெற்றிகொள்க. வண்டுககால், ... ந்துத்திரட்சிமுதலியனவெல்லாம் வன்றொடராகாதனவென்க.

சிலவன்றொடராமெனவே ஆகாதன பலவென்பது தாமே போதரவும் மன் னேயென்ற மிகையானே எற்புடம்பு, அற்புத்தளை, குரக்குமனம் என அல்வழிக் கண் அருகி வன்றொடராதலுங்கொள்க. (௩௪)

கஅரு. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.

எ - ன், இதுவும் மேலைநிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தலும் எய்தி யதன்மேற் சிறப்புவிதியுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஐகாரச்சாரியையை இறுதியிலே பெற்றுவரும்மென்றொடர்க் குற்றுகரமொழிகளும் சிலவுள. எ - று.

மேலைச்சூத்திரத்தைச் சாரவைத்தமையான், இதுவும் மென்றொடரென் பதுபெற்றாம். வருமொழிவரையாமையின், நாற்கணமுங்கொள்க.

(வ - று.) பண்டைக்காலம், இற்றைநாள் எ - ம், அற்றைக்கூலி, இற்றைநலம் எ - ம் வரும். பிறவுமன்ன.

மேலைச்சூத்திரத்தைச் சாரவைத்தாரேனும் ஐயீற்றுடைக்குற்றுகரமெனப் பொதுப்படக்கூறினமையின், நேற்றைப்பொழுதெனப் பிறதொடர்கள் ஐகாரம்

* பொருந. உசஅ. † யா - வ். உரை - மேற்.
‡ புறநா. கடவுள். § நாலடி. உகo.

பெறுதலும் ஐயீற்றுடைக்குற்றுகரமென உடைமையாக்கிக்கூறினமையின் வருமொழிப்புணர்ச்சியானன்றி ஒற்றை, இரட்டை, வேட்டையென ஒருமொழியாய்நின்று ஐகாரம்பெறுதலும், ஈராட்டை, மூவாட்டையெனத் தொடர்மொழியாய்நின்று ஐகாரம்பெறுதலுங்கொள்க. (ஙரு)

கஅசு. திசையொடு திசையும் பிறவுஞ் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலு மாம்பிற.

எ - ன், குற்றுகரவீற்றுத் திசைப்பெயர்க்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) திசைச்சொல்லொடு திசைச்சொல்லும் பிறசொற்களும் புணருமிடத்து நிலைமொழியீற்றினின்ற உயிர்மெய்யும் அதன்மேனின்ற ககரவொற்றுங்கெடுதலும் அங்ஙனம்நின்ற றகரவொற்று னகரவொற்றாயும் லகரவொற்றாயுந்திரிதலுமாம். எ - று.

(வ - று.) வடகிழக்கு, வடமேற்கு, வடதிசை, வடமலை, *வடவேங்கடம் ; தென்கிழக்கு, தென்மேற்கு, *தென்குமரி, தென்வீதி, தென்மலை ; மேல்பால், மேனாடு ; குடதிசை, குடநாடு ; குணகடல், குணபாலெனவரும்.

பிறவென்றமிகையானே மேற்றிசை, மேலைத்திசை, கீழ்த்திசை, கீழைத்திசை, [1]கீழ்மேற்றென்வடல் எ - ம், கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு, வடக்கூர், தெற்கூர், வடக்குமலை, தெற்குமலையென இங்ஙனங்காட்டியவிகாரமின்றியும் வருமெனவும் இவ்விதியெல்லாம் ஏற்றபெற்றி கோடல்வேண்டுமெனவுங் கொள்க.

வடகிழக்கென்பது வடக்குங்கிழக்குமாயதொருகோணமென உம்மைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. வடதிசையென்பது வடக்காயதிசையெனப் பண்புத்தொகை. வடமலையென்பது வடக்கின்கண்மலையென ஏழாம் வேற்றுமைத்தொகை. [1]கீழ்மேற்றென்வடல், கிழக்கு மேற்குத் தெற்கு வடக்கு என்பன உம்மைத்தொகை. பிறவுமன்ன. (ஙசு)

கஅஎ. தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின்.

எ - ன், தெங்கென்னும்பெயர்க்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) காயென்னுஞ் சொல் வருமாயின், தெங்கென்னு நிலைமொழி முதனீண்டு ஈற்றுயிர்மெய் கெடும். எ - று.

ஈறுகெடுமென்றமையான், முதனீளுமென்பது பெற்றாம்.

(வ-று.) தேங்காயெனவரும். தெங்குநீண்டு ஈற்றுயிர்மெய் கெட்டேபுணருமென இயல்பைவிலக்காமையின் தெங்கங்காயென வருமுடியுங் கொள்க. ()

## எண்ணுப்பெயர்கட்குச் சிறப்புவிதி.

கஅஅ. எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்
ஒன்று முதலெட் டீறா மெண்ணுள்
முதலீ ரெண்முத னீளு மூன்று

* தொல். பாயிரம்.
(பி - ம்.) 1 'கிழமேற்'

றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்
ஈற்றுயிர் மெய்யு மேழ னுயிரும்
ஏகு மேற்புழி யென்மனார் புலவர்.

எ-ன், ஒன்றுமுதல் எட்டீறும் எண்ணுப்பெயர்க்கு உயிர்வரின் எய்தியதன்மேற் சிறப்புவிதியும், மெய்வரின் எய்தாததெய்துவித்தலும் நுதலிற்று.

(இ-ள்.) எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிறபெயரும்வரின் நிலைமொழியாக நின்ற ஒன்றுமுதல் எட்டீறுமெண்களுள் முதற்கண்ணவாய ஒன்றிரண்டென்னுமிரண்டெண்ணும் முதல்நீளும்; மூன்றும் ஆறும் ஏழும் முதல்குறுகும்; ஆறுமேழுமல்லாத ஆறெண்களின் ஈற்றுயிர்மெய்யும் ஏழென்னுமெண்ணின் ஈற்றுயிருங்கெடும், ஏற்குமிடங்களிலென்று சொல்லுவர் புலவர். எ-று.

இச்சூத்திரத்துட்கூறிய விகாரமும் இப்புணர்ச்சி முற்றமுடித்தற்குப் பின் ஐந்துசூத்திரத்தாற்கூறும் விகாரமும் உயிர்வரின் உகரம் மெய்விட்டோடுதலேயும் ஒழிந்தகணங்கள் வரின் தன்னியல்பினிற்றலேயும் விலக்கியவல்ல; இவ்விகாரமனைத்தும் ஒருங்குவேண்டுமென்னுநியதியவல்ல; இவ்விகாரம் பண்புத்தொகைக்கேயுரியவென்பார் ஏற்புழியென்றும், ஏழென்பதனை உயிரீற்றுமொழியாகக் கொள்வார்சிலர்; ஒற்றீற்றுமொழியாகக் கொள்வார்சிலர்; யாம் ஒருதலைதுணிந்தாமென்பார் என்மனார்புலவரென்றும், ஒற்றீறும் விலக்கப்படுவதன்றென்பார் உடம்பொடுபுணர்த்தி ஒற்றீறாக ஏழ் குறுகுமென்றுங்கூறினர்.

ஏழென்பது முற்றுகரவீற்றதேனும் ஒன்றினமுடித்தறன்னின முடித்தலென்னுமுத்தியான் ஈண்டுக்கூறப்பட்டதென்க.

(வ-று.) அறுபது, எழுபது: கழஞ்சு, நாழி, மீன் எ-ம், ஏழ்கடல் எ-ம் வரும். ஏனையவற்றிற்குதாரணம் பின்னர்க்காட்டுதும்; இரண்டாயிரம், ஏழாயிரமென உயிர்வரிற் குற்றுகரமும் முற்றுகரமுங் கெட்டுப்புணர்ந்தன. இரண்டு கழஞ்சு, மூன்றுபடி, நான்குபொருள், ஏழுகடலெனத் தன்னியல்பினின்று புணர்ந்தன. பிறவுமன்ன. (௩௮)

௧௮௯. ஒன்றன் புள்ளி ரகர மாக
இரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே.

எ-ன், இதுவுமது.

(இ-ள்.) மேற்கூறிய நால்வகைப்பெயரும் வருமிடத்து ஈற்றுயிர்மெய் ஏகுமென்றமையான் இறுதியுயிர்மெய்கெட நின்ற ஒன்றென்னுமெண்ணினது னகரவொற்றும் ரகரத்தையூர்ந்துநின்ற அகரவுயிருங்கெட அவ்விரண்டாகரத்தின்மேலும் உகரம்வரும். எ-று.

(வ-று.) ஓராயிரம், இராயிரம், ஒருபது, இருபது, ஒருகழஞ்சு, இருகழஞ்சு, ஒருநாழி, இருநாழி, ஒருவகை, இருவகை எனவரும். ஓராயிரம், இராயிரமென்புழி, உகரக்கேடு "முற்றுமற் றொரோவழி" என்பதனாற் கொள்க. பிறவுமன்ன. (௩௯)

௧௯௦. மூன்ற னுறுப்பழிவும் வந்தது மாகும்.

எ-ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப் பெயரும் வருமிடத்து இறுதியுயிர்மெய்கெட நின்ற மூன்றென்னும் எண்ணினது னகரவொற்றுக்கெடுதலும் வருமொற்றாகத் திரிதலுமாம். எ - று.

(வ - று.) மூவொன்று, மூவெட்டு, மூவுழக்கு, மூவுலகு எ - ம், முப்பது, முக்கழஞ்சு, மூங்காழி, மும்மொழி எ - ம் வரும். (௬௦)

௧௧௧. நான்கன் மெய்யே லறவா கும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப்பெயரும்வருமிடத்து இறுதியுயிர்மெய்கெட நின்ற நான்கென்னுமெண்ணினது னகரவொற்று லகரவொற்றாயும் றகரவொற்றாயுந் திரியும். எ - று.

(வ - று.) நாலொன்று, நாலெட்டு, நாழி, நான்மணி எ - ம், நாற்பது, நாற்கழஞ்சு, நாற்கலம், நாற்கவி எ - ம் வரும். (௬௧)

௧௧௨. ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப்பெயரும் வருமிடத்து இறுதியுயிர்மெய்கெட நின்ற ஐந்தென்னுமெண்ணினது நகரவொற்று வருமொற்றாகியும் அதற்கு இனமாகியுங் கெட்டும் முடிவதாம். எ - று.

(வ - று.) ஐம்மூன்று, ஐம்மஞ்சாடி, ஐவ்வட்டி, [1] ஐவ்வண்ணம் எ - ம், ஐம்பது, [2] ஐங்கழஞ்சு, ஐங்கலம், ஐம்பொறி எ - ம், ஐயொன்று, ஐயெட்டு, ஐயாழாக்கு, ஐயம்பு எ - ம் வரும்.

அடைவதும் இனமுமென்றமையின் அருத்தாபத்தியான், ஐந்நூறு, ஐந்நாணி என்புழி ஒற்றுத் தன்னியல்பினிற்றல் கொள்க. (௬௨)

௧௧௩. எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) நால்வகைப்பெயரும்வருமிடத்து இறுதியுயிர்மெய்கெடநின்ற எட்டென்னுமெண்ணினது டகரவொற்று ணகரவொற்றாகுமென்றுசொல்லுவர் புலவர். எ - று.

(வ - று.) எண்பது, எண்கழஞ்சு, எண்கலம், எண்குணம் எனவரும்.

"எண்ணிறையளவும்" என்னுஞ்சூத்திரத்துக்கூறிய புணர்ச்சிக்குவேண்டும் விகாரம் இதுகாறுமென்பது தோன்ற அச்சூத்திரத்துட்கூறிய புலவரென்னு மெழுவாயைச்சுட்டி அதன்பயனிலையாக இச்சூத்திரத்திறுதிக்கண் என்ப என்றார். (௬௩)

௧௧௪. ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி யொவ்வொடு
தகர நிறீஇப் பஃது அகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.

---

(பி - ம்.) 1 'ஐவ்வனம்' 2 'ஐங்கழஞ்சி'

எ - ன், ஒன்பதென்னும் பெயர்க்கு எய்தாததெய்துவித்தலும் அதனோடு புணரும் பத்து நூறென்னும் வருமொழிகட்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதியு முணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒன்பஃதுடனே பத்தென்பதும் நூறென்பதும் வந்துபுணருமாயின், நிலைமொழியாய எட்டின்மேலொன்று ஒன்பஃதெனப் பஃதென்னும் இறுதியதாய்த் திரிந்துநின்றாற்போல வருமொழியாய எண்பதின்மேற்பத்தை நூறெனவும் எண்ணூற்றின்மேல் நூற்றை ஆயிரமெனவுந்திரித்து நிலைமொழிக்கு முதற்கண் ஒகரவுயிரொடு தகரமெய்யை அதற்குஆதாரமாக நிறுத்தி அந்நிலைமொழியிறுதிக்கட் பஃதைக்கெடுத்து அம்மொழிமுதற்கு அயலின்ற னகரவொற்றை நிரனிறைவகையானே பத்தின்திரிபாகிய நூற்றின்புணர்ச்சிக்கு ணகரவொற்றும் நூற்றின்திரிபாகிய ஆயிரத்தின்புணர்ச்சிக்கு ளகரவொற்றுயுக் திரிப்பது முறைமையாம். எ - று.

(வ - று.) தொண்ணூறு எ - ம், தொள்ளாயிரம் எ - ம் வரும். தொளாயிரமென் இக்காலத்து மரீஇயிற்று.

ஒன்பஃது நின்றுபுணரினும் ஒன்பது நின்றுபுணரினும் இம்முடிபேயாமென்பார் பஃதகற்றியென்பதனோடுபொருந்த ஒன்பஃதொடென்னாது ஒன்பானொடென்றும், இங்ஙனமாயிற் சொன்முழுவதூஉம் விகாரப்படுமென்பார் ஒன்றினென்றும், ஒன்பஃதென்பது இறுதிக்கட் பஃதென்னுமொலிதோன்ற வருஞ் சூத்திரத்துட்கூறும் பத்தின்விகாரம்போன் முரணிற்றென்பார் அதனைஉவமையாக்கி முன்னதினென்றும், ஒன்று பத்தானாற்போலப் பத்தை நூறாகவும் நூற்றை ஆயிரமாகவும் சிற்றெண்ணைப் பேரெண்ணாகத் திரிக்கவென்பார் முரணியென்றும், தகரவொற்றை ஒகரவுயிர்க்கு உடம்பாகநிறுத்துகவென்பார் ஒவ்வொடென்றும், நிலைமொழிமுரணியது இஃதெனப்புலப்படுப்பார் பஃதகற்றியென்றும், இப்புணர்மொழிகள் ஒகரவுயிரான்றொழிய விகாரப்பட்டுக்கிடக்தமையிற் குறிப்பின்றி முடியுமாறுஉமுடிபென்று கொள்ளற்கவென்பார் திரிவதென்னாது திரிப்பதென்றும், இவற்றை இலக்கணமுடிபாகத் தொல்லாசிரியர் முடித்தவாறே முடித்தாமென்பார் நெறியேயென்றுங்கூறினர்.

இச்சூத்திரத்து, 'முன்னதின்னேனையமுரணி' என்பதற்கு இவ்வாறுபொருள்கொள்ளாது ஒன்பஃதினானே பத்தையும் நூற்றையும் பெருக்கியெனப் பொருள்கொள்வாருமுளர். முரணியென்னுஞ்சொற்கு அது பொருளன்றாதலானும்அதுபொருளாமேனும் அதனால்வருமொழி இவ்வாறு திரிந்தவெனத்தோன்றாமையானும் தோன்றின் [1]நிலைமொழிக்கும் விகாரங்கூறவேண்டாமையானும் அதுபொருந்தாதென்க. (சச)

கசரு. முதலிரு நான்கா மெண்முனர்ப் பத்தின்
இடையொற் றேக லாய்த மாகல்
எனவிரு விதியு மேற்கு மென்ப.

எ - ன், ஒன்றுமுதல் எட்டெண்ணின்முன்வரும் பத்தென்னுமெண்ணிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தனுதலிற்று.

---

(பி - ம்.) 1 'வருமொழிக்கும்'

(இ - ள்.) ஒன்றுமுதலாகிய எட்டெண்களின்முன்னும்வரும் பத்தென்னு மெண்ணிடைநின்ற தகரவொற்று ஒருகாற்கெடுதலும், ஒருகால் இடையேதகரம் நின்றநிலைக்களத்து அதுகெட ஆய்தம்வருதலுமென்னும் இவ்விரண்டுவிதியை யும் ஏற்குமென்றுசொல்லுவர் புலவர். எ - று.

இடையென்பதனைப் பின்னுங்கூட்டுக; 'இடையேயாய்தமாகல்' என்ற மையின் அவ்வழித் தகரக்கேடு கூறாதேயமையுமென்க.

(வ - று.) ஒருபது, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது எ - ம், ஒருபஃது, இருபஃது, முப்பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எழுபஃது, எண்பஃது எ - ம் வரும். (சரு)

ககூசா. ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத லொன்பான்
எண்ணு மவையூர் பிறவு மெய்தின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே.

எ - ன், மேலைச்சூத்திரத்தானெய்திய ஒருபஃதாதியாய நிலைமொழிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எய்தாதது எய்துவித்தலு நுதலிற்று.

(இ - ள்.) ஒருபஃதாதியாய எட்டெண்களின்முன்னும் ஒன்றாதி ஒன்ப தெண்ணும் அவையூர்ந்தபிறவும் வந்துபுணருமாயின், ஆய்தங்கெட அந்நிலைக் களத்து இயல்பாய தகரம் வரும். எ - று.

ஐயமறுத்தற்கு அவையூர்பிறவுமென்றார்.

(வ - று.) ஒருபத்தொன்று, இருபத்தொன்றேகாலேயரைக்கால், முப் பத்தொருகழஞ்சு, எழுபத்தொன்பதின்கலனே தூணி, எண்பத்தொன்பதி யாண்டு எனவரும். பிறவுமன்ன.

'ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே' என்றமையான், ஆய்தமழிந்தவற்றிற் கும், ஒருபதுமுதலிய முற்றுகரவீற்றெண்ணுப்பெயர்கட்கும் வேற்றுமையின்மை யின், ஒருத்தாபத்தியால் அவற்றொடு இவ்வொருமொழிகள் புணரினும் ஆண்டா குந்தவ்வேயென்றாராயிற்று. இவற்றிற்குங் காட்டு அவையேயாமென்க. (சகூ)

ககூஎ. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்
ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே.

எ - ன், பத்தென்னு நிலைமொழிக்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதியும் எய்தாதது எய்துவித்தலும் ஒன்பதென்னுநிலைமொழிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுமுதலாகிய பத்தும் ஆயிரமும் கோடியுமென்னுமெண் ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிறபெயரும் வந்துபுணருமா யின் நிலைமொழியாய பத்தென்னுமெண்ணினது ஈற்றுயிர்மெய்யைக் கெடுத்து அந்நிலைக்களத்து இன்சாரியையேனும் இற்றுச்சாரியையேனும் ஆண்டைக்கேற் பது ஏற்றுநிற்கும்; ஒன்பதென்னுநிலைமொழியும் இங்ஙனம் விதந்த எண்ணுதிப் பெயர்வந்துபுணருமாயின் இன்னேனும் இற்றேனும் ஆண்டைக்கேற்பது ஏற்று நிற்கப்பெறும். எ - று.

(வ - று.) பதினொன்று, பதின்மூன்று, பதினாயிரம், பதின்கழஞ்சு, பதின்கலம், பதின்மடங்கு எ - ம், பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்றுமூன்று, பதிற்றுக்கோடி, பதிற்றுத்தூணி எ - ம், ஒன்பதினாயிரம், ஒன்பதின்கழஞ்சு, ஒன்பதின்கலம், ஒன்பதின்மடங்கு எ - ம், ஒன்பதிற்றொன்று, ஒன்பதிற்றிரண்டு, ஒன்பதிற்றுக்குறுணி எ - ம் வரும். பிறவுமன்ன.

பதினொன்றென்பது உம்மைத்தொகை. பதிற்றொன்றென்பது பண்புத்தொகை. பிறவுங்கண்டுகொள்க.

பத்துக்கோடி, ஒன்பதுகோடியென இந்நிலைமொழிகள் தம்மியல்பினிற்றலேயன்றி வழக்கின்கண்ணும் சான்றோர்செய்யுட்கண்ணும் இவ்வாறு அமைந்து கிடந்தனவுங்கொள்கவென்பார், ஏற்பதேற்குமென்றும் ஒன்பதன் ஈற்றுயிர்மெய்யைக் கெடாது குற்றுகரவீற்றுப்பொதுவிதியான் உயிரொன்றுமே கெட இன்னுமிற்றும் ஏற்பதேற்றுநிற்றலின் ஒன்பதுமிற்றேயெனத் தன்மையணியாக்காது, உவமையணியாக்கி இனைத்தேயென்றுங் கூறினார். ஒன்பதென்பதன் இறுதி பத்தென்பதுபோல முரணிநிற்றலின் அதனோடு இது மாட்டெறியப்பட்டதென்க. (சஎ)

கசஅ. இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட வொற்று னவ்வாகு மென்ப.

எ - ன், இதுவுமது. பத்தென்னுநிலைமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

(இ - ள்.) இரண்டென்பது வரிற் பத்தென்னு நிலைமொழியினது ஈற்றுயிர்மெய் கெடத் தகரவொற்று னகரவொற்றாகத்திரியுமென்று சொல்லுவர் புலவர். எ - று.

(வ - று.) பன்னிரண்டு எனவரும்.

உம்மைத்தொகைக்கண்ணும் பண்புத்தொகைக்கண்ணும் இரண்டென்னுமெண் வருமொழியாய்வருமேனும் முன்வரினென வாளாதலைச் சிறப்பித்தமையான், ஒருசொன்னீர்மையாய்ச் சிறந்த உம்மைத்தொகைக்கு இவ்விதிகூறினாரென்க. (சஅ)

கசகூ. ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்
முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி.

எ - ன், ஒன்பதொழித்த ஒன்பதெண்களாய நிலைமொழிகளுள் மூன்றனோடு ஏழற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும், எல்லாவற்றிற்கும் உயிர்வரின் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதியும், மெய்வரின் எய்தாததெய்துவித்தலு நுதலிற்று.

(இ - ள்.) ஒன்பதென்னும் எண்ணொன்றனையும் ஒழித்துநின்ற ஒன்றுமுதற் பத்தீறான எண் ஒன்பதனையும் இரட்டித்துக்கூறின், நிலைமொழிமுதலெழுத்தொன்றுமிருக்க அல்லனவெல்லாங்கெட, உயிர்முதலானவெண்வரின் வகரவொற்றும் மெய்முதலானவெண்வரின் வந்தவொற்றும் மிகுதல் முறைமையாம். எ - று.

(வ - று.) ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு, ஐவைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து எனவரும்.

நெடிலேயென்றமையானே நான்கிற்குக் குறுக்கமும், ஐவைந்தென்புழி ஐகாரக்குறுக்கத்தின்முன் ஒற்றிரட்டாமையும், ஒரோவொன்று, ஓவ்வொன்று, கழக்கழஞ்சு, அலக்கலமென இரட்டித்துவருவனவும் குற்றுகரப்புணர்ச்சிவிதியுட் கூறாதொழிந்து நெறிப்படவருவனவுளவேல் அவையுங்கொள்க.

ஒவ்வொன்றுகொடுவென்றால் இம்முறையே பலவற்றையுங் கொடுவெனப் பொருள்தருகிற்றலின் இஃது அடுக்கன்று; வேற்றுமையல்லனவெல்லாம் அல்வழியாதலின், தழாஅத்தொடராய அல்வழியுள் ஒன்றுமென்க. (௪௯)

## ஊகாரவீற்றுச் சிறப்புவிதி.

௨௦௦. பூப்பெயர் முன்னின மென்மையுந் [1]தோன்றும்.

எ - ன், ஊகாரவீற்றுப் பூவென்னும் பலபொருளொருசொன்முன்வரும் வல்லினத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பூவென்னும் பலபொருட்பெயர்ச்சொன்முன் வல்லினம்வரிற் பொதுவிதியாற் கசதப மிகுதலேயன்றி அவற்றிற்குஇனமாயமெல்லொற்றுக் களும் மிகும். எ - று.

இப்பொருட்டாய பூப்பெயரென விதவாமையிற் பலபொருளொருசொல் என்பது பெற்றாம்.

(உ - ம்.) பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பணை எனவரும்; இவற்றுட் பூவென்பது மலரேல், இரண்டாம்வேற்றுமை உருபும்பயனுமுடன் றொக்கதொகையாகவும், பொலிவேல் பண்புத்தொகையாகவும், பூங்கணையென் பது மலரென்னுமொருபொருட்டாய் மூன்றாம்வேற்றுமைஉருபும்பயனும் உடன் றொக்கதொகையாகவும் பண்புத்தொகையாகவும், பூங்கரும்பென்பது பொலி வென்னும்ஒருபொருட்டாய்ப் பண்புத்தொகையாகவும் வருவனகாண்க.

உறழ்ந்துவருமென உறழ்ச்சிகூறாது பூக்கொடியென வல்லினமிகுதலை உம் மையாற் றழீஇக்கொண்டமையின் இவ்விருவகைத்தோன்றலும் ஏற்றபெற்றி கொள்க. (௫௦)

## ஏகார ஓகாரவீற்றுச் சிறப்புவிதி.

௨௦௧. இடைச்சொ லேயோ முன்வரி னியல்பே.

எ - ன், ஏகாரஓகாரவிடைச்சொற்கள்முன் வரும் வல்லினத்திற்கு எய்தியதுவிலக்கனுதலிற்று.

(இ - ள்.) இடைச்சொல்லாய ஏகாரத்தின்முன்னும் ஓகாரத் தின்முன்னும் வல்லினம்வரிற் பொதுவிதியான் மிகாது இயல்பாம். எ - று.

(உ - ம்.) அவனேகொண்டானென்பது பிரிநிலையும் வினாவும் ஈற்றசையுந் [2]தேற்றமுமாம். அறமே பொருளே காமமே வீடே என்பனஎண்; "ஏயெ தம்மையென்றே நிறுடி னவை" என்பது இசைநிறை. அவனோகொண்டா னென்பது ஒழியிசைமுதலியவெட்டுமாம். இவற்றுள் வல்லினம் இயல்பாதல் காண்க. இவ்விடைச்சொல் ஒன்று பலபொருள்தருமாறு இடைச்சொல்லிய லுட்காட்டுதும். (௫௧)

---

(பி - ம்.) 1 'புணரும்' 2 'தோற்றம்'

## ஐகாரவீற்றுச் சிறப்புவிதி.

உ0உ. வேற்றுமை யாயி னைகா னிறுமொழி
ஈற்றழி வோடுமம் மேற்பவு முளவே.

எ - ன், ஐகாரவீற்றுநிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) ஐகாரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண்வருமாயின் இறுதியைகாரங்கெடாது அம்முச்சாரியைபெற்றுமுடிவனவும், ஐகாரங்கெட்டு அம்முச்சாரியைபெற்றுமுடிவனவும் சிலவுளவாம். எ - று.

உம்மைகளிரண்டில் முன்னையது எதிர்மறைக்கண்ணும் பின்னையது எதிர்மறையோடு இழிவுசிறப்பின்கண்ணும்வந்தன.

(வ - று.) * "புன்னையங்கானல்," † "கொல்லையஞ்சாரல்," ‡ "கொன்றையந்தீங்குழல்," § "முல்லையம்புறவம்" எ - ம், வழுதுணங்காய், ஆவிரம்பூ, வேர் எ - ம் வரும்.

தகுதியாக்காது ஏற்பனவென்றமையான், முல்லைப்புறவமெனவரினுங் கொள்க. அம்முமென்னாமையின் உம்மையான் வல்லினந்தழீஇயதன்றென்க. வருமொழி வரையாமையின் நாற்கணத்துள் ஏற்பனகொள்க. (ருஉ)

உ0ங. பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.

எ - ன், பனையென்னுநிலைமொழிக்கும் அதனொடுபுணருஞ் சிலவருமொழிகட்கும் எய்தியவற்றை இகந்துபடாமற்காத்தலும் அவற்றைவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தலுநுதலிற்று.

(இ - ள்.) பனையென்னும்பெயர்முன் கொடியென்னும்பெயர் வருமாயின் வந்ததுமிகுதலும் கசதபக்கள்வரின் நிலைமொழியீற்று ஐகாரங்கெட்டு அம்முப்பெறுதலும் திரளென்னும்பெயர்வருமாயின் வந்ததுமிகுத்தும் ஐபோய்அம்முப்பெற்றுந் தம்முளுறழ்தலும் அட்டென்னும்பெயர் வருமாயின் ஐகாரங்கெட வருமொழிஅகரம் ஆகாரமாதலுமாம், வேற்றுமைக்கண். எ - று.

கெட்டென்பது செயவெனெச்சந்திரிந்துநின்றது.

(வ - று.) பனைக்கொடி எ - ம், [1]பனங்காய், [2]செறும்பு, தூண், பழம் எ - ம், பனைத்திரள், [3]பனந்திரள் எ - ம், பனாட்டு எ - ம் வரும்.

பனைக்கொடியென்பது பனையையெழுதியகொடி. பனாட்டென்பது பனையினதுதீங்கட்டி (ருங)

உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

---

* அகநா. ௪0. † சிலப். ஆய்ச்சியர்.
‡ கலி. க0சு; சிலப். கஎ. § அகநா. ஙஅச.

(பி - ம்.) 1 'பனங்காய்' 2 'செதும்பு' 3 'பனந்திரள்'

நான்காவது

# மெய்யீற்றுப் புணரியல்.

---

## மெய்யீற்றின்முன் உயிர்.

### பொதுவிதி.

உ0௪. உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.

எ - ன், மெய்யீற்றுப்பதம்புணரும் சிறப்புப்புணர்ச்சி இவ்வியலாற் கூறப்படுதலின் மெய்யீற்றின்முன் உயிர்முதல்வந்து புணருமாறு உணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) நிலைமொழியீற்றினின்ற மெய்யின்மேல் வருமொழிமுதலுயிர் வந்து ஒன்றுபட்டு இணங்கிநிற்பது இயல்புபுணர்ச்சியேயாம். எ - று.

(வ - று.) தோன்றலழகன், உரிஞழகிது, புகழழகிது எ - ம், வேலெறிந்தானெனவும் இருவழியுங்காண்க. பிறவுமன்ன.

இவ்வாறு மெய்யுமுயிருங்கூடி உயிர்மெய்யாய் மெய்யினது புள்ளியும் உயிர்வடிவுங் கெட்டு நிற்றலின் விகாரமாமென்பாரைவிலக்கிச் சிறந்த ஒலிவடிவின்யாக்கையுமுயிரும்போல் மெய்யினதுமாத்திரை உள்ளடங்க ஒன்றுபட்டு இரட்டையிலைபோல் ஒற்றொலிமுன்னும் உயிரொலிபின்னுமாய் இணங்கிநிற்றலானும் ஒன்றாத தனிக்குறின்முன் ஒற்றுமுதலியன விகாரப்படுதலானும் ஒன்றுவது இயல்பேயென்றார்.

ஏகாரம், பிரிநிலைக்கண்வந்தது. (க)

### சிறப்புவிதி.

உ0௫. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறின்முன் ஒற்று உயிர்வரின் இரட்டித்துநிற்கும். எ - று.

(வ - று.) மண்ணரிது, பொன்னரிது எ-ம், மண்ணகம், பொன்னொளி எ - ம் வரும். பிறவுமன்ன. (உ)

## மெய்யீற்றின்முன்மெய்.

உ0௬. தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரம்
துன்னு மென்று துணிநரு முளரே.

எ - ன், யகரமொழிந்த பத்துமெய்முன்னும் வரும் யகரத்திற்கு என்னுமெழுத்திற்றென்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யகரம் தன்னையொழிந்த ஞணநமலளரவழளவென்னும் பத்து மெய்முன்னும் வந்தால் தன்முன் இகரச்சாரியையைப் பொருந்துமென்று அறிதிற்கொள்வாருஞ் சிலருளர். எ - று.

(உ - ம்.) வேளியாவன், மண்ணியாது எ - ம், வேளியானை, மண்ணியானை எ - ம் வரும். பிறவுமன்ன.

எதிர்மறையாய இழிவுசிறப்புடைமையான் இசார்தன்முதது பொருச்சுத்திரத்தான் இயல்பாமென்பார் பெரும்பாலரென்க, (௫)

௨௦௭. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வன் மெய்வரின்
உவ்வுறு மேவ லுறுசில சில்வழி.

எ - ன், முதனிலைத்தொழிற்கும் ஏவற்கும் பொதுவாய சில நிலைமொழிகட்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) யரழக்களையொழிந்த எட்டொற்றும் இறுதியாகுமுதனிலைத் தொழிற்பெயரும் ஏவல்வினையும் மேல் விதந்த யகரமொழிந்தமெய்வருமாயிற் பெரும்பாலும் உகரச்சாரியையை இறுதிக்கட்பொருந்தும்; சிலவேவல்வினை அவ்வுகரச்சாரியையைப்பொருந்தா, சிலவிடங்களின். எ - று.

ஏவல்வினையோடு எண்ணினமையின், முதனிலைத்தொழிற்பெயரென்பது பெற்றும்.

(உ - ம்.) உரிஞுக்கடிது, உண்ணுக்கடிது, பொருநுக்கடிது, திருமுக்கடிது, தின்னுக்கடிது, நீண்டது, வல்லது எ - ம், கடுமை, நீட்சி, வன்மை எ - ம் தொழிற்பெயர்கள் இருவழியும் உகரம்பெற்றன. பிறவுமன்ன.

உரிஞுகொற்றா, உண்ணுகொற்றா, பொருநுகொற்றா, திருமுகொற்றா, தின்னுகொற்றா, நாகா, வளவா என ஏவல்வினை உகரம்பெற்றன. பிறவுமன்ன.

உரிஞு, உண்ணு என வருமொழியின்றி உகரம் பெறுதலும், மணலைவாரு, சருகைவாரு எனச் சிறுபான்மை விலக்கியவீறு உகரம்பெறுதலுமுளவென்பார் நனியென்றும் யகரம் வருமொழிக்கு இகரம் விதித்தலின் அதனோடு புணரும் இந்நிலைமொழியிறுதி உகரம் பெறுதென்பார் யவ்வன் மெய்யென்றும் உண்ணுகொற்றா, உண்கொற்றாவென உகரம்பெற்றும் பெறுதும்வருவனவும் உரிஞுகொற்றாவென உகரம்பெற்றே வருவனவுமுளவென்பார், சிலவேவலுறு சில்வழியென்றுங்கூறினார்.

ஏவலுறுமென்றது ஏவற்குறுமெனப் பாடமோதுவாருமுளராலோவெனின், உறுமென்னும் வினைக்குத் தொழிற்பெயர்களையும் ஏவல்வினைகளையும் வினைமுதலாக்கிக்கூறுதலானும் அதனை மறுத்த உறுமென்னும் பன்மைவினைக்கு ஒருமையுகரம் வினைமுதலாகாமையானும் அது பாடமன்றென்க. (௪)

௨௦௮. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை.

எ - ன், நகரவீற்றுத்தொழிற்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நகரம் இறுதியாகு முதனிலைத்தொழிற் பெயர்க்கு உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையுமாம், வேற்றுமைக்கண். எ - று.

(வ - று.) பொருநக்கடுமை, நன்மை, வன்மை எனவரும். பிறவுமன்ன. பொருநுதல், ஒருவர் மற்றொருவர்போல வேடங்கொள்ளும் பொருநரது தொழிலாதலின் ஒத்தவென்னும்பொருட்டு. (ரு)

## ண க ர ன க ர வீ று.

உ0௯. ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.

எ - ன், மேலைச்சூத்திரங்களால் மெய்யீற்றுப் பொதுப்புணர்ச்சி கூறி அவற்றிற்சேயரிய ஞகாரநகாரங்களையொழித்தேனையவற்றிற்கு முறையே தனித்தனி சிறப்புவிதி கூறுவான்றொடங்கி ணகரனகரவீறு புணருமாறுணர்த்துத லுதலிற்று.

(இ - ள்.) ணகார னகாரங்கள் வேற்றுமைக்கண் வல்லினம் வந்தால் முறையே டகாரமும் றகாரமுமாம்; மெல்லினமும் இடையினமும் வந்தால் இயல்பாம்; அல்வழிக்கண் மூவினமும்வந்தாலும் இயல்பேயாம். எ - று.

(வ - று.) சிறுகட்களிறு, "பேரமர்க்கட்பேதை" எ - ம், பொற்றட்டு, பொற்றகடு எ-ம் வேற்றுமைக்கண் வல்லினம்வரத் திரிந்தன. மண், பொன், ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை என வேற்றுமைக்கண் மெல்லினமும் இடையினமும்வர இயல்பாயின. மண், பொன்: கடிது, சிறிது, தீது, பெரிது; ஞான்றது, நீண்டது, மாண்டது: யாது, வலிது எ - ம், உண்டான்கொற்றன், ஞெள்ளன், வளவன் எ - ம் அல்வழிக்கண் மூவினமும் வர இயல்பாயின. பிறவுமன்ன.

ஒப்பின்முடித்தலான் னகரமுமுடன்கூறினர். இவ்வாறு பின்வருவனவுமன்ன. (௬)

உக0. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

எ - ன், ணகரனகரவீற்றுள் ஒருசாரனவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறிலொன்றனையுமொழிந்து ஒருமொழிதொடர்மொழிகளைச்சார்ந்த ணகார னகாரங்கள் வருமொழிக்குமுதலாகவந்த நகாரம் மயக்கவிதியின்மையிற் றிரிந்தவிடத்து இயல்பாகாது, கெடுதலைப்பொருந்தும். எ - று.

(வ - று.) பாணன்று, தூணன்று; பசுமணன்று எ - ம், நன்மை எ - ம், அரசனல்லன், செம்பொனன்று எ - ம், நன்மை எ - ம் இருவழியுங்கெட்டன. (எ)

## சி ற ப் பு வி தி.

உகக. சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே.

எ - ன், ணகரவீற்றுட்சிலவற்றிற்கு எய்தியதுவிலக்கலும் சிலவற்றிற்கு எய்தியதன்மேற்சிறப்புவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) சாதிபற்றியும் திரள்பற்றியும் வரும்பெயர்களும், பரண் கவணென்னும்பெயர்களுமானவற்றின் இறுதிணகாரம் வேற்றுமைக்கண்ணும் வல்லினம்வந்தால் இயல்பாம்; எண்ணலளவையன்றி உணவுக்குரிய எள்ளின்றிரிசொல்லாய எண்ணென்னும்பெயரும் சாணென்னுநீட்டலளவைப்பெயரும் வல்லெழுத்துக்கள்வரின் திரிந்து டகரமாதலும் பொருந்தும்; அல்வழிக்கண்ணும். எ - று.

அல்வழிக்கண் இறந்ததுதழீஇயஎச்சவும்மையை வேற்றுமைக்கண்ணுங் கூட்டுக.

(வ - று.) பாண், உமண்: குடி, சேரி, தோட்டம், பாடி எ - ம், அமண்குடி, சேரி, தோட்டம், பாடி எ - ம், பரண்கால், கவண்கால் எ - ம் வேற்றுமைக்கண்ணும்இயல்பாயின. எட்கடிது, சிறிது, தீது, பெரிது எ - ம், சாட்கோலெனவும் அல்வழிக்கண்ணுந்திரிந்தன. டவ்வாகலுமாமென்னும் இறந்ததுதழீஇய எச்ச இழிவுசிறப்பும்மையான், எண்கடிது, சாண்கோலென இயல்பாதலே வலியுடைத்தென்க.

பிறவென்றமிகையானே வேற்றுமைக்கண், பாணச்குடியென அகரச்சாரியைபெறுதலும், "அட்டேண் டுமனி" என்வழியல்டபும், மண்குடம் மட்குடமென்னுமுறழ்வும் இருவழிக்கண்ணும் இன்னும் ணகரவீற்றுள் அமையாதனவுளவேல் அவையுங்கொள்க.

சாதியும்குழூவும்ஆகுபெயராய்அவற்றையுடையாராய உயர்திணைப்பொருளையுணர்த்திநின்றனவேனும் தெய்வமென்றாற்போலச் சொல்லான் அஃறிணையாதலின், "பொதுப்பெயருயர்திணைப் பெயர்களீற்றுமெய், வலிவரி னியல்பாம்" என்பதனான் அமையாவாயின; மேல்வரும் ணஃகான்கிளைப்பெயருமது. (அ)

உகஉ. ணஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான்
அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.

எ - ன், ணகரவீற்றுச் சாதிப்பெயர்க்கு எய்தியதுவிலக்கலும் பிறிதுவிதிவகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) ணகரவீற்றுச்சாதிப்பெயர், வல்லினம்வர ஈறு திரியாது இயல்பாதலும் அகரச்சாரியைபெறுதலுமாம், வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண். எ - று.

(வ - று.) எயின்குடி, எயினக்குடி, சேரி, தோட்டம், பாடி எனவரும்.

பொருட்கேயென்றமிகையானே எயினமரபு, எயினவாழ்வு, எயினவணியென ஏனைக்கணம்வரின் அகரச்சாரியைபெறுதலும் எயினக்கன்னி, எயினப்பிள்ளை, எயினமன்னன் என அல்வழிக்கண் அகரச்சாரியைபெறுதலுங்கொள்க.

கிளையென்னும்பலபொருளொருசொல் ஈண்டுச் சாதிமேல் நின்றது. (கூ)

உகங. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.

எ-ன், மீனென்னுஞ்சொற்கு எய்தியது ஒருவாற்றான் விலக்கல் நுதலிற்று.

(இ - ள்.) மீனென்னுமொழியிறுதினகரம் வேற்றுமைக்கண் வல்லெழுத்துவரின் றகரத்தோடு உறழ்ந்துவரும். எ - று.

(வ - று.) நீன்கண், நீற்கண், செவி, தலை, புறம் எனவரும்.

றகரமாதல் இக்காலத்துப்பயின்றுவாராதேனும் தொன்னெறியாதலின் ஆணைவழிநிற்கவென்பார் வழியேயென்றார். (௧௦)

உ௧௪. தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி.

எ-ன், தேனென்னுஞ்சொற்கு எய்தியது விலக்கலும் எய்தியது இகந்துபடாமற் காத்தலும் எய்தியதன்மேற்சிறப்புவிதியும் வரும்வல்லினத்திற்கு எய்தியதன்மேற்சிறப்புவிதியும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தேனென்னுஞ்சொல் மூவினமெய்யும் வரின் இறுதினகரம் இயல்பாதலும், மெல்லினம்வரின் அவ்விறுதி இயல்பாதலேயன்றிக் கெடுதலும், வல்லினம்வரின் இறுதியியல்பாதலேயன்றிக் கெட வந்தவல்லினமாதல் அதற்கினமாதல் மிகுதலுமாம், இருவழிக்கண்ணும். எ - று.

“குறிலணை வில்லா ணனக்கள் வந்த, நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே” என்றமையின், இயல்பிற்கு நகரமொழிந்த எட்டுமெய்யும் வருவித்துக்காண்க.

(வ - று.) தேன்கடிது, தேன்நான்றது, தேன்யாது எ - ம், தேன்மொழி, தேமொழி எ - ம், தேன்குழம்பு, தேக்குழம்பு, தேங்குழம்பு எ - ம் அல்வழிக்கண்வந்தன. தேன்கடுமை, தேன்மலிவு, தேன்யாப்பு எ-ம், தேமலர், தேன்மலர் எ - ம், தேன்குடம், தேக்குடம், தேங்குடம் எ - ம் வேற்றுமைக்கண்வந்தன. பிறவுமன்ன.

தேனென்பது பலபொருளொருசொல்லாதலின், மணங்கமழ்சோலையென்னும் பொருட்டாய்த் தேங்கமழ்சோலையென இவ்விகாரங்கள் ஏற்றுவருவனவுங் கொள்க. (௧௧)

உ௧௫. மரமல் லெகின்மொழி யியல்பு மகரம்
மருவ வலிமெலி மிகலு மாகும்.

எ - ன், எகினென்னுஞ்சொற்கு எய்தியதுவிலக்கலும் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் வரும்வல்லினத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மரமன்றிப் பறவையாய அன்னத்தையுணர்த்தும் எகினென்னுஞ்சொல் வேற்றுமைக்கண்ணும் வல்லினம்வர இறுதி இயல்பாதலும், இருவழியும் அகரச்சாரியையைப்பொருந்த வரும்வல்லெழுத்தாதல் அவற்றிற்குஇனமாதல் மிகுதலுமாம். எ - று.

(வ - று.) எகின்கால், சிறை, தலை, புறம் என வேற்றுமைக்கண்ணும் இயல்பாயிற்று. எகினப்புள், எகினம்புள் எ - ம், எகினக்கால், எகினங்கால் எ - ம் இருவழியும் அகரமருவ வலிமெலிமிகுந்தன; அகரமருவுதற்கு வருமொழி வரையாமையின் நாற்கணமுங்கொள்க. எகினமாட்சி, எகினவாழ்க்கை, எகினவழகு எனவரும். பிறவுமன்ன. (௧௨)

உ௧௬. குயினூன் வேற்றுமைக் கண்ணுமியல்பே.

எ - ன், குயின் ஊனென்னுஞ்சொற்கட்கு எய்தியது விலக்கனுதலிற்று.

(இ - ள்.) குயினென்னும்பெயரும் ஊனென்னும்பெயரும் வல்லினம் வரின் அல்வழிக்கண் இயல்பாதலேயன்றி வேற்றுமைக்கண்ணும் இயல்பாம். எ - று.

(வ - று) குயின்கடுமை, ஊன்கடுமை, சிறுமை; தீமை, பெருமை என வரும்.

குயின் - மேகம். (கூ)

உகஎ. மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.

எ - ன், மின் பின் பன் கன்னென்னும் நான்குசொற்கும் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் ஈண்டு அகரச்சாரியை முன்வரும் வல்லினத்திற்கு எய்திய தன்மேற்சிறப்புவிதியும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குசொல்லும் தொழிற்பெயர்போல யவ்வல்மெய் வரின் உகரச்சாரியையைப்பொருந்தும். இவற்றுட் கன்னென்னுஞ்சொல் உகரச்சாரியைபெறுவதன்றி அகரச்சாரியைபெற்று வல்லினம்வந்தால் வருமெழுத்தாதல் அதற்குஇனமாதல் மிகப்பெறும். எ - று.

அவ்வுமென்னும் உம்மையும் பெறுமென்னுமுற்றும் விகாரத்தாற்றொக்கன.

(வ - று) மின்னுக்கடிது, பின்னுக்கடிது, பன்னுக்கடிது, கன்னுக்கடிது, நன்று, வலிது எ - ம், கடுமை, நன்மை, வலுமை எ - ம், கன்னத்தட்டு, கன்னந்தட்டு எ - ம், கன்னத்தூக்கு, கன்னந்தூக்கு எ - ம் அல்வழிவேற்றுமைக்கண் முறையேவந்தன. பிறவுமன்ன.

கன்னென்பது - சிறுதராசுத்தட்டு; முன்னென்னுஞ்சொல்லை முன்னமென்றாற்போல இதனைக் கன்னமென்றுங்கூறுப. (கச)

உகஅ. தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ
டுறழு நின்னீ றியல்பா முறவே.

எ - ன், தன்னென்றும் என்னென்றும் வரும் விகாரமொழிகட்கு எய்தியது ஒருவாற்றான் விலக்கலும், நின்னென்றுவரும் விகாரமொழிக்கு எய்தியது விலக்கலும் நுதலிற்று.

(இ - ள்.) தானென்பது தன்னென்றும், யானென்பது என்னென்றும் வரும் விகாரமொழிகளின் ஈற்று னகரம் வல்லினம்வரின் பொதுவிதியானே றகரமாய்த்திரிதலும் அவ்விதிபெறாது இயல்பாதலுமாம்; நீயென்பது நின்னென நின்ற விகாரமொழியீற்று னகரம் வல்லினம்வரின் திரியாது இயல்பேயாம். எ - று.

வன்மையென்றது, னகரத்திற்கினமாய றகரத்தை.

(வ - று.) தன்பகை, தற்பகை, என்பகை, எற்பகை எ - ம், நின்பகை எ - ம் வரும்.

ஒடுவென்றமிகையானே மின் பின் முதலியன மின்கடிது, மின்கடுமை என இருவழியும் சாரியைப்பேறும் திரிபுமின்றி வருதலும், மான்குளம்பு, அழன்கை என வேற்றுமைக்கண் விதவாதன இயல்பாதலும், வரிற்கொள்ளு

மெனச் செயினென்னும் வாய்பாட்டுவினையெச்சம் பொதுச்சூத்திரத்தான் இயல்பாகாது திரிதலும், இன்னும் மகரவீற்றுள் அமையாதனவுளவேல் அவையுங்கொள்க.

நின்னென்பது விகாரமொழியாதலின், "பொதுப்பெய ருயர்திணைப் பெயர்களீற்றுமெய், வலிவரினியல்பாம்" என்பதனுள் அடங்காதாயிற்று. (கரு)

## மகரவீறு.

௨௧௯. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்.

எ - ன், மகரவீறு புணருமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மகரவீற்றுச்சொற்கள் இறுதிமகரங்கெட விதியுயிரீறுமன்றி இயல்புயிரீறுபோல உயிர்வரின் உடம்படுமெய்தோன்றவும், வல்லினம்வரின் அவைமிகவும், மெல்லினமும் இடையினமும்வரின் இயல்பாகவும் புணர்வனவும், வல்லினம்வரிற் கெடாது அவற்றிற்கு இனமாய்த்திரிவனவுமாம். எ - று.

(வ - று.) வட்டவாழி, கடல், நேமி, வாரி எ - ம், மரவடி, மரக்கால், நார், வேர் எ - ம், நாங்கடியம், அடுங்களிறு எ - ம், நங்கை எ - ம் முறையே இருவழியும்வந்தன. பிறவுமன்ன.

வன்மைக்கினமாத்திரியுமென்றமையின் அருத்தாபத்தியான், நாம்பெரியமெனப் பகரம்வரும்வழித் திரியாதென்பது பெற்றும். (கசு)

௨௨௦. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்
அல்வழி யுயிரிடை வரினியல் புமுள.

எ - ன், சிலமகரவீற்றிற்கு எய்தியதிகந்துபடாமற்காத்தலும் விலக்கலும் வரும்வல்லினத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைக்கண் மகரவிறுதிகெட அவற்றின்முன்வரும் வல்லினமாதல் அவற்றிற்குஇனமாதல்மிகுதலும் அல்வழிக்கண் உயிரும்இடையின மும்வரிற் கெடாது இயல்பாதலுமுளவாம். எ - று.

(வ - று.) குளக்கரை, குளங்கரை எ - ம், குளமழகிது, குளம்யாது எ - ம், அருளுமரசன், கொல்லும்யானை எ - ம் வரும். பிறவுமன்ன. (கஎ)

௨௨௧. நும்தம், எம்நம் மீறு மவ்வரு ஞநவே.

எ - ன், சிலபொதுப்பெயர்க்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்த னுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குவிகாரமொழிகளின் ஈற்றுமகரம் மேல்வரும் ஞநக்களாகத்திரியும். எ - று.

(வ - று.) நுஞ்ஞாண், நுந்நூல், தஞ்ஞாண், தந்நூல், எஞ்ஞாண், எந்நூல், நஞ்ஞாண், நந்நூல் எனவரும்.

ஞநவரின் அவையாகத்திரியுமெனவே ஒழிந்தமகரம்வரின் நும்மணிபோல இயல்பாமென்பது பெற்றும். (கஅ)

உஉஉ. அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்.

எ - ன், அகமென்னுஞ்சொற்கு எய்தியதன்மேற்சிறப்புவிதி யுணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) அகமென்னும் இடப்பெயர்முன்னர்ச் செவி கையென்னும் சினைப்பெயர்வரின் நிலைமொழியிறுதிமகரம் மென்மைக்கினமாகத்திரிதலேயன்றி அதனிடைநின்ற ககரவொற்றும் அதனையூர்ந்த அகரவுயிருங்கெடும். எ - று.

(வ - று.) "அஞ்செவி நிறைய மந்திரமோதி", *"அங்கையு ணெல்லி யதன்பயன்" எனவரும்.

செவியெனச் சகாத்தைமுற்கூறினர், † "அஞ்சிறைத்தும்பி" எனவும் வருதலினென்க.

இடையன கெட்டேவருமென நியதிகூறாமையின் அகஞ்செவி, அகங்கை, அகஞ்சிறையெனவருதல் விலக்கப்பட்டனவல்லவென்க.

நகர்ப்புறமென்பதனைப் புறநகரென்றாற்போலச் செவியகம், கையகமென்னும் இடவுறுப்புத் தற்கிழமைப்பெயரோடு முடிந்த ஆறாம்வேற்றுமைத் தொகைச்சொல்லே முன்பின்னாக வழங்கலின் இவ்விரண்டும்இலக்கணப்போலியாய்த் தழாத்தொடராய அல்வழியுள் ஒன்றுமென்க. அகஞ்சிறையென்பது ஏனையவற்றின்சிறைபோலப் புறத்தின்கண்ணவன்றி அகத்தின்கண்ணவாகலின், ஏழாம் வேற்றுமைத்தொகை. (கக)

உஉங. ஈமும்,கம்மு முருமுந் தொழிற்பெயர் மானு
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

எ - ன், இம்மூன்றுசொற்கும் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றுசொல்லும் இருவழியும் முதனிலைத்தொழிற் பெயர்போல யவ்வல்மெய்வரின் உகரச்சாரியைபெற்றுமுடியும். இவற்றுள் முதற்கண்நின்ற ஈமும் கம்மும் வேற்றுமைக்கண் உகரச்சாரியையன்றி அகரச் சாரியையும்பெறும். எ - று.

இவற்றுட் கம்மென்பது பலபொருளொருசொல்லாதலின், எப்பொருளை யுணர்த்தி நிற்பினும் இவ்விதிகொள்க.

(வ - று.) ஈமுக்கடிது, கம்முக்கடிது, உருமுக்கடிது, நீண்டது, வலிது எ - ம், கடுமை, நீட்சி, வன்மை எ - ம், ஈமக்குடம், கம்மக்குடம் எ - ம் முறையேகாண்க. பிறவுமன்ன.

கம்மென்பது கம்மியாதொழில்; அத்தொழிலாற்சமைந்த குடமென்க. இது முதனிலைத்தொழிலன்றாதலின் மானுமென்றார். (உ௦)

யரழவீறு.

உஉச. யரழ முன்னர்க் கசதப வல்வழி
இயல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.

---

* பு - வெ. ௩ச. † குறுந். உ.

எ - ன், யரழமெய்யீற்றுமுன் கசதபக்கள் புணருமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றீற்றின்முன்னும் கசதபக்களாவரின், அல்வழிக்கண் இயல்பாதலும், மிகுதலும், வேற்றுமைக்கண்மிகுதலும், வல்லினமாதல் மெல்லினமாதல் மிகுதலும் விதியாம். எ - று.

(வ - று.) வேய்கடிது, வேர்கடிது, வீழ்கடிது எ - ம், மெய்க்கீர்த்தி, போய்க்கொண்டான், கார்ப்பருவம், பூழ்ப்பறவை எ - ம், *நாய்க்கால், தேர்க்கால், பூழ்க்கால் எ - ம், வெய்க்குழல், வேய்ங்குழல், ஆர்க்கோடு, ஆர்ங்கோடு எ - ம் முறையேவந்தன. பிறவுமன்ன.

மேலென்றமிகையானே, †"வாய்புகுவ தனினுங் கால்பெரிது கெடுக்கும்" என வேற்றுமைக்கண் இயல்பாதலும், பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு எனப் பண்புத்தொகைக்கண் உறழ்தலும் இன்னும் அமையாதன உளவேல் அவையுங் கொள்க. (உக)

## ழகரவீற்றுச்சிறப்புவிதி.

உஉ௫. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே.

எ - ன், இவ்விருசொற்கும் எய்தாதது எய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) தமிழென்னுஞ்சொல் நாற்கணமும் வரின் வேற்றுமைக்கண் அகரச்சாரியையைப் பொருந்தவும்பெறும்; தாழென்னுஞ்சொல்லும் கோலென்னுஞ்சொல்வந்து பொருந்துமாயின் அவ்வகரச்சாரியையைப்பெறும். எ - று.

தமிழ்க்கு வருமொழிவரையாமையின் நாற்கணமுமென்றும்.

(வ - று.) தமிழப்பல்லவதரையர், தமிழநாகன், தமிழவளவன், தமிழவரசன் எ - ம், தாழக்கோல் எ - ம் வரும். பிறவுமன்ன.

அவ்வுறவுமென்னும் எதிரதுதழீஇய எச்சவும்மையானே, தமிழின்சுவை யென இன்சாரியை பெறுதலுங்கொள்க.

தமிழையுடையபல்லவதரையர், தாழைத்திறக்குங்கோலென விரியும். தாழக்கோலெனினும் திறவுகோலெனினும் அமையும். தாழாயகோலென ஒருபொருட்கு இருபெயரொட்டாக்கலுமொன்று. (உஉ)

உஉ௬. கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.

எ-ன், கீழென்னுஞ்சொன்முன்வரும் வல்லினத்திற்கு எய்தியது பெரும்பாலும் விலக்கனுதலிற்று.

(இ - ள்.) கீழென்னுஞ்சொன்முன் வரும் வல்லினம் ஒருகாலியல்பாயும் ஒருகால்இனமிக்கும்வரும் விகற்பத்தையும் பொருந்தும். எ - று.

(வ-று.) கீழ்குலம், கீழ்க்குலம்; கீழ்சாதி, கீழ்ச்சாதி எனவரும். பிறவுமன்ன.

இழிவு சிறப்பும்மையான் இவற்றுள் இயல்பே சிறப்புடைத்தென்க.

---

* நாலடி. உகஅ. † புறநா. கஅச.

கீழ்மையென்னும் பண்பொடுபுணர்தல் பதவியலுள் முடிந்துப்போந்தமையின், * "கீழிருந்துங் கீழல்லார் கீழல்லவர்" என்றாற்போலக் கீழென்பது பண்பாகுபெயராய் இத்தொடர் இருபெயரொட்டுப்பண்புத்தொகையாமென்க.

## லகர ளகர வீறு.

### பொதுவிதி.

உஉஎ. லளவேற் றுமையிற் றடவு மல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியல்பும்
ஆகு மிருவழி யானு மென்ப.

எ - ன், லளவீறு புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) லகார ளகாரமான இரண்டும் வல்லினம்வரின் வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்களாம்; அல்வழிக்கண் அவை றகார டகாரங்களுடனே உறழ்வனவாம்; இருவழிக்கண்ணும் மெல்லினம் வரின் னகார ணகாரங்களாம்; இடையினம் வரின் இயல்பாமென்று சொல்லுவர் புலவர். எ - று.

(வ - று.) கற்குறை, முட்குறை எ - ம், கல்குறிது, கற்குறிது, முள்குறிது, முட்குறிது எ - ம், கன்னெரிந்தது, முண்ணெரிந்தது எ-ம், கன்னெரி, முண்ணெரி எ - ம், கல்யாது, முள்யாது எ - ம், கல்யாப்பு, முள்யாப்பு எ - ம் முறையேவந்தன. பிறவுமன்ன.

அவ்வழியவற்றோடுறழ்வுமென்றாரேனும் இவற்றொடு மயங்காதென விலக்கிய தகரம்வரின், ஏற்புழிக்கோடலான் உறழ்ச்சியுள் இயல்பொழித்துத் திரிபொன்றுமேபெறுதல் கொள்க; கற்றீது, முட்டீது எனவரும். (உச)

### சிறப்புவிதி.

உஉஅ. குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே.

எ - ன், இவ்விரண்டற்றிற்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதிபுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறிலின்பின்னின்ற லகரளகரங்கள் அல்வழிக்கண்ணே தகரம்வருமாயின் றகரடகரங்களாய்த் திரிதலேயன்றி ஆய்தமாய்த்திரிதலையும் பொருந்தும். எ - று.

(வ - று.) கஃறீது, முஃடீது எனவரும். (உரு)

உஉகூ. குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கெடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்புந் [1]திரிபு மாவன வுளபிற.

* திருக்குறள், கஎங.
(பி - ம்.) 1 'திரிவும்'

எ - ன், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறிலொன்றனையுஞ் சாராதுவரும் லகாரளகாரங்கள் அல்வழிக்கண் வந்த தகரந்திரியுமிடத்துக் கெடுதலும், இருவழிக்கண்ணும் வந்த நகரந்திரியுமிடத்துக் கெடுதலும், வல்லினம்வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாதலும் திரிதலும், வேற்றுமைக்கண் திரியாது இயல்பாதலும் பொருந்துவனவுள. எ - று.

திரியுமுற்கெடுவனவற்றைத் திரிந்தபிற்கெடும் மாய்த்தென்றமையிற் காலவழுவமைதி.

(உ - று.) தோன்றீயன், வேடீயன் எ - ம், தோன்றனல்லன், வேணல்லன் எ - ம், தோன்றனன்மை, வேணன்மை எ - ம், கால்கடிது, மரங்கள் கடிய எ - ம், வேற்படைக்குமரன், வாட்படைக்கையன் எ - ம், * "கால்குதித் தோடிக் கடல்புக மண்டி", † "வாள்போழ்ந் திட்ட நீள்கழன் மறவர்" எ - ம் முறையேகாண்க.

பிறவென்றமிகையானே தோன்றன்மை, வேடன்மையென வேற்றுமைக்கண்ணும் தகரந்திரியுமிடத்துக் கெடுதலும், காற்றுணை, தாட்டுணையெனக் கெடாமையும், விற்படையென உறழாது திரிதலும், கொல்களிறு, கொள்பொருளென வினைத்தொகை இயல்பாதலும், இன்னுமிவ்விரண் டீற்றுள் அடையாதன பிறவுங்கொள்க. இங்ஙனம் உயர்திணைச் சொல்லின்கட்டோட்டிய லகாரங்கள் மயக்கவிதியின்மையிற்படுவனவாகலின், "சிலவிகாரமாமுயர்திணை" என்பதனுள் அடங்காவென்க. (உ. கூ)

உ௩0. லளவிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுரு
வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.

எ - ன், விகுதிபெற்றதொழிற்பெயர்க்கும் முதனிலைதிரிந்ததொழிற்பெயர்க்கும் வருவதோர் ஐயமறுத்தலும், ஒருவாறு எய்தியதுவிலக்கலும் நுதலிற்று.

(இ - ள்.) லகாரத்தை இறுதியாகவுடைய விகுதிபெற்ற தொழிற்பெயரும் ளகாரத்தை யிறுதியாகவுடைய முதனிலைதிரிந்ததொழிற்பெயரும் முதனிலைத் தொழிற்பெயர்போல யவ்வல்லமெய் வரின் உகரம்பெறுமோ பெறாவோவென்று ஐயுறற்க; இருவழியும் உகரம்பெறுவாம்; வல்லினம்வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாவனவுஞ்சிலவுள. எ - று.

(உ - று.) ஆடல்சிறந்தது, ஆடற்சிறந்தது; ஆடனன்று, ஆடல்வலிது எ - ம், ஆடற்சிறப்பு, ஆடனன்மை, ஆடல்வலிமை எ - ம், கோள்கடிது, கோட்கடிது, கோணன்று, கோள்வலிது எ - ம், கோட்கடுமை, கோணன்மை, கோள்வலிமை எ - ம் இருவழியும் உகரம்பெறாது பொதுவிதியான்முடிந்தன. நடத்தல்கடிது, நடப்பித்தல்கடிதெனச் சில உறழாது அல்வழிக்கண் இயல்பாயின.

இறந்ததுதழீஇய எச்சஇழிபுசிறப்பும்மையானே பின்னல்கடிது, பின்னற்கடிது, உன்னல்கடிது, உன்னற்கடிதெனப் பொதுவிதியா னுறழ்தலே பெரும்பாலவென்க. (உஎ)

* திருவாசகம், சீர்த்தி. கஉரு.

† புறநா. உசு.

உ௩க. வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

(இ - ள்.) வல்லென்னுஞ்சூதாடுகருவிப்பெயர், யவ்வல்மெய்வரிற் றொழிற்பெயரேபோல இருவழியும் உகரச்சாரியைபெறும்; பலகை நாயென்னும் இருபெயர்வரினும் பிறபெயர்வரினும் வேற்றுமைக்கண் அகரச்சாரியையும் உகரச்சாரியையும் பெறும். எ - று.

வரினுமென்னும் எதிரதுதழீஇயவெச்சவும்மையாற் பிறபெயரென்பதூஉம், அவ்வுமென்னும் இறந்ததுதழீஇய வெச்சவும்மையான் உகரச்சாரியையென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) வல்லுக்கடிது, நன்று, வலிது எ - ம், வல்லுக்கடுமை, நன்மை, வன்மை எ - ம், வல்லப்பலகை, வல்லநாய், வல்லப்புலி, வல்லக்குதிரை எ - ம், வல்லுப்பலகை, வல்லுநாய், வல்லுப்புலி, வல்லுக்குதிரை எ - ம் முறையேகாண்க. வல்லினது அறை வரைந்தபலகை, வல்லினுள் நாயென விரியும். வேற்றுமையென்றமையின், வல்லாயநாயென இருபெயரொட்டாயவழி அகரச்சாரியை பெறாதென்க. (உஅ)

உ௩உ. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகர மாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இந்நான்குசொல்லும் வல்லினம்வரிற் பொதுவிதியான் உறழாது அல்வழிக்கண்ணும் வேற்றுமைபோல் றகரமாகத் திரிந்துமுடியும். எ - று.

(வ - று.) நெற்கடிது, செற்கடிது, கொற்கடிது, சொற்கடிது, சிறிது, தீது, பெரிது எனவரும்.

செல்லென்பது மேகம்; சொல்லென்பது, "சூருயிர்குடித்த" என்றாற்போலக் கொல்லலென்னும் உயர்திணைப்பொருளையுணர்த்திநின்றதோர் அஃறிணைச்சொல். (உகூ)

உ௩௩. இல்லெ னின்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்.

எ - ன், இல்லென்னும் பண்புச்சொற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் அவற்றின்முன்வரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமற் காத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) இல்லிடத்தையுணர்த்தாது இன்மைப்பண்பை யுணர்த்திநிற்கும் இல்லென்னுஞ்சொற்கு ஐகாரச்சாரியைபொருந்த அவ்வழிவரும்வல்லினம் விகற்பித்தலும், ஆகாரச்சாரியைபொருந்த அவ்வழிவரும் வல்லினமிகுதலும் இவ்விருவிதியும்பெறாது இயல்பாதலும்பொருந்தும். எ - று.

சாரியைப்பேற்றிற்கு வருமொழி வரையாமையின், நாற்கணமுங்கொள்க.

(வ - று.) இல்லைப்பொருள், இல்லைபொருள்; இல்லாப்பொருள், இல்பொருள், ஞானம், வன்மை, அணி எனவரும்.

இல்லென்னும்பண்படி நின்று வருமொழியோடுபுணர்வழி வருஞ்சாரியை யாதலின், இவ்விருசாரியை தோன்றியவழியும் இப்பொருளென்னும் இயல்பு புணர்ச்சிபோற் பண்புத்தொகையேயாமென்க.

இது மெய்யீற்றுப்புணரியலாதலானும் லகரவீற்றிற்குப் பொதுவிதிகூறிச் சிறப்புவிதி கூறும்வழி இன்மைப்பொருளைத்தரும் இல்லெனுஞ்சொற்கென விதந்தமையானும் விகுதியடைதல் பதவியலுளன்றி ஈண்டுக்கூறவேண்டாமை யானும், ஆகாரத்தொடு வன்மையாகுமென வல்லினப்பேற்றோடு ஆகாரத்தை யும் உடனிகழ்த்திக்கூறுதலானும், இயல்புமாகுமென்றமையானும், மறைப் பொருளை இல்லென்னும்பகுதியன்றி ஆகாரந்தரவேண்டாமையானும், தரு மேல் இன்மைக்கு மறையாய உண்மைப்பொருளைத் தரவேண்டுமாதலானும், ஆகாரமறைவிகுதி தெரிநிலைக்கன்றிக் குறிப்பிற்கு வாராமையானும் ஈண்டுப் பெறும் ஐகார ஆகாரங்கள் சாரியையேயன்றிக் குறிப்புமுற்றுவிகுதியும் எச்சத் தின்கண்வந்த மறைவிகுதியும் அல்லவென்க.

இல்லைபொருள், இல்லைப்பொருளென்பன இங்ஙனங்கூறியவாறே பண் புத்தொகையாகவும்ஐகாரவீற்றுக் குறிப்புமுற்றுப்பயனிலையோடுமுடிந்த தொகா நிலையாகவுங் கொள்ளப்படுமாதலின் தம்முள் வேற்றுமை யாதோவெனின்:— தொகைநிலை ஒருமொழிபோல்நடத்தலும் தொகாநிலை விட்டிசைத்துநடத்தலும் தம்முள் வேற்றுமையென்க. இல்லாப்பொருளென்பது இங்ஙனங்கூறியவாறே பண்புத்தொகையாகவும் இல்லாதவென்னும்பெயரெச்சக்குறிப்பினது இறுதி கெட்டுப் பயனிலையொடுமுடிந்த தொகாநிலையாகவுங்கொள்ளப்படும். இவற் றிற்கும் தம்முள் வேற்றுமை அதுவாமென்க.

இவ்வாறே ஆசிரியர்தொல்காப்பியரும், * "இல்லென் கிளவி யின்மை செப்பின், வல்லெழுத்து மிகுதலு மையிடை வருதலு, மியற்கையாதலு மாகாரம் வருதலுங் கொளத்தகு மரபி னுகிட னுடைத்தே" என்றார்.

உ௩௪. புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்விருசொற்களும் இருவழியும் யவ்வல்மெய்வரிற் பொது விதியான்முடிதலேயன்றித் தொழிற்பெயர்போல உகரச்சாரியை பெற்றும் புணரும். எ - று.

(வ - று.) புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது, நன்று, வலிது எ-ம், கடுமை, நன்மை, வன்மை எ - ம் வரும். (௩௧)

## வகரவீறு.

உ௩௫. சுட்டு வகரமூ வினமுற் றுறையே
ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்.

எ - ன், வகரவீற்றுச்சுட்டுப்பெயர் மூவினத்தோடும்புணருமாறு உணர்த் துதனுதலிற்று.

(இ - ள்.) அவ், இவ், உவ்வென்னும் அஃறிணைப்பன்மைச்சுட்டுப்பெய ரீற்று வகரம் வல்லினமும் மெல்லினமும் இடையினமும்வர முறையானே ஆய்த மும் வருமெல்லினமும் இயல்புமாம். எ - று.

* தொல். புள்ளி. எஎ.

(வ - று.) அஃகடிய, இஃகடிய, உஃகடிய எ - ம், அஞ்ஞானம், இஞ்ஞானம், உஞ்ஞானம் எ-ம், அவ்யானை, இவ்யானை, உவ்யானை எ-ம் வரும்.

வேற்றுமைப்புணர்ச்சிக்கு அற்றுச்சாரியைபெறுமென மேல்விதித்தலின் இவ்விதி அல்வழிக்கென்க. (௩௨)

௨௩௬. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.

எ - ன், தெவ்வென்னுஞ்சொல்யவ்வன்மெய்யோடு புணருமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தெவ்வென்னுஞ்சொல் யவ்வன்மெய்யோடு புணருமிடத்துத் தொழிற்பெயர்போல உகரச்சாரியைபெற்றுமுடியும்; இவற்றுள், மகரம்வருங்கால் உகரச்சாரியைபெறுதலேயன்றி ஓரோவழி ஈற்றுவகரம் மகரமாகத்திரியவும்பெறும். எ - று.

(வ - று.) தெவ்வுக்கடிது, தெவ்வுமாண்டது, தெவ்வுவந்தது எ - ம், தெவ்வுக்கடுமை, தெவ்வுமாட்சி, தெவ்வுவலிமை எ-ம், தெவ்வுமன்னர், தெம்மன்னர் எ - ம், தெவ்வுமுனை, தெம்முனை எ-ம் இருவழியும் முறையேகாண்க. இப்பகையென்னும்பண்புப்பெயர் பண்பியாய்ப் பகைப்பொருளையுணர்த்தி ஆகுபெயராய்நின்றவழியும் இவையேகாட்டென்க. (௩௩)

## வருமொழித்தகரநகரத்திரிபு.

௨௩௭. ணலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகுந் தநக்க ளாயுங் காலே.

எ - ன், முன்னர்ப்புணர்த்திய வருமொழிக்கு முதலாயமெய்களுள் திரிதற்பாலன இவையென விதந்துணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) னகர லகரங்கள்முன்னர் வருந் தகரம் றகரமாம்; அவற்றின் முன்னர்வரும்நகரம் னகரமாம்; ணகரளகரங்கள்முன்னர்வரும் தகரம் டகரமாம்; அவற்றின்முன்னர்வரும்நகரம் ணகரமாம், ஆராயுங்காலத்து. எ - று.

(வ - று.) பொன்றீது, கற்றீது; பொன்னன்று, கன்னன்று; மண்டீது, முட்டீது; மண்ணன்று, முண்ணன்று எனவரும்; தீமை, நன்மையென வருவித்து வேற்றுமைக்கண்ணும் திரியுமாறுகாண்க.

ஆயுங்காலேயென்றதனுன் அல்வழிவேற்றுமைப்பொருளுக்கத்தானன்றி மயக்கவிதியின்மையின், இங்ஙனம்புணரும் முதலீரண்டனுள் ஒன்றேனும் இரண்டுமேனும் விகாரப்பட்டு மயங்குதற்குரியனவாகிநின்று புணருமென்பதூஉம், மயக்கவிதியுள்ளனவற்றிற்கு வரும் விகாரம் அல்வழிவேற்றுமைப்பொருளுக்கத்தான் வருமென்பதூஉம் பெற்றும். (௩௪)

## வேற்றுப்பொருட்புணர்ச்சிக்குச் சிறப்புவிதி.

௨௩௮. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.

எ - ன், உயிரீற்றுப்புணரியற்கண்ணும் இவ்வியற்கண்ணுமுடிந்த வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கு எய்தியதன்மேற்சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேல் உருபுபுணர்ச்சிக்கண்முடியு முடிபுகள் அப்பொருட்புணர்ச்சிக்கண்ணுமொக்கும். எ - று.

(வ - று.) எல்லாவற்றதும், எல்லாவற்றுக்கோடுமென அஃறிணைக்கண் அற்றும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப் பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லாநமதும், எல்லாநங்கையுமென உயர்திணைக்கண் நம்மும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப் பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லார்தமதும், எல்லார்தங்கையும்; எல்லீர்நுமதும், எல்லீர்நுங்கையும்; தனது, தன்கை; தமது, தங்கை; நமது, நங்கை; எனது, என்கை; எமது, எங்கை; நினது, நின்கை; நுமது, நுங்கை என உருபுபுணர்ச்சிபோற் பொருட்புணர்ச்சியும் முடிந்தவாறுகாண்க. பிறவுமன்ன. (௩௫)

## புணரியல்களுக்குப் புறனடை.

௨௩௯. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு [1] மரூஉவும் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

எ - ன், இப்புணரியல்கட்கு ஆவதொரு புறனடையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வடசொல்லினும் உயிரினும் ஒற்றினுமான புணரியலில் தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பென வோதிய புணர்ச்சியிலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டுவருவனவும் இலக்கணப்போலிமொழிகளும் மரூஉமொழிகளும் இருவகைவழக்கினும் நடக்குமுறைமையறிந்து அதற்குப்பொருந்துமாறுபுணர்க்கை அறிவுடையோரெல்லார்க்கும் முறைமை. எ - று.

(வ - று.) ஆன்கன்று, வண்டின்காலென வேற்றுமைப்புணர்ச்சிக்கட் சாரியையிடைச்சொல் திரியாது இயல்பாயின. மழகளிறு, தடந்தோளென அகரவீற்றுரிச்சொன்முன் வல்லெழுத்துமிகாது இயல்பாயும் மெல்லெழுத்து மிக்கும்வந்தன. *"அளிகுலம்", தனதடமென இயல்பீறும் விதியீறுமான உயிரீற்று வடசொன்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயின. இல்முன் முன்றில், பொதுஇல் †பொதியில் என இலக்கணப்போலிகளும், அருமருந்தன்ன பிள்ளை அருமந்தபிள்ளை, குணக்குள்ளது குணாது, தெற்குள்ளது தெனாது, வடக்குள்ளது வடாது, சோழனாடு சோணாடு, பாண்டியனாடு பாண்டிநாடு, ‡மலையமானாடு மலாடு, தஞ்சாவூர் தஞ்சை, ஆற்றூர் ஆறை, ஆதன்றந்தை ஆந்தை, பூதன்றந்தை பூந்தை, வடுகன்றந்தை வடுகந்தையென மரூஉமொழிகளும் நிலைமொழிவருமொழிகளுள் ஏற்குஞ்செய்கையறிந்துமுடிக்க. பிறவுமன்ன. (௩௬)

மெய்யீற்றுப்புணரியல் முற்றிற்று.

---

* திருக்கோவையார், ௪௰, கொளு. † புறநா. ௫௨.

‡ பெரிய. மெய்ப்பொருள், ௧.

(பி - ம்.) 1 'மரூவும்', 'மருவும்'

ஐந்தாவது.

# உருபுபுணரியல்.

## உருபுகள்.

உ௪௦. ஒருவ னொருத்தி பலரொன்று பலவென
வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்
குருபு முறழ்தர நாற்பதா முருபே.

எ-ன், வேற்றுமையுருபுகள் நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருமாறு இவ்வியலாற்கூறுவான்றொடங்கி அவ்வெட்டுருபுகளும் சாரும் இடவகையான் இத்துணைத்தென்பது உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இப்பாற்பொருளினவென்று கருதவரும் ஐந்து பெயரோடும் எழுவாய்வேற்றுமையான பெயர்முதலாக விரிகின்ற எட்டுருபினையும் உறழ வேற்றுமையுருபுகள் நாற்பதாம். எ - று.

சொன்மேல்வைத்தோதின் இப்பெயர்களோடன்றிப் பொதுப்பெயர்களோடு உருபுவாராவெனப் பொருள்படுமாதலின் எல்லாப்பெயரும் அடங்குதற்குப் பொருள்மேல்வைத்து எனவருபெயரென்றார்.

(வ - று.) நம்பி, சாத்தி, மக்கள், மரம், மரங்களென்னுமிவற்றுள், நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு, நம்பியின், நம்பியது, நம்பிகண், நம்பீ என ஒருவனென்னும் வாய்பாட்டு உயர்திணை ஆண்பாற்பெயரோடு எட்டுருபும் வந்தன. ஏனைநான்குபெயரொடும் இவ்வாறேயொட்டுக. (க)

உ௪க. பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே.

எ - ன், வேற்றுமையுருபுகள் வருதற்குக் காரணமும் வருமிடமுமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமையுருபுகள் தம்பொருளைத்தரப் பெயர்க்குப்பின் வரும். எ - று.

(வ - று.) நம்பிபெற்றான், நம்பியைப்பெற்றான், நம்பியாற்பெற்றானென வரும். பிறவுமன்ன.

தம்பொருள்தாவருவன எழுவாய்முதலிய எட்டுருபும், வழிவருவன பெயர் முழுவதுஉமுருபாய எழுவாயொழிந்த ஏழுருபுமெனக்கொள்க. (உ)

## உருபுகளின் புணர்ச்சி.

உ௪உ. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்கும னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.

எ-ன், ஐமுதலிய ஆறுருபும் நிலைமொழி வருமொழியொடுபுணருமாறுணர்த்துதல்நுதலிற்று.

பின்முடித்தலான் விகுதிப்புணர்ச்சிக்கும் பதப்புணர்ச்சிக்கும் உடனுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) பதத்தின்முன் விகுதியேனும் பதமேனும் உருபேனும் புணருமிடத்துச் சாரியையொன்றேனும் பலவேனும் வருதலும் வாராதொழிதலும் இவ்விரண்டுமாகிய விகற்பமுமாம். எ - று.

புணர்ந்தவழி, புணருமவழியென்றது புணர்வழியெனப் பொதுமையிற் கூறவே இம்மூவகைப்புணர்ச்சியுட் சாரியைவிதித்தனவற்றுள்ளும் விதிப்பனவற்றுள்ளும் ஒழித்தனவற்றுள்ளும் அவைவருமாறு இவ்வாறெனஉய்த்துணர்கவென்றாராயிற்று.

(வ - று.) நடந்தனன் எ - ம், நடந்தான் எ - ம், நடந்தன, நடந்த எ - ம் விகுதிப்புணர்ச்சியுட் சாரியை வேண்டியும் வேண்டாதும் விகற்பித்தும் வந்தன. புளியமரம், புளியங்காய்; உரிஞுக்கடிது, உரிஞுக்கடுமை எ - ம், புளிக்கறி எ - ம், நெல்லின்குப்பை, நெற்குப்பை எ - ம், பதப்புணர்ச்சியுட் சாரியை அவ்வாறுயின. அவற்றை, அவற்றினை; மரத்தை, மரத்தினை எ - ம், தன்னை, என்னை எ - ம் ஆனை, ஆவை எ - ம், உருபுபுணர்ச்சியுட்சாரியை அவ்வாறுயின. பிறவுமன்ன.

மாடத்துக்கு மாடக்கு என்றற்றொடக்கத்தன வேண்டியவழி சாரியையின்மையின் செய்யுள்விகாரமாமென்க. (௪)

## சாரியைகள்.

உ௪௪. அன்ஆ னின்ன லற்றிற் றத்தம்
தம்நம் நும்மே அஉ ஐகுன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

எ - ன், மேற்சாரியையென்றார் அவை இவையென்பது உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) அன்னும் ஆனும் இன்னும் அல்லும் அற்றும் இற்றும் அத்தும் அம்மும் தம்மும் நம்மும் நும்மும் ஏயும் அவ்வும் உவ்வும் ஐயும் குவ்வும் னவ்வும், இவைபோல்வனபிறவுமாகிய பதம் உருபென்னு மூன்றுபுணர்ச்சிக்கண்ணும் தனிமொழிக்கண்ணும் வருதலிற் பொதுச்சாரியையென்னும் பெயரவாம். எ - று.

(வ - று.) ஒன்றன்கூட்டம், ஒருபாற்கு, வண்டின்கால், தொடையல், பலவற்றை, பதிற்றுப்பத்து, மரத்தில், மன்றம், எல்லார்தம்மையும், எல்லாநம்மையும், எல்லீர்நும்மையும், கலனேதூணி, நடந்தது, சாத்தனுக்கு, *"கேழலட்ட பேழ்வா யேற்றை", † "துருகன் மறையினு முய்குவை போலாய்", ஆனென முறையேகாண்க.

இன்னபிறவுமென்றதனுனே அவன்றனை என்புழித் தன்னென்னுஞ்சாரியையும், அவன்ருன் அவர்தாம் என்புழித் தான் தாமென்னுஞ்சாரியையும், புற்றுஞ்சோறு என்புழி ஆஞ்சாரியையும், இல்லாப்பொருளொன்றும் பண்புத்தொகைக்கண் ஆகாரச்சாரியையும் வந்தன. இன்னும்வருவனவுங்காண்க. (௫)

---

* அகநா. அ. † புறநா. ௩௦௦.

## உருபுபுணர்ச்சிக்குச் சிறப்புவிதி.

உ௫ரு. எல்லா மென்ப திழிதிணை யாயின்
அற்றொ டுருபின் மேலும் முறுமே
அன்றே னம்மிடை யடைந்தற் றாகும்.

எ - ன், ஒருசார் நிலைமொழியோடு உருபுபுணர்தற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) எல்லாமென்னும் பொதுப்பெயர் அஃறிணைக்கண் ஆனகாலை அதனோடு ஆறுருபும்புணரின் இடையே அற்றுச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெறும்; உயர்திணைக்கண் ஆனகாலை இடையே நம்முச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெறும். எ - று.

(வ - று.) எல்லாவற்றையும், எல்லாவற்றாலும் எ - ம், எல்லாநம்மையும், எல்லாநம்மாலும் எ - ம் வரும்.

இனி, இரட்டுறமொழிதலான், 'எல்லா மென்ப திழிதிணையாய்' எனவும், 'இன் அற்றொடு' எனவும் பிரித்து அஃறிணைக் கண்ணாகி இன்சாரியை அற்றுச் சாரியையோடென்னப்பொருள்தந்து எல்லாவற்றினையுமென வருதலுங்கொள்க. ஏனையவற்றோடும் இவ்வாறேயொட்டுக. இச்சொற்கு இருதிணைக்கண்ணும் அற்றுச்சாரியையும் நம்முச்சாரியையும் உருபுபுணர்ச்சிக்கண், "பதமுன் விகுதியும்" என்னுஞ் சூத்திரத்திற் கூறியவாறே வேண்டியே வருதல்தோன்ற இன்றியமையா முற்றும்மையோடு உடனிகழ்ச்சிப்பொருளவாய் அற்றொடென்றும் அடைந்தற்றாகுமென்றுங் கூறினர்.

தாம் நாம் நீரென்னு மூவிடப்பெயர் வேற்றுமைப்புணர்ச்சிக்கண் வந்தமை யானே தம் நம் நும்மென விகாரப்பட்டுத் தமக்கினமான மூவிடப்பெயர்களை முறையேசார்ந்து சிறப்புப்பொருள்தாராமையின், ஒருபொருட்பன்மொழியல்ல வாய்வருதலின், இம்மூன்றும் சாரியையிடைச் சொல்லெனப்படுமாதலின் தம் மென்பதைப் படர்க்கைப்பெயர்க்கும் நும்மென்பதனை முன்னிலைப்பெயர்க்கும் வருஞ்சூத்திரத்து அமைத்தாற்போல நம்மென்பதனை ஈண்டுத் தன்மைப்பெயர்க் கமைத்தாரென்பதூஉம் தன்மையர்யினும் திணைப்பொதுமையினில்லாது பாண ரேமென்றாற்போல எல்லாநம்மையுமென்றதுணையானே உயர்திணைத்தன்மையை யுணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (சு)

உ௪சு. எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்ன ரும்மே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) எல்லாருமென்னும் உயர்திணைப்படர்க்கைப்பெயரோடும் எல்லீருமென்னும் முன்னிலைப்பொதுப்பெயரோடும் ஆறுருபும் புணருமிடத்து அவ்விருபெயரின் இறுதிகளில்நின்ற முற்றும்மைகளைத்தள்ளி அந்நிலைகளங்களிற் படர்க்கைப்பெயர்க்குத் தம்முச்சாரியையும், முன்னிலைப்பெயர்க்கு நும்முச்சாரி யையும்பொருந்த அவற்றால் தள்ளுண்ட முற்றும்மைகள் உருபின்பின்னேவந்து பொருந்தும். எ - று.

(வ - று.) எல்லார்தம்மையும், எல்லாரையும் எ-ம் எல்லீர்நும்மையும், எல்லீரையும் எ - ம் விகற்பித்துவருதல். ஏனையவற்றோடும் இவ்வாறேயொட்டுக.

எல்லார்தம்மை, எல்லீர்நும்மையெனப் படர்க்கைக்குரிய தம்முச்சாரியை தன்மை முன்னிலைகளின் வருதல் *"ஒரிடம் பிறவிடந் தழுவலு முளவே" என்னும்வழு வமைதியென்க. (எ)

உசஎ. தான்தாம் நாமுதல் குறுகும் யான்யாம்
நீநீர் என்எம் நின்நு மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) இங்ஙனங்கூறிய இருதிணைப்பொதுவாய மூவிடப்பெயரே ழோடும் ஆறுருபும் புணருமிடத்து, தான் தாம் நாமென்னு மூன்றுபெயரும் நெடில் முதல்குறுகி முறையே தன்னை, தம்மை, நம்மை எனவரும்: யான், யாம், நீ, நீரென்னு நான்குபெயரும் முறையே என்னை, எம்மை, நின்னை, நும்மை எனவரும். இவ்வேழுபெயரோடும் குவ்வுருபு புணருமிடத்து இடையே தனக்கு என அகரச்சாரியைவரும். குவ்வுருபின் அகரச்சாரியைவரினும் ஆறா முருபுயிர்கள்வரினும் இவ்வேழுவிகாரமொழிகளின் இறுதியவாய தனிக்குறிலின் முன்னொற்றுக்கள் இரட்டாவாம். எ - று.

ஒழிந்த உருபுகளோடும் இவ்வாறேயொட்டுக.

பிறவென்றமையானே, நீயென்பது உன்னையென்றும், நீரென்பது உம் மையென்றும் வருதல் கொள்க. முன்னும்பின்னுஞ்சாரியைப்பேறு கூறுவார் சாரியைபொருவிகாரப்படுமொழிகளை இச்சூத்திரத்தாற்கொன்ற இடையே கூறியது, இப்பொதுப்பெயர்களே இங்ஙனம் தம் நம் நும்மெனச் சாரியை யிடைச்சொல்லுமாயினவென உய்த்துணர்தற்கென்க.

இச்சூத்திரத்து 'நான்காறிரட்டல' என்ற ஒன்றும் எய்தியதுவிலக்கல்.(அ)

உசஅ. ஆமா கோனவ் வணையவும் பெறுமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஆவென்னும்பெயரும் மாவென்னும் விலங்கின்பொதுப்பெய ரும் கோவென்னும் இறைவனையுணர்த்திநிற்கும் பெயரும் உருபுகள் புணருமிட த்து னகரச்சாரியைபொருந்தவும் பெறும். எ - று.

(வ - று.) ஆனை, ஆவை; மானை, மாவை; கோனை, கோவை என விகற் பித்து வருதல்காண்க. பிறவற்றோடும் இவ்வாறேயொட்டுக.

எதிரதுதழீஇய வெச்சவும்மையானே குவ்வுருபிற்கு னகரச்சாரியையொ ன்றுமே அமையாது ஆனுக்கு, மானுக்கு, கோனுக்கு என உகரச்சாரியையுடன் பெறுதலும், ஆவுக்கு, மாவுக்கு, கோவுக்கென உகரச்சாரியை ஒன்றுமேபெறு தலும், ஆவினுக்கு, மாவினுக்கு, கோவினுக்கென இன்சாரியையும் உகரச்சாரியை யும் உடன்பெறுதலும், ஆவினை, மாவினை, கோவினை என இன்னெனவரும் வேற்றுமையுருபொழிந்தவற்றிற்கும் இன்சாரியைபெறுதலுங்கொள்க.

---

* நன். சூ. ௩௮௦.

இனி இரட்டுறமொழிதலான், ஆமாவென ஒருசொல்லாய்க் காட்டாவினை யுணர்த்திநின்று இவ்விதிகள்பெறுதலும், அனையவுமென்றெழியாது பெறுமே யென்றமிகையானே ஆன் மான் கோன் ஆமான்என னகரச்சாரியை தனி மொழிக்கண்ணும் வருதலுங்கொள்க.

ஆவென்பதனொடு கோவென்பதனைச் சாரவையாது மாவென்பதனைச்சார வைத்தமையானே கோவென்பது இறைவனையுணர்த்தியதென்பதூஉம் மாவென்பது விலங்குமாவென்பதூஉம் பெற்றும். (க)

உசகூ. ஒன்று முதலெட் டீறு மெண்ணூர்
பத்தின்முன் னான்வரிற் பவ்வொற் றொழியமேல்
எல்லா மோடு மொன்பது மிற்றே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒன்றுமுதல் எட்டீறுமெண்களோடு புணர்ந்த பத்தென்னும் எண்முன்னர் உருபுகள் புணருமிடத்து இடையே ஆன்சாரியைவரின் அப்பத் தென்னும் எண்ணினது பகரவொற்று ஒன்றுமேநிற்க மேனின்ற எல்லாவெழுத் தும் கெடும்; ஒன்பதென்னும் எண்முன்னரும் உருபுகள் புணருமிடத்து ஆன்சா ரியைவரின் அதன்பகரவொற்றுநிற்க மேனின்ற எல்லாவெழுத்துங்கெடும். எ-று.

(வ - று.) ஒருபானை, ஒருபதை, ஒருபஃதை; இருபானை, இருபதை, இருபஃதை எ-ம், ஒன்பானை, ஒன்பதை, ஒன்பஃதை எ-ம் விகற்பித்தும்வரும். பிறவற்றோடும் இவ்வாறேயொட்டுக.

ஒருபது ஒருபஃதென விகாரப்பட்டுவரும் பத்தென்பார் எண்ணூர்பத் தென்றார்.

வரினென்றமையான், வருதற்கும் இதுவே விதியென்பதூஉம், இவ்வாறு ஆன்வருதலைப் பராமுகமாகக்கூறினமையின் உகரச்சாரியை இன்சாரியைகளும் வேண்டுழிவருமென்பதூஉங்கொள்க. (க௦)

வகரவீற்றுச்சுட்டுப்பெயர்க்குச் சிறப்புவிதி.

உரு௦. வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அஃறிணைப் பன்மையவாய வகரவீற்று மூன்றுசுட்டுப்பெயர்க்கும் உருபுகள்புணருமிடத்து அற்றுச்சாரியைபொருந்தல் முறைமையாம். எ-று.

(வ - று.) அவற்றை, இவற்றை, உவற்றை என அற்றுச்சாரியைவேண்டியேவருதல்காண்க.

வழியேயென்றமிகையானே அவற்றினை, இவற்றினை, உவற்றினை என இன்சாரியை வருதலும் தனிக்குறின்முன்னொற்று உயிர்வரின் இரட்டாமையுங் கொள்க. பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. (கக)

உருக. சுட்டின்முன் னாய்த மன்வரிற் கெடுமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அஃது, இஃது, உஃது எனவரும் மூன்றுசுட்டுப்பெயர்களோடு உருபுகள்புணருமிடத்து இடையே அன்சாரியைவரின் மொழிமுதற்சுட்டெழுத்துக்கள்முன் நின்முன்னின்ற ஆய்தங்கெடும். எ - று.

(வ - று) அதனை, அஃதை; இதனை, இஃதை; உதனை, உஃதை எனச் சாரியை விகற்பித்துவருதலும் வந்தவழி ஆய்தங்கெடுதலுங்காண்க.

அன்சாரியைவருதனோக்கி ஆய்தங்கெட்டவழி அது, இது, உது என ஆய்த மில்லாச் சுட்டுப்பெயர்களாய்ப் பின்னர் அன்சாரியைபெறுதலின் அவற்றிற்கும் இதுவே விதியெனக்கொள்க.

(வ - று.) அதனை, அதை; இதனை, இதை; உதனை, உதை என விகற் பித்துவருதல்காண்க.

அன்வருதலைப் பராமுகமாகக்கூறினமையின், குவ்வுருபு புணர்வழி அதற் கென அன்சாரியை தனித்துவருதலேயன்றி அதனுக்கு என உகரச்சாரியை உடன் வருதலுங்கொள்க. (கஉ)

உருஉ. அத்தி னகர மகரமுனை யில்லை.

எ - ன், அத்துச்சாரியைக்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுத லிற்று.

(இ - ள்.) அத்துச்சாரியையின் அகரவுயிர் இயல்பினும் விதியினுநின்ற அகரவுயிரீற்றின்முன்வரின் வகாவுடம்படுமெய்பெறாது கெடும். எ - று.

(வ - று.) மகத்துக்கை, மரத்துக்குறையென இரண்டு அகரவீற்றின் முன்னுங்கெட்டது. (கங)

புறனடை.

உருங. இதற்கிது சாரியை யெனினள வின்மையின்
விகுதியும் பதமு முருபும் பகுத்திடை
நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும்
ஒன்ற [1]வுணர்த்த லுரவோர் நெறியே.

எ - ன், சாரியைக்கு ஆவதொரு புறனடையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) விகுதிமுதலியபுணர்ச்சிக்கண் இதற்கு இது சாரியையெ ன்று வரையறுத்து விதித்தனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் தனித்தனி சொல்லப்புகின், வரையறைப்படாமையின், விகுதிப்புணர்ச்சியினையும் பதப் புணர்ச்சியினையும் உருபுபுணர்ச்சியினையுங் கண்டுழிப் பகுத்து, இடையேநின்ற ஏகாரம் அகரமுதலிய எழுத்துச்சாரியையினையும், அன் ஆன்முதலிய பதச்சாரி யையினையும், இவ்விரண்டுசாரியையுந்தோன்றா இயல்பினையுந்தெரியவறிவித்தல் பெரியோரது நெறியாம். எ - று.

(வ - று.) "ஆனமணி யியம்புங் கானத் தான" எ - ம், "ஆனநெய் தெளித்து நான நீவி" எ - ம் விதித்த பொருட்புணர்ச்சிக்கண் "உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்" என்றமாட்டேற்றானமைந்த னகரச்சாரி யையன்றி அகரச்சாரியையும் உடன்வந்தன.

இனி விதியாதொழிந்தனவற்றின்கண் "பாட்டின்பொருள்" எனக் குற்றி யலுகரத்துக்கு இன்சாரியையும், மரத்திலையென மஃகான்புள்ளிக்கு அத்துச்சாரி யையும்வந்தன. தன்கை, என்கை எனச்சாரியையின்றி இயல்பாய்வந்தன. இவ் வாறே மூவகைப்புணர்ச்சியும் பகுத்துணர்ந்துகொள்க.

(பி - ம்.) [1] 'உணர்த்துதல்'

எல்லாச்சாரியையும் இடைப்பதமெனினும், எழுத்துச்சாரியை பதச்சாரியையெனப் பகுத்தல் வேறறிதற்கென்றிட்ட இலக்கணையாமென்க. (கச)

உ௪௪. விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த [1]விதியினோர்ந் தொப்பன கொளலே.

எ - ன், இங்ஙனங்கூறிய நான்கின்புணர்ச்சிக்கும் ஆவதொரு புறனடை உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்) விகுதியே பதமே சாரியையே உருபே என்னும் நான்கின் புணர்ச்சிக்கண்ணும் விதிகள் பொதுப்படக்கூறப்பட்டனவேனும் அவ்விதிகளுள் இவ்விதி இதற்குப்பொருந்தும் இதற்குப்பொருந்தாதென உய்த்துணர்ந்து எவ்விதி எதற்குப்பொருந்துமோ அவ்விதியை அதற்குக் கொள்க. எ - று.

(வ - று.) விகுதிப்புணர்ச்சியுள், "றவ்வொடுகரவும் மைநிகழ் பல்லவும்" எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி இவ்விகுதிவந்துழியெல்லாம் இவ்விருகாலமும் பொருந்துமென்று கொள்ளற்க; 'சென்று' என்புழி இறந்தகாலமும், 'சேறு' என்புழி எதிர்காலமும் பொருந்துமென்று கொள்க.

பதப்புணர்ச்சியுள், "அல்வழி இஐம் முன்ன ராயி, னியல்பு மிகலும் விகற்பமு மாகும்" எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி 'ஆடிதிங்கள்' என இயல்பாமென்றும், 'பருத்திக்குறிது' எனமிகுமென்றுங்கொள்ளற்க; பருத்திகுறிது என எழுவாய்க்கண் இயல்பாமெனவும், * "ஆடித்திங்கள்" எனப் பண்புத்தொகைக்கண் மிகுமெனவுங்கொள்க.

சாரியைப்புணர்ச்சியுள், "பதமுன் விகுதியும் பதமு முருபும், புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை, வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்" எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி, நாட்டினினீங்கினானென இன்னெனவருஉம் வேற்றுமையுருபிற்கு இன்சாரியை வருமென்றும் நாட்டுக்கண்ணிருந்தானெனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வாராதென்றுங் கொள்ளற்க. நாட்டின்கணிருந்தானெனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வருமென்றும், நாட்டினீங்கினானென இன்னுருபிற்கு இன்சாரியைவாராதென்றுங் கொள்க.

உருபுபுணர்ச்சியுள், "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி, னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே" எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி, நம்பிகு என உயர்திணைப்பெயர்முன் வந்த குவ்வுருபு மிகாதென்றும், நம்பிக்கணென 'மன்' என்றமையாற் கண்ணுருபுமிகுமென்றுங் கொள்ளற்க. நம்பிகண் எனக்கண்ணுருபு மிகாதென்றும், நம்பிக்கு எனக் குவ்வுருபு 'மன்' என்றமையான் மிகுமென்றுங்கொள்க. பிறவுமன்ன.

சாரியைப்புணர்ச்சி ஏனைமூவகைப்புணர்ச்சியினையுஞ்சார்ந்து இடையே தோன்றல்விகாரமாயவந்து புணர்தலின், விகுதிபதஞ்சாரியையுருபென உருபிற்குமுற்கூறினர்.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறுபொருள்கொள்ளாது இந்நால்வகைப்புணர்ச்சியுள் ஒன்றற்குச்சொன்னவிதி மற்றொன்றற்குங்கொள்கவெனப் பொருள

* சிலப். உ௩: க௩௩.

(பி - ம்.) 1 'விதியுளோர்ந்து'

கொள்வாருமுளர். அப்பொருட்கு அமைந்தசொல் இச்சூத்திரத்து இன்மையானும், "சாரியை, சந்தி விகார மாறினு மேற்பவை, முன்னிப் புணர்ப்ப முடியு மெய் பதங்களும்" என்றும், "ஈறுபோதல்" என்னுஞ்சூத்திரத்து அவ்விகாரம் விகுதிப்புணர்ச்சிக்கண்ணன்றிப் பதப்புணர்ச்சிக்கண்ணும் வருமென்பது தோன்ற, "பண்பிற்கியல்பே" என்றும், புணரியல்விதி பெயர்வினையிடையுரி நான்கிற்கும்பொருந்துமென்பதுதோன்ற "மெய்யுயிர் முதலீ ரும்இரு பதங்களும்" என்றும் விதந்துரைத்த சிறப்புவிதிகளுள், "உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்" என்றும், "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியினொக்கும னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே" என்றுங்கூறியவாற்றான் அப்பொருள் அமைந்துகிடத்தலானும் அது பொருந்தாதென்க. (கரு)

## இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சிக்குச் சிறப்புவிதி.

உருரு. இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவு மாகுமை யுருபே.

எ - ன், வேற்றுமைப்புணர்ச்சிக்கு ஆவதொருபுறனடையுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைப்புணர்ச்சிக்குவிதித்த பொதுவிதியோடு தானும் ஒருங்குமுடிதலேயன்றி அங்ஙனம்விதித்த இயல்பின்கண் விகாரமாயும், விகாரத்தின்கண் இயல்பாயும் உயர்திணைக்கண் விரிந்தும் தொக்கும், விரவுப்பெயர்க்கண் விரிந்தும் விரிதலொழிந்தும் இவைபோல்வன பிறவேறுபாடாயும் வரும், இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி. எ - று.

உயிரே ஒற்றே சாரியைப்பெயரென்றிவை தோன்றல் திரிதல் கெடுதல் உறழ்ச்சிவிகற்பங்களையெல்லாம் உள்ளடக்கி 'இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்' என்றும், எல்லாவேற்றுமையும் விரிந்தும் தொக்கும் வருதல்போலாது இவ்வேற்றுமை உயர்திணைப்பெயர்க்கண்ணும், விரவுப்பெயர்க்கண்ணும் விரிதல்லதகுதியாய்த் தொகுதலே தகுதியாயும் வலிந்துகோடலாயும் வருமென்பதுதோன்ற விரிந்தும் தொக்கும் விரிந்தும் விரிதலின்றுமென்றும், வருநலளவும் வருத்துயபிணி இன்றுநினறதென்பதுபோல ஒழிதற்பொருளாந்தான்றநின்றென்றுங்கூறினர்.

மேலைச்சூத்திரத்து 'ஒட்டனகொளலே' என்றமையான், இவ்விதிகளை இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சி வந்துழியல்லாமற்கூட்டாது வேற்றுமைப்பொதுப் புணர்ச்சியோடு ஒருங்கொத்துமுடிவன இவை, இப்புறனடைச்சிறப்புவிதியான் முடிவன இவையென உய்த்துணர்ந்து ஏற்பனவறிந்தூட்டுக.

(வ - று,) * "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என இயல்பின்விகாரமாயிற்று. மணிகொணர்ந்தானென விகாரத்து இயல்பாயிற்று. நம்பியைக் கொணர்ந்தானென உயர்திணைக்கண் விரிந்தது. † ஆவுரிஞ்சுதறிசால், மகவுயர்ந்தசால, பல்லோரறியுஞ்சால, ‡ "நான்முகற்றொழுது" என அதன்கண் தொக்கது. கொற்றனைக்கொணர்ந்தானென விரவுப்பெயர்க்கண் விரிந்தது. ஆனை

* தொல். செய். சூ. ககப. † தொல். கிளவி. சூ. உ. ‡ நன். சூ. ருக.

பெற்றான், பெண்பெற்றான், * "தற்கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத் துணை", "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என அதன்கண் தொக்கது. இவ்விரண்டிடத்துந் தொகையுட் சில தகுதியாயும் சில வலித்துக்கோடலாயும் வருதல் காண்க. அன்னபிறவுமென்றமையானே தற்கொண்டான், "எற்பணியானாய்" என உறழப்படுவன திரிந்துவருதலும் இன்னும்வருவனவுளவேல் அவையும் கொள்க.

இங்ஙனம் எண்ணின்கண்நின்ற இறந்ததுதழீஇய இழிவுசிறப்பும்மைகளானே வேற்றுமைக்கெனவிதித்த பொதுவிதியோடு ஒருங்கொத்து வரகுகட்டினானென இயல்பின்கண் இயல்பாயும், விளக்குறைத்தான், பலாக்குறைத்தான், கடுக்குறைத்தானென விகாரத்தின்கண் விகாரமாயும் வருதலே பெரும்பாலனவென்க.

இனி விரவுப்பெயர்க்கண் விரிந்துநின்றுமென்பதற்கு இவ்வாறன்றி எழுந்திருந்தென்பதற்கு இருந்தென்பதனை அசைநிலையாக்கி எழுந்தென ஒருபொருள் கோடல்போல நின்றென்பதனை அசைநிலையாக்கி விரிந்தென ஒருபொருள்கொள்ளின் வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணுந் தொக்குவரும் இலக்கியங்கட்கு இலக்கணமின்றாமென்க. (௧௬)

## மூன்றாம் வேற்றுமைப் புணர்ச்சிக்குச் சிறப்புவிதி.

௨௫௬. புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்
தம்மி னாகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமு மியல்பு மாகும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) மூன்றாம்வேற்றுமைப்புணர்ச்சியுள், ஒற்றும் உயிரும் இறுதியாய் நின்றசொன்முன்னாக் கருவிகருத்தா வுடனிகழ் வதன்பொருளென்பவற்றுட் கருத்தாவாகிய நிலைமொழிப்பொருள் தம்மாலாகிய தொழிற்சொல்வரின், அங்ஙனம்வரும் வல்லினம் வேற்றுமைப்பொதுமுடிபேலாது விகற்பமும் இயல்புமாம். எ - று.

இவ்விதியுமொப்பனகொள்க:

(வ-று.) பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான், சூர்கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான்; புலிகோட்பட்டான், புலிக்கோட்பட்டான் எ - ம், பேய்பிடிக்கப்பட்டான், புலிபிடிக்கப்பட்டான் எ - ம் வரும். உம்மையான் சுறாப் பாயப்பட்டான், அராத்தீண்டப்பட்டானென வேற்றுமைப்பொதுவிதியான் மிக்குமுடிவனவே பெரும்பாலனவென்க. இவற்றுள் தம்மினாகியதொழில் பட்டானென்பதாம்; கொள்ளென்பதுமுதலியவினை இடைப்படவருவன தந்தொழிலாம். இங்ஙனமாயினும் இவ்விரண்டினையும் ஒருசொல்லாக்கித் தம்மினாகிய தொழின்மொழியென்றார். பட்டானென்புழி, இதுபட்டானென்னும்பொருட்டோன்றுதகை கொள்ளென்பதுமுதலியன அதனைவிசேடித்துநிற்கும் ஒற்றுமைநயங்கருதியவென்க; வேற்றுமைநயங்கருதின் கோட்பட்டானென்பதோர் தொழிற்பெயர் எழுவாயுடைப்பயனிலையாகிய வினையெச்சம் முற்றுவினைகொண்டதாம். எழுவாய்க்கண்ணும் மூன்றாம்வேற்றுமைக்கண்ணும் கருத்தாவுளவாதலின், தந்தொழிலெனாது தம்மினாகிய தொழிலென்றாரென்னை, பேய்பிடித்ததென்னுமெழுவாய்க்கட் பேயாற்

* திருக்குறள், ௫௧.

பிடித்ததென மூன்றுமுருபும் விரித்தற்குஅமையும்; அங்ஙனம் விரித்தல் கூடாமையின் தந்தொழிலும் தம்மினாகியதொழிலும் எழுவாய்க்கட்கருத்தாவும் மூன்றாம் வேற்றுமைக்கட் கருத்தாவும் தம்முள் வேறுபாடுடையவாம்; அவ்வேறுபாடு அவ்விலக்கணங்கூறும்வழிக் காட்டுதும். (கஎ)

## புறனடை.

உருஎ. இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

எ-ன், இவ்வதிகாரத்திற்கு ஆவதொரு புறனடையுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இதற்கு இதுமுடிபென்று இவ்வதிகாரத்துள் விதிக்கத்தகுவனவற்றையெல்லாம் தனித்தனி வரையறுத்து விதிக்கப்புகின் அதற்கு ஒருவரையறையின்மையின், வகுத்து விதித்தவற்றின் இலக்கணங்களை ஏதுவாகக்கொண்டு வகுத்து விதியுரையாதனவற்றையும் கருதலளவையான் வகுத்து விதியுரைத்துக்கொள்க. எ - று.

(வ - று.) எழுத்தியலுள், "மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி, யெழுத்து" எனஉரைத்தமையானே, "கட்புல னில்லாக் கடவுளைக் காட்டுஞ், சட்டகம் போலச் செவிப்புல வொலியை, யுட்கொளற் கிடமா யாம்வடி வெழுத்தே" எனப் பிறர்கூறியவாறு இவ்வொலிவடிவைக்காட்டுதற்கு ஒருகருவியாக வரைந்துகொள்ளப்பட்டது வரிவடிவெழுத்தெனவும், பதவியலுள், "அன் ஆன் அள் ஆள்" என்னுஞ்சூத்திரத்து முறையே அன் ஆன்விகுதி ஆண்பாற்கென உரைத்தமையானே பெருமானென்னுமிடத்தும் பெருமையையுடையானென்னும்பொருள்தோன்றநின்ற பெருமானென்னும்பதத்தினது இறுதிஆன்விகுதி ஆள்விகுதியாய் ஓரோவிடங்களிற்றிரிந்து ஆண்பாலையே உணர்த்திநின்றதெனவும், உயிரீற்றுப்புணரியலுள், "இயல்பினும் விதியினுநின்ற வுயிர்முன், கசதப மிகும்" எனவுரைத்தமையானே, "ணளவல் லினம்வரட் டறவும்" என்புழி டகாரமும் வல்லினமாதலின் மிகுந்ததெனவும், மெய்யீற்றுப்புணரியலுள், "நுந்தம், எம்நம் மீறு மவ்வரு ஞநவே" எனவுரைத்தமையானே, அம்மென்னுஞ் சொல்லிறுதிமகரமும் குற்றொற்றாதலின் தன்னொடுமியைந்த மெல்லினம்வரின் அதுவாய்த்திரிந்து அந்நலமென அழகினது நலமென்னும்பொருட்டாய் வருமெனவும், உருபுபுணரியலுள், "வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே" எனவுரைத்தமையானே, அதுபோலும் வினாவும் எவற்றையென அற்றுச்சாரியை பெறுமெனவும், இரண்டாம்வேற்றுமைக்கும் மூன்றாம்வேற்றுமைக்கும் புறனடையுரைத்தமையானே ஏழாம்வேற்றுமையும், "மண்புகுந்தும் விண்பறந்து மாலுமயலுங் காணுமொருபொருள்" என வேற்றுமைப்படாது விதியேலாது சிறுபான்மை வருமெனவுங்கொள்க.

இன்னும் இவ்வைந்தியலுள்ளும் வகுத்துரையாதனவற்றையெல்லாம் இடர்ப்படாது இதுமேனிலைக வகுத்துரைத்துக்கொள்க. (கஅ)

ஐந்தாவது உருபு புணரியல் முற்றிற்று.

---

எழுத்ததிகாரம் முற்றிற்று.

---

இரண்டாவது

# சொல்லதிகாரம்.

## ௧.—பெயரியல்.

௨௫௮. முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே.

எ - ன், கடவுள்வணக்கமும் அதிகாரமுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மூன்றுலகத்துக்கும் நிழலைச்செய்யும் நிறைந்தமதிபோலு மூன்றுகுடையையுடைய அழியாதவன் அடிகளைவணங்கிச் சொல்லுவன், மேலையதிகாரத்துக்கூறிய எழுத்திறையைசொல்லிலக்கணத்தை. எ - று.

தோன்றிஅழிய மாலையவென்பார் சகமென்றும், உலகமே உருவமாயினன் உயிர்இன்புறுவதே தானின்புறுவதென்பார் அக்கடவுண்முடிமேல்நிழற்றுங்குடையை மூச்சகத்திற்குநிழற்றுமென்றும், நிறைந்ததண்ணளியையுடையனென்பார் அதனை உவமைமுகத்தாற் குடைமேல்வைத்து முழுமதிமுக்குடையென்றும், சுதந்திரமின்றித் தோன்றியழியுமுயிரும் பிறவுமாகியசகத்திற்கு அவ்வாறு தோன்றியழியான் தலைவனாகவேண்டுமென்பார் அச்சுதனென்றும், நம்செயலன்றென்பார் அடிதொழுதறைகுவனென்றும், வரையறைப்படாதபெருமையுடையதென்பார் அவ்வாற்றல்தோன்றச் சொல்லென்றுங்கூறினர்.

ஈண்டுக் காப்பதுகருதி அச்சுதனென்றது, மேலைஅதிகாரத்துப் படைப்பது கருதி நான்முகனென்றதுபோலும்.

சொல்லென்பது ஆகுபெயர். ஏகாரம் ஈற்றசை. (௧)

### சொல்லின் பொதுவிலக்கணம்.

௨௫௯. ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்றா
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.

எ - ன், மேற் சொல்லென்றது இஃதென்பதுணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) ஒருமொழியும் தொடர்மொழியும் பொதுமொழியுமென மூன்று கூற்றினதாய் இருதிணையாகிய ஐம்பாற்பொருளினையும் அப்பொருளையன்றித் தன்னையும் மூன்றிடத்தினும் வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் வெளிப்படையானும் குறிப்பினும் விளக்குவது சொல்லாம். எ - று.

எனவே எல்லாச்சொல்லும் பொருளும் ஒருமொழி தொடர்மொழி பொதுமொழியென்னுமூன்றையும் இருதிணைப்பாலாயுமடங்குமென்பதூஉம், இருதிணைமுதலியகாரணத்தான் உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல், ஆண்பாற்சொல், பெண்பாற்சொல், பலர்பாற்சொல், ஒன்றறிசொல், பலவறிசொல், தன்

மைச்சொல், முன்னிலைச்சொல், படர்க்கைச்சொல், வழக்குச்சொல், செய்யுட்சொல், வெளிப்படைச்சொல், குறிப்புச்சொல் எ - ம், உயர்திணைப்பொருள், அஃறிணைப்பொருள், ஆண்பாற்பொருள், பெண்பாற்பொருள், பலர்பாற்பொருள், ஒருபொருள், பலபொருள், தன்மைப்பொருள், முன்னிலைப்பொருள், படர்க்கைப்பொருள், வழக்குப்பொருள், செய்யுட்பொருள், வெளிப்படைப்பொருள், குறிப்புப்பொருள் எ - ம் வழங்கப்படுமென்பதூஉம், உயிர்க்கு அறிவு கருவியாய்நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறுபோல ஒருவற்குச்சொற் கருவியாய்நின்று தன்னையும், உள்பொருள், இல்பொருள், மெய்ப்பொருள், பொய்ப்பொருள், சித்துப்பொருள், சடப்பொருள், நித்தியப்பொருள், அநித்தியப்பொருள், உருவப்பொருள், அருவப்பொருள், காட்சிப்பொருள், கருத்துப்பொருள், இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள், முதற்பொருள், சினைப்பொருள், இயங்கியற்பொருள், நிலையியற்பொருளெனப் பலவாற்றானும் பகுத்துக்கூறப்படும் இருதிணையைம்பாற் பொருளையுமுணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (உ)

## மூவகைமொழி.

உசுo. ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி
பலபொரு ளனபொது விருமையு மேற்பன.

எ - ன், மேலைச்சூத்திரத்து நிறுத்தமுறையானே மூவகைமொழிகளாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒருமொழிகளாவன பகாப்பதமேனும் பகுபதமேனும் ஒன்றுநின்று தத்தம் ஒருபொருளைத்தருவனவாம்; தொடர்மொழிகளாவன அவ்விருவகைப்பதங்களும் தன்னொடும் பிறிதொடும் அல்வழிவேற்றுமைப்பொருணோக்கத்தான் இரண்டுமுதலியவாகத்தொடர்ந்துநின்று இரண்டுமுதலியபலபொருளைத்தருவனவாம்; பொதுமொழிகளாவன ஒன்றாய்நின்றுஒருபொருள் தந்தும் அதுவேதொடர்ந்துநின்று பலபொருள்தந்தும் இவ்விரண்டற்கும்பொதுவாய் நிற்பனவாம். எ - று.

(வ - று.) நிலம், நிலத்தன்; நட, நடந்தான்; இல், மன்; தவ, நனி என்றற்றொடக்கத்தன ஒருமொழி; நிலம்வலிது, அதுகொல், சாலப்பகை, நிலங்கடந்தான், நிலத்தைக்கடந்தான், நிலங்கடந்தநெடுமால் என்றற்றொடக்கத்தன தொடர்மொழி; எட்டு, கொட்டு, தாமரை, வேங்கை, எழுந்திருந்தான், வாராநின்றான், உரைத்திட்டான் என்றற்றொடக்கத்தன பொதுமொழி. இவை ஒருமொழிகளாய் ஒருபொருள்தருவதன்றி, எள்ளைத்து, கொள்ளைத்து, தாவுகின்றமரை, வேகின்றகை, எழுந்து பின்இருந்தான், வந்துநின்றான், உரைத்துப்பின் இட்டானெனத்தொடர்மொழிகளாய்ப் பலபொருள்தருதலுங்காண்க.

மொழிகள் தொடராது யாங்கணுந்தனித்துநில்லாவேனும் இப்பொருட்கு இச்சொல்லென இறைவனானும் அறிவுடையோரானும் படைக்கும் படைப்புக்காலத்துந் தொடர்மொழிக்கண்ணின்ற இரண்டுமுதலியசொற்களுள் ஒன்றுநின்று மற்றைய எஞ்சியவழியும் தனித்துநிற்றலின்ஒருமொழியென்றார். எஞ்சியவழித் தனித்துநிற்றல்வருமாறு:—ஒருவனுழை ஒருவன்வந்துழி வாவென்றல் உலகியல்; அவ்வுழி வருதற்கு வினைமுதலாகிய நீயென்னுஞ்சொல் எஞ்சி வாவென்னுஞ்சொல் தனித்து ஒருமொழியாய் நின்றது. இத்தொடக்கத்தனவெல்லாங்கொள்க. சேனை, குழாம் என்றற்றொடக்கத்தனஒருமொழி பலபொருள்

கந்ததென்னையெனின், ஈண்டுத் தொடர்மொழிபலபொருளனவென்றது, பல சொல்லிற்பலபொருளையன்றி இப்பொருளையன்றென்க. இப்பொருளைப் பல பொருளான் இயைந்தவொருபொருளென ஆசிரியரகத்தியனார், "பலவி னியைந் தவு மொன்றெனப் படுமே, யடிசில் பொத்தகஞ் சேனை யமைந்த, கதவு மாலை கம்பல மனைய" எனக்கூறுமாறுகாண்க. (௩)

## இருதிணை.

௨௬௧. மக்க டேவர் நரக ருயர்திணை
மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை.

எ - ன், நிறுத்தமுறையானே இருதிணையுமாறுணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) மக்களும்தேவரும் நரகரும் உயர்திணையாம்; அவரையொழிந்த விலங்குமுதலிய உயிருள்ளனவும் நிலம் நீர்முதலிய உயிரில்லனவும் அஃறிணையாம். எ - று.

மக்கடேவர்நரகரெனப்படுதல் அவ்வவ்யாக்கையும் உயிருங்கூடிநின்றவழியாதலின் அவைபிரிந்தவழியும் வேறுகருதியவழியும் அவருயிரையும் உடம்பையும் உயிரில்லனவாகிய அஃறிணையாகக்கொள்ளப்படுமென்க. விலங்குமுதலியவற்றின் உயிருடம்புகளும் அன்ன. மக்களாகப்பிறந்து புண்ணியம்பாவம் இயற்றி அப்புண்ணியமிகுதியான் தேவராயும் அப்பாவமிகுதியான் நரகராயும் பிறத்தலின், மக்கடேவர்நரகரெனச் சாதனசாத்தியமுறையே வைத்தாரென்க.

*"திணைநிலங் குலமொழுக்கம்" என்பவாகலின், திணையென்னும் பலபொருளொருசொல் ஈண்டுக் குலத்தினையுணர்த்திநின்றது. உயர்திணையல்லாத திணை அஃறிணையெனப்பட்டது. இவ்விரண்டும் பண்புத்தொகை. உயர்வாயகுலம், அஃதன்மையாயகுலமென விரியும். அடையடுத்த இவ்விரண்டுசாதிப்பண்புகளும் ஆகுபெயராய்ப் பண்பிகளையுணர்த்திநின்றன. திணையென்பது ஒழுக்கம்; அஃது ஆகுபெயராய் ஒழுக்கத்தையுடைய பொருள்களையுணர்த்திநின்றதெனவும், உயர்திணையென்பது வினைத்தொகையெனவுங்கூறுவாருமுளர். சாதிவேற்றுமை கருதி உலகப்பொருள்களையெல்லாம் உயர்திணை அஃறிணையென இரண்டுசாதியாகவகுத்து அவ்வேற்றுமைகருதி அவற்றை ஐம்பாலாகப் பகுத்தலே எல்லாவாசிரியர்க்கும் கருத்தாவதன்றி ஈண்டொழுக்கங் கருதவேண்டுவதின்மையானும் அவ்வொழுக்கமும் உயிரில்லனவற்றிற்குப் பொருந்தாமையானும் ஈண்டுத்திணையென்பதற்கு அதுபொருளன்றெனவும் உயர்திணையை உயர்ந்ததிணையென இறந்தகாலவினைத்தொகையாக விரிக்கின், மரம்நாடோறும் உயர்ந்தமை கருதி உயர்மரமெனவும், கல்வியறிவுநாடோறும் உயர்ந்தமைகருதி அதனை உடையார் மேலேற்றி உயர்மக்களெனவுங்கூறும் வினைத்தொகைபோல உயர்திணையென்பதற்கு உயரும்புடைபெயர்ச்சிவினை காட்சிவகையானும் கருத்துவகையானுமின்மையின் அது வினைத்தொகையன்றெனவுங்கொள்க. (௪)

## பால்.

௨௬௨. ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

எ - ன், நிறுத்தமுறையானே ஐம்பாலுட் சிலபாலும் அவற்றிற்குரிய திணையுமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஆண் பெண் பலரென்னும் இம்மூன்றுபாலினையுமுடைத்து, உயர்திணை. எ - று.

* சூடாமணி. கக: ணகர. ரு.

ஆடவரென்றதற்றொடக்கத்து ஆண்பன்மையும், பெண்டிரென்றதற்றொடக்கத்துப் பெண்பன்மையும், மக்களென்றதற்றொடக்கத்து இருவர்பன்மையும் பலரெனப்பட்டதென்க. மேற் பலவென்பதும் அது. (௫)

உசுரு. ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒன்றும்பலவுமென்னும் இரண்டுபாலினையுடைத்து, அஃறிணை. எ - று.

அஃறிணைக்கண்ணும் சேவலென்றதற்றொடக்கத்து ஆண்பாலும், பெடையென்றதற்றொடக்கத்துப் பெண்பாலுமுளவேனும் அவ்வாண்பாலும் பெண்பாலும் உயிருள்ளனவற்றுட்சிலவற்றிற்கும் உயிரில்லனவற்றிற்கும் இன்மையின் அப்பகுப்பொழித்து எல்லாவற்றிற்கும் பொருந்த ஒன்றெனப்பட்டதென்க. (௬)

## திணைபால்களுக்குப் புறனடை.

உசுச. பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையு மஃறிணை யன்னவுமாகும்.

எ - ன், திணைபால்கட்கு ஆவதொரு புறனடையுணர்த்துதனுலிதற்று.

(இ - ள்.) பெண்டன்மையினைவிட்டு ஆண்டன்மையினை அவாவுவனவாகியபேடுகள் உயர்திணையாண்பாலாம்; ஆண்டன்மையினைவிட்டுப் பெண்டன்மையினை அவாவுவனவாகிய பேடுகள் உயர்திணைப்பெண்பாலாம்; இவ்விருவகைப் பேடுகளும் உயர்திணையாமன்றி அஃறிணையையொப்பனவுமாம். எ - று.

ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் விரவி ஒருவகையேனும் நிரம்பாதுநிற்கும் பேட்டினைப் பாற்பொதுமையினீக்கி உயர்திணையாண்பாலோடும் பெண்பாலோடுஞ்சேர்த்தமையின், அவ்விலக்கணங்களுள் விட்டவிலக்கணமும் அவாவுமிலக்கணமுஞ்சிறந்தனவென்பதூஉம், விடாதவிலக்கணமும் அவாவாத இலக்கணமுமுள்ளவை அத்துணைச் சிறப்பினவல்லவென்பதூஉம், விடுதலும் அவாவுதலும் இலக்கணையென்பதூஉம், பேட்டிலக்கணங்களுட் சிறந்ததொன்றையேகருதாது சிறவாதனவற்றையும் உடன்கருதியவழி இருவகைப்பேடும் ஆண்பெண்ணென்னுமிரண்டனுள் ஒன்றன்பாற்படுதல் கூடாமையின் அப்பாலினவாமுயர்திணையுமன்றி அஃறிணையிலக்கணமின்மையின் அஃறிணையுமன்றி உயிருள்ளனவற்றுள் ஆண்பெண்ணென்னும்பகுப்பிலவாகின்ற அஃறிணையையொக்குமென்பதூஉம் பெற்றாம். பேடு, அலி, அலி, மகண்மாஎன்பன ஒருபொருட்கிளவி. அலி, மகண்மாஎன்பனவற்றை வேறுகூறுவாருமுளர்.

* "பெண்ணவா யாணிழந்தபேடி யணியாளோ" எனப்பெண்ணிலக்கணஞ்சிறந்தமையிற் பெண்பாற்பட்டது; ஆண்பாற்பட்டதற்கும் அஃறிணையொத்துநின்றதற்கும் இலக்கியம் வந்தவழிக்காண்க. (எ)

உசுரு. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
இடத்தவற் றொருமை பன்மைப் பாலே.

* நாலடி. உருக.

எ-ன், நிறுத்தமுறையானே மூன்றிடத்தும் சொல் தன்னையும்பொருளையு முணர்த்துமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெளிப்படைச்சொல்லாயும் குறிப்புச்சொல்லாயும் வழக்கின் கண்ணும் செய்யுட்கண்ணுநிற்கும் படர்க்கைவினைமுற்றுச்சொல்லையும், படர்க்கைப்பெயர்ச்சொல்லையும் முன்குறித்தாற்பின் அவ்விருவகைச்சொல்லுங்கருவியாக இருதிணையும் ஐம்பாலும்பெறப்படும்; ஒழிந்த தன்மைமுன்னிலைவினைமுற்றுச்சொல்லையும் தன்மைமுன்னிலைப் பெயர்ச்சொல்லையும் முன்னேகுறித்தாற்பின்பு அந்நால்வகைச்சொல்லும் கருவியாக இருதிணையைம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் பெறப்படும். எ - று.

வினைமுற்று, நாமமென்பனவற்றையும் குறிப்பினென்னும் வினையெச்சத்தையும் பெறப்படுமென்பதனையும் ஏனையிடத்துங்கூட்டுக.

(வ - று.) நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன எ - ம், அவன், அவள், அவர், அது, அவை எ - ம் படர்க்கை வினைமுற்றுச் சொல்லும் படர்க்கைப்பெயர்ச்சொல்லும் முன்பு தம்மையுணர்த்திப் பின்பு இருதிணையும் ஐம்பாலுமாகிய பொருள்களையுணர்த்தின. நடந்தேன், நடந்தேம் எ-ம், யான் யாம் எ - ம், நடந்தாய், நடந்தீர் எ - ம், நீ, நீர் எ - ம் தன்மைவினைமுற்றுச் சொல்லும் தன்மைப்பெயர்ச்சொல்லும் முன்னிலைவினைமுற்றுச்சொல்லும் முன்னிலைப்பெயர்ச்சொல்லும் முன்பு தம்மையுணர்த்திப் பின் இருதிணையைம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலுமுணர்த்தின. பிறவுமன்ன.

வினைமுற்றைக்கூறினமையான் அவை *இருதிணைமருங்கின் ஐம்பாலறிய ஈற்றினின்றிசைக்கும் விகுதிகளோம் பயின்றுவருதலின் இருதிணை ஐம்பாற் பொருள்களையுணர்த்துநெறியிற் பெயர்களிற்சிறந்தனவென்பதூஉம், குறிப்பினென்றமையாற் சொல் தன்னையுணர்த்துமென்பதூஉம், தன்னை முன்னுணர்த்திப் பொருளைப் பின்னுணர்த்துமென்பதூஉம், ஒலியெழுத்தையுணர்தற்கு வரிவடிவு ஒருகுறியாய்நின்றாற்போலப் பொருளையுணர்தற்குச் சொல் ஒருகுறியாய்நின்றதென்பதூஉம், அக்குறியினைக்குறித்தாலன்றி இருதிணையைம்பாலாகிய பொருட்பேறின்றென்பதூஉம், பெறப்படுமென்றமையாற் செவிப்புலனாகிய சொல்லையொழிந்து கட்பொறிமாத்திரையின் இருதிணையைம்பாற்பொருள்களை ஒருவனுணரும் உணர்ச்சி விலங்குணர்ச்சிபோலுமன்றி அதுபொருட்பேறாகாதென்பதூஉம், ஒருமைபன்மைப்பாலேயென்றமையால் தன்மைமுன்னிலைகள்ன் ஆண் பெண் ஒன்று பலர் பலவென்னும் பால்விகற்பத்தோடு இருதிணையுந்தோன்றுமென்பதூஉம், மூவிடங்களின் ஒன்றற்குரிய வினைமுற்றும் பெயரும் தம்மையும்பொருளையுமுணர்த்துமாறு இவ்வாறெனவே இவ்விடங்கட்குப் பொதுவாகிய வினைமுற்றுக்களும்பெயர்களும் பொதுமைநீங்கி ஓரிடத்திற்குரியவாகி இவ்வாறு தம்மையும்பொருளையுமுணர்த்துமென்பதூஉம், பெயரெச்சமும் வினையெச்சமும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் குறைச்சொல்லாதலிற் பயனிலையாகிய வருமொழியோடுபுணர்ந்து பொருள்முற்றி இம்மூவிடவினைமுற்றுள்ளும் பெயருள்ளுமடங்குதலின் இவ்வாறு தம்மையும் பொருளையுமுணர்த்துமென்பதூஉம், இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினையுள் அடங்குதலின் அவ்வாறு தம்மையும் பொருளையுமுணர்த்துமென்பதூஉம், இவ்வாறே எல்லாச்சொல்லையும் வினைமுற்றுள்ளும் பெயருள்ளுமடக்கி மூவகையிடத்தும்

* தொல். கிளவி, கO.

நின்றசொல் இருதிணையைம்பாற்பொருளையும் தன்னையுமுணர்த்துஞ் சிறப்புவிதி கூறிஞரென்பதூஉம் பெற்றாம். "வயிர வூசியு மயன்வினை யிரும்புஞ், செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியுந், தமக்கமை கருவியுந் தாமா மவைபோ, லுரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே" என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க.

இனி, இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி இருதிணையைம்பாலைப் பொருளாகத்தறிவித்ததன்றிச் சொல்லகத்தறியுமாறு கூறினாரெனப் பொருள்கூறின் * "இருதிணை மருங்கி னைம்பா லறிய, வீற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந், தோற்றந் தாமே வினையொடு வருமே" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறே படர்க்கைவினைமுற்றொன்றுமேகூறின் அமையும், படர்க்கைநாமமென்றல் மிகைபடக்கூறலாம். ஏனையெடுத்து அவற்றொருமைபன்மைப்பாலே என்றல் தன்மைமுன்னிலைகள் ஒருமைபன்மைமாத்திரையன்றி இருதிணையைம்பாலை விளக்காமையின் மற்றொன்றுவிரித்தலாம்; இவ்வாறன்றி மூவிடங்களில் ஒவ்வொன்றற்குரிய முற்றும் பெயருமே இருதிணையைம்பாற்பொருளினை விளக்கும்; ஒழிந்தன விளக்காவெனப் பொருள்கூறின், எல்லாச்சொல்லும் மூவகையிடத்துநின்று இருதிணையைம்பாற்பொருளை விளக்குமெனக் கூறிய ஒருமொழிதொடர்மொழியென்னும் பொதுச்சூத்திரத்தொடு மாறுகொளக்கூறலாம்.

இச்சூத்திரத்துட்குறிப்பினென்னுஞ்சொல்லை வினையெச்சமாக்காது குறிப்பினாலும் இருதிணையுமைம்பாலும் விளங்குமெனப் பொருள்கூறின் வெளிப்படையும் குறிப்புமாஞ்சொற்கள் இருதிணையைம்பாற்பொருள்களை விளக்கு நெறியன்றி மூவிடச்சொற்போலக் குறிப்புச்சொல்லென வேறொன்றின்மையானும்ஒருவர் அறிவுதந்தாரென்றால்,"நுண்ணுணர் வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே" என்பவாகலின், அறிவுபெண்பாலாற் பெறுதல்கூடாமையின் அதனையொழித்து ஒருவரென்னும் படர்க்கைப் பெயரும் அதன்பயனிலையாகிய தந்தாரென்னும் படர்க்கைமுற்றும் உயர்திணையினையும் ஆண்பாலையுங்குறிப்பான் விளக்குதலின் இப்பெயர்வினைகளையொழித்துப் படர்க்கைவினைமுற்றுநாமமென்றாரல்லராதலானும், சொற்கள் வெளிப்படையானுங் குறிப்பினானும் இருதிணையைம்பாற்பொருள்களை விளக்குதல் நிறுத்தமுறையே "ஒன்றொழிபொதுச்சொல்" என்னுஞ்சூத்திரத்தாற் பிற்கூறுதலானும், ஈண்டுங்கூறுதல் கூறியது கூறலாமாதலானும் அது பொருளன்றென்க. (அ)

## மூவிடம்.

உசுசு. தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.

எ - ன், நிறுத்தமுறையானே மூவிடமாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ-ள்.) மூவிடமாவன,தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமாம்.எ-று.

(வ - று.) யான், நீ, அவன் எ - ம், வந்தேன், வந்தாய், வந்தான் எ - ம் வரும்.

சொல்வானும் கேட்டானுமாகிய இருவர்கூட்டத்துப்பிறந்த சொல் அவ்விருவரிடத்துநில்லாது அயலானிடத்துப்படர்தலிற் படர்க்கையெனப்பட்டது.()

* தொல். கிளவி, க0.

## வழக்கு.

உசகஎ. இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகு மூவகை யியல்பும்
இடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

எ - ன், நிறுத்தமுறையானே வழக்காமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இலக்கணமுடையதென்றும் இலக்கணப்போலியென்றும் மரூஉவென்றும் வழங்கும் மூவகை இயல்புவழக்கும் இடக்கரடக்கலென்றும், மங்கலமென்றும் குழூஉக்குறியென்றும் வழங்கும் மூன்றுதகுதிவழக்குடனே கூட அறுவகைப்படும் வழக்கிலக்கணம். எ - று.

(வ - று.) நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம், மண்ணிலம், தண்ணீர் என்றற்றொடக்கத்தன இலக்கணமுடையன. இல்முன்னென்பதனை முன்றிலென்றும், நகர்ப்புறமென்பதனைப் புறநகரென்றும், புறவுலாவென்பதனை உலாப்புறமென்றும், கண்மீஎன்பதனை மீகண்ணென்றும், கோயிலென்பதனைக் கோயிலென்றும், பொதுவிலென்பதனைப் பொதியிலென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன இலக்கணப்போலி. அருமருந்தன்னபிள்ளை என்பதனை அருமந்தப்பிள்ளையென்றும், மலையமானாடு என்பதனை மலாடென்றும், சோழநாடென்பதனைச் சோணாடென்றும் பாண்டியநாடென்பதனைப் பாண்டிநாடென்றும், இருநாடென்பதனை இருந்தநாடென்றும், ஆதன்றந்தையென்பதனை ஆந்தையென்றும், பூதன்றந்தையென்பதனைப் பூந்தையென்றும், மரவடியென்பதனை மராடியென்றும், குளவாம்பலென்பதனைக் குளாம்பலென்றும், யாவரென்னும்பெயரை யாரென்றும் ஆரென்றும், யாரென்னுங்குறிப்புவினையை ஆரென்றும், எவனென்னுங்குறிப்புவினையை என்னென்றும் என்னை என்றும், ஆற்றூரென்பதனை ஆற்றையென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன மரூஉ. கண்கழீஇவருதும், கால்கழீஇவருதும், வாய்பூசிவருதும், ஆமுன்பகரவீ, பவ்வீ, "புலிநின்று இறந்த நீரல் ஈரத்து", "கருமுக மந்தி செம்பினேற்றை" என்றற்றொடக்கத்தன இடக்கரடக்கல். செத்தாரைத் துஞ்சினாரென்றும், இல்லையைத் திருமுகமென்றும், காராட்டை வெள்ளாடென்றும், இடுகாட்டை நன்காடென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன மங்கலம். பொற்கொல்லர் பொன்னைப் பறியென்றும், யானைப்பாகர் ஆடையைக் காரையென்றும், வேடர் கள்ளைச் சொல்விளம்பியென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன குழூஉக்குறி. இலக்கணநெறியால் வருவதனை இலக்கணமுடையதென்றும், இலக்கணமுடையதன்றிப் படைப்புக்காலத்து இலக்கணமுடையதோடு ஒருங்குபடைக்கப்பட்டதுபோல வருவதனை இலக்கணப்போலியென்றும், தொன்றுதொட்டதன்றி இடையே இலக்கணஞ் சிதைந்து மரீஇயதனை மரூஉவென்றும் இம்மூன்றுந் தகுதிவழக்குப்போலாது எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச்சொலாற் கூறுதலின் இயல்புவழக்கென்றும், இடக்கரென்பது மறைத்துமொழிகிளவியெனப்படுதலின் இடக்கர் தோன்றாது அதனைமறைத்ததை இடக்கரடக்கலென்றும், இடக்கராயது கூறத்தகாததன்றேனும் மங்கலமில்லதையொழித்து மங்கலமாகக் கூறுவதை மங்கலமென்றும், ஒவ்வொருகுழுவினுள்ளோர் யாதாயினும் ஒருகாரணத்தால் ஒருபொருளினது சொற்குறியையொழித்து வேறொருசொற்குறியாற்

கூறுவதைக் குழூஉக்குறியென்றும், இம்மூன்றும் இப்பொருளையறிதற்கு அமைந்துகிடந்த இச்சொல்லாற்கூறுதல் தகுதியன்று, வேறொருசொல்லாற்கூறுதல் தகுதியெனககருதிக் கூறுதலின் தகுதிவழக்கென்றும் பெயர்பெற்றன. இலக்கணப்போலியினையும் மரூஉவினையும் வேறறிதற்குச் சான்றோராட்சியே காரணமென்க. அன்றி நிலைமொழிவருமொழிகள் முன்பின்னாக மாறிநிற்பன இலக்கணப்போலி; ஒழிந்த சிதைவெல்லாம் மரூஉவென்று வேறுபாடுமொன்று. இவ்வறுவகைவழக்கும் திரிசொற்களினும் வருதலின் இயற்சொல்லாகிய உலகவழக்கையும் திரிசொல் திசைச்சொல் வடசொல்லாகிய செய்யுள்வழக்கையுந் தொகுத்து இச்சூத்திரத்தான் வழக்கெனப்பட்டதென்க. அங்ஙனமாயிற் செய்யுளென வேறுகூறுவது யாது கருதியெனின் இவ்வுலகவழக்குஞ் செய்யுள்வழக்கும் வழக்காய்நில்லாது தொடைப்பட்டமைகருதியென்க. வழக்கென்பது சொன்னடை. (௧0)

## செய்யுள்.

உ௬அ. பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்.

எ - ன், நிறுத்தமுறையானே செய்யுளாமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேத நீர் என்னும் எழுவகைத்தாதுக்களினால் உயிர்க்கிடனாக இயற்றப்பட்ட உடம்புபோல இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்னும் நால்வகைச் சொற்களாற் பொருட்கிடனாகக் கலவியறிவினாற் செய்யுளியற்ற வலலோர் அலங்காரம்பெற இயற்றுவன செய்யுளாம். எ - று.

ஈண்டுப் பொருளென்றது அகமும்புறமுமாகியபொருள்களை.

இங்ஙனங்கூறவே, எழுத்தான் இயன்றதுசொல்லாதலின் எழுத்துச்சொற் பொருளணியென்னுநான்கினும் நடப்பது யாப்பென்பதாயிற்று.

(வ - று.) * "வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலையத், திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப், பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க், கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே": இக்கட்டளைககலித்துறை இடமணித்தென்னும் பொருட்கிடனாகித் தன்மை உவமை உருவகவணிகளும் பிறவுமுடைத்தாய் வருதல் காண்க. பிறவுமன்ன. (௧௧)

## வெளிப்படை குறிப்பு.

உ௬௯. ஒன்றொழி பொதுச்சொல் விகார தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதறொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பாற் றருமொழி யல்லன வெளிப்படை.

எ - ன், நிறுத்தமுறையானே வெளிப்படையுங் குறிப்புமாமாறுணர்த்துதனுதலிற்று.

* திருச்சிற்றம்பலக்கோவையார், ௧௫.

(இ-ள்.) இருதிணையாண்பெண்ணுள் ஒன்றனையொழிக்கும் பொதுச்சொல்லும் வலித்தல்முதலிய ஒன்பதுவிகாரச்சொல்லும் மூவகைத் தகுதிவழக்குச் சொல்லும் ஆகுபெயர்ச்சொல்லும் அன்மொழித்தொகைச்சொல்லும் வினைக் குறிப்புச்சொல்லும் முதற்குறிப்புச்சொல்லும் தொகைக்குறிப்புச்சொல்லும் இம்முறைமையல்லாத பலவாற்றானும் வருங்குறிப்புச்சொல்லும் இவைபோல்வனபிறவும் குறிப்பினான் இருதிணையைம்பாற்பொருளைத் தருஞ்சொற்களாம்; இவையல்லனவெல்லாம் வெளிப்படையான் அப்பொருள்களைத் தருஞ்சொற்களாம். எ - று.

வெளிப்படையல்லனவெல்லாம் குறிப்புச்சொல்லாயினும் அக்குறிப்புச் சொல்லுள்ளும் வேற்றுமைதோன்றற்கு ஏகாரம் இடையிட்டுக்கூறினரென்க.

(வ - று.) ஆயிரமக்கள்பொருதார், பெருந்தேவிபொறையுயிர்த்தகட்டிற் கீழ் நால்வர்மக்களிருந்தாரென்புழி மக்களென்னும்பொதுப்பெயரும் பொருதார் இருந்தாரென்னும் பொதுவினையும் உயர்திணையாண்பால் பெண்பாலுள் ஒன்றனையொழித்து ஒன்றனைக் குறிப்பானுணர்த்தின. இப்பெற்றம் உழவொழிந்தன, இப்பெற்றம் அறத்திற்கே கறக்குமென்புழிப் பெற்றமென்னும் பொதுப்பெயரும் ஒழிந்தன, கறக்குமென்னும்பொதுவினைகளும் அஃறிணை ஆண்பால் பெண்பாலுள் ஒன்றனையொழித்து ஒன்றனைக் குறிப்பானுணர்த்தின. இவற்றுட் பொருதார், கறக்குமென்னும்வினைகள் விகுதிமாத்திரையிற் பொதுவினையாயின. "குறுத்தாட்பூதம்", "மரைமலர்", "குலிகமொடிகலிய வங்கை" என்புழி இவ்விகாரச்சொற்கள் குறுந்தாள், தாமரை, இங்குலிகமென்பவற்றைக் குறிப்பானுணர்த்தின. கால்கழீஇவருதும், நன்காடு, பறி என்புழி இத்தகுதிகள் தத்தம்பொருளைக் குறிப்பானுணர்த்தின. புளித்தின்றான், கடுத்தின்றானென்புழி இவ்வாகுபெயர்கள், அவற்றின்பழத்தினைக்குறிப்பானுணர்த்தின. "பொற்றொடி தந்தபுனைமடல்", "அறற்கூந்தற்கில்லையருள்" என்புழி இவ்வன்மொழித்தொகை அவற்றையுடையமகளிரைக்குறிப்பானுணர்த்தின; * "சொலல் வல்லன் சோர்வில னஞ்சா னவனை, யிகல்வெல்ல லார்க்கு மரிது" என்புழி வல்லன், இலனென்னுஞ்சொற்கள் பெயர்ப்பொருளையொழித்து வினைக்குறிப்புப் பொருளைக் குறிப்பானுணர்த்தின. † "அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபு" என்புழி அடிமுதற்குறிப்புச்சொற்கள் ‡ "அறத்தாறிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானோ டூர்ந்தானிடை" என்னும் பாட்டைக் குறிப்பானுணர்த்தின. § "அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ, நிலந்தலைக் கொண்ட" என்புழி ஐவரென்னுந் தொகைக்குறிப்புச்சொல் பாண்டவரைக் குறிப்பால் உணர்த்திற்று. ‖ "ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால், வென்று களங்கொண்ட வேல்வேந்தே-சென்றுலா, மாழ்கடல்சூழ் வையகத்து ளைந்து வென் றறடக்கி, யேழ்கடிந் தின்புற் றிரு" என்பதும் அது.

இனிப் பலவாற்றானும் வருங்குறிப்புச்சொற்கள் பொருள்களைக் குறிப்பானுணர்த்துமாறு.—கற்கறித்துநன்கட்டாய், நீயிர்பெரிதுமறிநீர், பறவாக்குளவி, பாயாவேங்கை, ※"உவர்க்கட லன்ன செல்வரு முளரே, கிணற்றூற் றன்ன

* திருக்குறள், ௬௪௭. † காரிகை, ௧௫. ‡ திருக்குறள், ௩௭.

§ புறநா. ௨. ‖ பு - வெ. ௨௨௫.

※ இச்செய்யுள், தஞ்சாவூர் அரண்மனைப் புத்தகசாலையிலுள்ள ஓரேட்டுச் சுவடியிற்கண்டு எனக்குத் தெரிவித்த அன்பர், ஸ்ரீஸேதுஸம்ஸ்தான வித்வான் ஸ்ரீமத். ரா. ராகவையங்காரவர்கள். முன்பு இது பலபகுதியாக எண்ணப் பட்டிருந்தது.

கொல் செவ்வி பெறுந் துணையு நின்றதுகொணேர்மருங்கிற் கையூன்றி-முன்றின், முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற், குழந்துபின் சென்றவென்னெஞ்சு'' என்புழி மருங்கும் கையும் ஊன்றுதலுமுதலிய இலக்கணங்கள் நெஞ்சிற்கின்மையின், விட்டவிலக்கணை. கங்கையின்கணிடைச்சேரி, புளித்தின்றானென்புழி, இடைச்சேரி கங்கைக்கரைக்கண் இருத்தலும், புளியினதுபழத்தைத்தின்றலுமுண்மையின், விடாதவிலக்கணை. *"பாயிருள் பருகிப், பகல்கான்றெழுதரும் பல்கதிர்ப் பருதி'' என்புழி, இருளைப்பருகுதலும் பகலைக்காலுதலும் பருதிக்கின்மையானும் இருளைப்போக்குதலும் பகலைத்தருதலும் அதற்குண்மையானும், விட்டும்விடாதஇலக்கணை. இவையும் குறிப்பினுள் அடங்குமாதலின், வெளிப்படைகுறிப்பின்விரிப்பதுசொல்லேயெனத் தொகுத்தும் இவ்வாறு வகுத்துங்கூறினாரென்க. (கஉ)

## சொற்பாகுபாடு.

உஎ०. அதுவே,

இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்குமாந் திசைவட சொல்லணு காவழி.

எ-ன், மேலைச்சூத்திரங்காறும் சொல்லாவது இஃதெனக் காட்டக்கண்ட சொல் இத்துணையாமென்பதுணர்த்துதல்நுதலிற்று.

(இ-ள்.) மேற்காட்டியசொல் இயற்சொல், திரிசொல்லென்னும் இயல்பினையுடைய பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமென இரண்டாம்; இவற்றுடன் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமடுத்து நான்குமாம்; இவற்றுடன் திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகாவிடத்து. எ-று.

செய்யுட்குரியன உரிச்சொல்லெனக் கூறுதலானும், வருஞ்சூத்திரம் "செந்தமிழாகி'' எனக்கூறுதலானும் இயற்சொல் என்றதைப் பெயர்வினையிடையினும் திரிசொல்லென்றதை எல்லாவற்றினும் பிரித்துரைத்துக்கொள்க. எனவே, அதுவேயெனச்சுட்டியசொல் பெயரியற்சொல், பெயர்த்திரிசொல், வினையியற்சொல், வினைத்திரிசொல், இடையியற்சொல், இடைத்திரிசொல், உரித்திரிசொல்லென எழுவகைப்படுமென்பதூஉம், திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகியவழி ஒன்பதுவகைப்படுமென்பதூஉம் பெற்றாம். உரியியற்சொல்லின்றாகவும் உரித்திரிசொல்லென்றது, இயற்சொற்றிரிசொல்லென்னும் பொதுவிலக்கணநோக்கியென்க.

இச்சொற்களை ஒருங்கோதாது முறைதெரித்தோதியது என்னையெனின், ஒருவன் ஒருத்தி என்றமாத்திரையின் அவர் கை கால்முதலிய அகத்துறுப்பும் ஆடை அணிமுதலிய புறத்துறுப்பும் அடங்குதல்போலப் பெயர்வினையென்றமாத்திரையின் அவற்றின் அகத்துறுப்பாகிய விகுதியுருபுமுதலிய இடைச்சொற்களும் புறத்துறுப்பாகிய வேற்றுமையுருபுமுதலிய இடைச்சொற்களும் அடங்குதலானும், உரிச்சொல், "பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி'' என்பவாகலிற் பெயருள் அடங்குதலானும், திசைச்சொல்லும் வடசொல்லும் இவற்றுள் யாதானும் ஒன்றுள் அடங்குதலானும், இவற்றைஅடக்கிநின்ற தலைமையும் சிறப்புந்தோன்றப் பெயர்வினையென இரண்டாகுமென வரையறுத்தும், பெயர்வினையுளடங்கி

* பெரும்பாண். க-உ.

நின்றவற்றையே வேறுபாடறிதற்கு வேறுபடுத்துத் தொகைகோடலின் இடையுரிக்கு அத்தலைமையும் சிறப்புமின்றென்பது தோன்ற அடுத்துநான்குமாமென்றும், கொடுந்தமிழ்முதலியசொல் செந்தமிழொடுவிராயவழி அவற்றைத் திசைச்சொல்லென்றும், ஆரியச்சொல் தமிழ்நடைபெற்றுச் செந்தமிழொடுவிராயவழி அதனை வடசொல்லென்றும், தமிழொடுதழுவப்படுமாயினும் செந்தமிழ்ச்சொல்லொடு தொகைகோடல் ஒருதலையன்றென்பது தோன்ற அணுகாவழியென்றும் முறைதெரித்தோதினரென்க.

வடக்கும் ஒருதிசையன்றே ? திசைச்சொல்லன்றி வடசொல்லென வேறு கூறுவதென்னையெனின் :—தமிழ்நாட்டிற்கு வடதிசைக்கட் பதினெண்மொழிகளுள் ஆரியமுதலிய பலமொழியுமுளவேனும் தென்றமிழ்க்கு எதிரியக கடவுட்சொல்லாகிய ஆரியமொன்றுமேயென்பது தோன்ற அவற்றுள் தமிழ்நடைபெற்றதை வடசொல்லென்றும் ஏனையவற்றுள் தமிழ்நடைபெற்றதைத் திசைச்சொல்லென்றும் சான்றோரால் நியமிக்கப்பட்டனவென்க.

இச்சொற்களைப் பெயர்முதலியவாக வைத்தது என்னையெனின், பெயர்ச்சொல் பொருளை விளக்குதலானும், வினைச்சொல் பொருளதுதொழிலை விளக்குதலானும் இடைச்சொல் இவையன்றி வேற்றுமையுருபுமுதலிய வேறொருசொல்லாய்நிற்பினும் இவற்றிற்கு உறுப்பாவதன்றித் தனித்தியலாமையானும், உரிச்சொல் பண்புப்பெயருட் சிலவற்றையே ஒருவாற்றான் வேறுவகுக்கப்பட்டதாதலானும், திசைச்சொல் கொடுந்தமிழ்மொழியாயும் அன்னியமொழியாயும் வருதலானும், வடசொல் அன்னியமொழியேயாய் வருதலானும் இம்முறையேவைக்கப்பட்டனவென்க.

* "சொல்லெனப் படுவ பெயரே வினையென், றாயிரண் டென்ப வறிந்திசி னோரே", † "இடைச்சொற் கிளவி யுரிச்சொற் கிளவியு, மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க. (௬௫)

## இயற்சொல்.

உ௭௧. செந்தமி ழாகித் திரியா தியார்க்கும்
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்.

எ - ன், மேலேச்சூத்திரத்து நிறுத்தமுறையானே இயற்சொல்லாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) செந்தமிழ்நிலத்துமொழியாகி அந்நிலத்துமொழியுள் மேற்கூறப்படும் திரிசொற்போலாது கற்றோர்க்கும் கல்லாதோர்க்குமொப்பத் தம்பொருளை விளக்குந் தன்மையினையுடைய உலகவழக்கு இயற்சொல்லாம். எ-று.

யார்க்குமென்பதனால் உலகவழக்கென்பது பெற்றாம்.

(வ - று.) மண், பொன் என்றற்றொடக்கத்தன பெயரியற்சொல். நடந்தான், வந்தான் என்றற்றொடக்கத்தன வினையியற்சொல். அவனை, அவனால் என்றற்றொடக்கத்துவரும் வேற்றுமையுருபுமுதலியன இடையியற்சொல்.

செந்தமிழ்நிலமாவதுயாதெனின்: 'சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ், சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ், சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கு, மங்கலைப் பாண்டி வளநா டென்ப' இவ்வாறன்றிச் செந்தமிழ்நிலம்

* தொல். பெயர். ௪. † தொல். பெயர். ௫.

வையையாற்றின் வடக்கெனக்கூறுவாருமுளர்; கொடுந்தமிழ்நிலத்துப் புனனாடெனப்படுவது சோணாடாதலானும், பாண்டியனையே தமிழ்நாடனெனச் சான்றோர்கூறுதலானும் அஃதுரையன்றென்க. (கச)

திரிசொல்.

உஎஉ. ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த வொருசொல்லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

எ-ன், நிறுத்தமுறையானே திரிசொல்லாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ-ள்.) ஒருபொருளைக்கருதிய பலசொல்லாகியும், பலபொருளைக்கருதிய ஒருசொல்லாகியும், கற்றுணரும் பொருளவாய் வருவன திரிசொல்லாம். எ-று.

அரிதுணர்பொருளன வென்றமையான், ஒருபொருள்குறித்த பலசொல்லுள்ளும்,பலபொருள்குறித்த ஒருசொல்லுள்ளும் வரும் இயற்சொல்லொழியக் கொள்க.

(வ-று.) கிள்ளை, சுகம், தத்தை என்றற்றொடக்கத்தன ஒருபொருள் குறித்த பலபெயர்த்திரிசொல். * "யானையுங் கோழியுஞ் சங்கும் வாரணம்" என்றற்றொடக்கத்தன,பலபொருள்குறித்த ஒருபெயர்த்திரிசொல். படர்ந்தான், சென்றான் என்றற்றொடக்கத்தன, ஒருபொருள்குறித்த பலவினைத்திரிசொல். வரைந்தான், ஆர்த்தான் என்றற்றொடக்கத்தன பலபொருள்குறித்த ஒருவினைத்திரிசொல். சேறும்,வருதும் என்றற்றொடக்கத்துவிகுதிகள் ஒருபொருள் குறித்தபலஇடைத்திரிசொல். "சொல்லே யைய மசைநிலைக் கூற்றே" என்றற்றொடக்கத்தன, பல பொருள் குறித்த ஓரிடைத்திரிசொல். "சாலவுறுதவ நனிகூர் கழி மிகல்" என்றற்றொடக்கத்தன, ஒருபொருள்குறித்த பலவுரித்திரிசொல். "கடியென் கிளவி காப்பே கூர்மை" என்றற்றொடக்கத்தன, பலபொருள்குறித்த ஓருரித்திரிசொல். திசைச்சொல்லும் வடசொல்லும் ஒருபொருள் பலபொருளென்னும் விகற்பத்தான்வந்தனவேற் காண்க.

ஈண்டு இயற்சொற்றிரிசொல்லென்றது அவற்றினெழுத்துக்கள் திரியாமையும் திரிந்தமையும் கருதியன்று; வானரத்தின்முகம் தன்னியல்பாயிருந்ததேனும் கார்முகச்செவ்விக்கு மறுதலைப்பட்டமைகருதி வலிமுகமெனப்பட்டது போலக் கல்வியேதுவானன்றி இயல்பாகத் தம்பொருளையுணர நிற்றலின், இயற்சொல்லென்றும் அவ்வியல்பிற்கு மறுதலைப்பட்டுக் கல்வியேதுவால் தம்பொருளை யுணரநிற்றலின் திரிசொல்லென்றுங் கூறப்பட்டவென்க. (கரு)

திசைச்சொல்.

உஎங. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.

எ-ன், நிறுத்தமுறையானே இயற்சொல் திரிசொல்லென்றவற்றின் பின்னின்ற அவ்வியல்பினவாய பெயர் வினை இடையுரிகளை இவ்வியலுள் இடு

* திவாகரம்.

குறிகாரணமென்னுஞ் சூத்திரங்கொட்டு இவ்வதிகாரத்து ஐந்தியலானுமுணர்த்த நிறீஇ ஒழிந்த திசைவடசொற்களுள் திசைச்சொல்லாமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செந்தமிழ்நிலத்தைச்சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ்நிலத்தின்கண்ணும் பதினெண்மொழியுள் தமிழும் மேற்கூறும்வடசொற்குக்காரணமாகிய ஆரியமுமொழிந்த பதினாறுமொழியும் வழங்கும் பதினாறுநிலத்தின்கண்ணுமுள்ளோர் தம்குறிப்பினவாய்ச் செந்தமிழோர்குறிப்பினவன்றி அத்திசைகளினின்றும் செந்தமிழ்நிலத்து வந்துவழங்குவன திசைச்சொல்லென்று கூறுவர்புலவர். எ - று.

செந்தமிழென்றமையாற் கொடுந்தமிழென்பதூஉம், ஆரியத்தின்காரியமாய வடசொல்லை வேறுகூறுதலின், தமிழொழிநிலம் பதினாறென்பதூஉம், கற்றோரையும் மற்றோரையுந் தழீஇத் தங்குறிப்பினவெனப் பொதுமைபிற்கூறினமையின் இத்திசைச்சொற்கள் அந்நிலத்தோர்க்கு இயற்சொல்லாய்ச் செந்தமிழோர்க்கு அவ்வாறுகுறிக்கப்படாத திரிசொல்லாய் நிற்குமென்பதூஉம் பெற்றாம்.

கொடுந்தமிழ்நிலம் பன்னிரண்டாவன: "தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி, பன்றி யருவா வதன்வடக்கு நன்றாய, சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர், ஏதமில் [1]பன்னிருநாட் டெண்" என்பனவாம். இவற்றுட் செந்தமிழ்ப்பாண்டிநாட்டின் தென்றிசைக்கண்ணதாகிய தென்பாண்டிநாட்டார் ஆவினைப்பெற்றமென்றும், சோற்றைச் சொன்றியென்றும், குட்டநாட்டார் தாயைத்தள்ளையென்றும், குடநாட்டார் தந்தையை அச்சனென்றும், கற்காநாட்டார் வஞ்சரைக் கையரென்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழாரென்றும், பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழியென்றும், *பன்றிஅருவாநாட்டார் செறுவைச் செய்யென்றும் சிறுகுளத்தைக் கேணியென்றும், அருவாவடதலையார் புளியை எகினென்றும், சீதநாட்டார் தோழனை எலுவனென்றும் தோழியை இகுளையென்றும் வழங்குவர்; இவைமுதலியனவும் தமிழொழிந்த பதினாறுநிலத்துமொழிகளுள் ஏற்பனவும் செந்தமிழொடு விரவிவருதல்காண்க. ()

## வடசொல்.

உஎச. பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்.

எ - ன், வடசொல்லாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவெழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துத்திரிந்தவெழுத்தானும் இவ்விரண்டினானும் செந்தமிழ்ச்சொல்லை ஒப்பனவாகி வடதிசைக்கணின்றும் செந்தமிழ்நிலத்து வந்து வழங்குவன, வடசொல்லாம். எ - று.

பதவியலுள், "பொதுவெழுத் தொழிந்தநாலேழுந் திரியும்" எனக்கூறினமையிற் சிறப்பெழுத்துத திரிந்தவெழுத்தானுமென்பது பெற்றாம்.

அவ்வடசொற்கு ஆரியச்சிறப்பெழுத்துத் திரிந்தஎழுத்து ஆதிகாரணமாயும் அச்சிறப்பெழுத்து அநாதிகாரணமாயுநிற்றலிற் சிறப்பெழுத்தானுமென்றார். அது பருத்தியானியன்ற படாம் என்றாற்போலும்.

---

* பன்றிநாட்டாரும் அருவாநாட்டாருமெனக்கொள்க.

(பி - ம்.) [1]'பன்னிரு நாடென்'

ஆரியச்சொற்சிதைந்து வடசொல்லாதலின் இவை சொல்லாற்செந்தமிழ்ச் சொல்லையொவ்வாமைகருதி எழுத்தானெக்குமென்பார் எழுத்தான் இயைவன வென்றார்.

(வ - று.) அமலம், உருவம், கமலம், காரணம், காரியமென்றற்றொடக்கத்தன பொதுவெழுத்தானியைந்தன. சுகி, போகி, சுத்தி என்றற்றொடக்கத்தன சிறப்பெழுத்தானியைந்தன. அரன், அரி, சமனம், சலம் என்றற்றொடக்கத்தன ஈரெழுத்தானுமியைந்தன.

அரனென்புழித் தமிழின்சிறப்பாகிய னகரவீறு பதவியலுள், "உவ்வுமாம் பிற" என்றமையாலமைந்தமையின், ஈண்டுவிதந்துகூறாராயினர். பிறவுமன்ன. * "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே", † "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" என்றார், ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க. (கஎ)

## பெயர்ச்சொல்.

உஎரு. இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாவன பெயரே.

எ - ன், இவ்வதிகாரத்து ஐந்தியலானுமுணர்த்தநிறீஇய பெயர்வினை யிடையுரியென்னுநான்கனுட் பெயரிலக்கணமுணர்த்துவான்றொடங்கி அதன் பொதுவிலக்கணமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இடுகுறியும் காரணக்குறியும் மரபினையும் ஆக்கப்பாட்டினையுந்தொடர்ந்து வினையாலணையுங்காரணக்குறியொன்றும் காலந்தோற்ற அல்லன காலந்தோற்றாவாய் எட்டுவேற்றுமையும் சார்தற்கிடமாய் இருதிணை ஐம்பால் மூவிடத்து ஒன்றனையேற்பவும் பலவற்றினை யேற்பவுமாய்வருவன, பெயர்களாம். எ - று.

(வ - று.) ஆண், பெண், மரம், தெங்கு, கமுகு என்றற்றொடக்கத்தன இடுகுறி மரபுதொடர்ந்துவந்தன. அவன், அவள், காளை, காரிகை, விலங்கு, பறவை என்றற்றொடக்கத்தன காரணக்குறி மரபுதொடர்ந்துவந்தன. "மான வேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங், கானவேன் முட்டைக்குங் காடு" என்னும் பொய்யாமொழிப்புலவன்பாடலில், வேட்டுக்குமரன் றன்பெயர் முட்டையென்றற்றொடக்கத்தன, இடுகுறிஆக்கந்தொடர்ந்தன. பொன்னன், பூணன், ‡ "மலைமகண் மகனை மாற்றோர் கூற்றை" என்றற்றொடக்கத்தன காரணக்குறி ஆக்கந்தொடர்ந்தன. நடந்தவனை, நடந்தானை என்றற்றொடக்கத்தன வினையாலணையுங்காரணக்குறி காலங்காட்டின. ஏனை இலக்கணங்கள் முன்னும்பின்னும்பெறப்படுதலின் ஈண்டுக்காட்டிற்றிலம்.

ஆண்பெண்முதலிய இடுகுறிப்பெயரும், அவன், அவள்முதலிய காரணப்பெயரும், இடையே ஒருவரான் ஆக்கப்பட்டலவன்றி அவ்விலக்கணங்களோடு தோன்றியபொருள்கட்கெல்லாம் தொன்றுதொட்டு மரபுபற்றிவருதலானும் முட்டையென்றற்றொடக்கத்து இடுகுறிப்பெயரும் பொன்னனென்றற்றொடக்

* தொல். எச்ச. ரு. † தொல். எச்ச. எ. ‡ திருமருகு. உருள.

வந்தோர் நசைபிறக் கொழிய, வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையி, னற்பனுவ னால்வேதத், தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை, நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண், வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூப நட்ட வியன்களம் பல கொல், யாபல கொல்லோ பெரும'' என இவை சிறப்பினான் அஃறிணைமுடி பேற்றன. *''எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீய்த்தெய்வ,முச்சந் தலையோ டிவையென்ப யாவருந், திப்பத்தாற் றீண்டாப் பொருள்'' எனவிவை மிகுதியினால் அஃறிணைமுடிபேற்றன. ''வடுக ரருவாளர் வான்கரு நாடர், சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங், குறுகா ரறிவுடை யார்'' எ-ம், ''மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா'' எ-ம் இவை இழிபினான் அஃறிணைமுடிபேற்றன. பன்மையொருமுடிபின வென்றது ஒருமுடிபினவென வாளாகூறினமையின், ''தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்'' எனத் திணைவிரவிச் சிறப்பினான் ஆண்பான்முடிபேற்றலும் †''தொல்லை நால்வகைத் தோழருந் துணைமணி நெடுந்தேர், மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச், செல்வன் றாதையுஞ் செழுநக ரோடுவள நாடும், வல்லைத் தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே'' எனத் திணைவிரவிச் சிறப்பினான் ஒருமைமுடிபேற்றலுங்கொள்க. ‡''நானுமென் சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோந், தானுந்தன் றையலுந் தாழ்சடையோ னாண்டிலனேல்'' என ஆண்பாலும் பெண்பாலும்விரவிச் சிறப்பினான் ஒருமுடிபேற்றன.

''சொற்றொறு மிற்றிதன் பெற்றி'' என்பதனானே விரவாது எண்ணித் தோழனும் தானும்வந்தான், தோழியும் தானும்வந்தாளென முடிதலுங்கொள்க. கறியுஞ்சோறுமுண்டான், மாலையுமுடியுங்கவித்தான், குஞ்சமுங் குடையுங் கவித்தான், சாந்தமுமுலையுந் தழுவினானென வேறுவினைப் பலபொருள்விரவிச் சிறப்பினான் ஒருமுடிபேற்றன. பிறவுமன்ன.

இங்ஙனம் இறுதிக்கட்கூறிய மரபுவழுவமைதி ''வேறுவினைப் பல்பொருடழுவிய பொதுச்சொலும்'' என்னுஞ் சூத்திரத்தோடு மாறுகொளக்கூறலாம் பிறவெனின், சிறப்புமுதலியகருதாது ஒத்தநிலைமையினெண்ணியவழி முடியுமரபு அங்ஙனங்கூறுதலின் அதுமாறுகொளலன்றென்க. §''பாணன் பறையன் கடம்பன் றுடியனென், றிந்நான் கல்லது குடியு மில்லை'' என உயர்திணையெண்ணின் அஃறிணைமுடிபினவாம் வழு யாண்டமைக்கப்படுமெனிற் குடியென்பதனைப் பாணன்முதல் நான்கோடுங்கூட்டியுரைக்கப்படுதலின் வழுவாகிலையாமென்க.

இனிப் பால்விரவி ஒருமுடிபேற்பனவற்றிற்கு ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ இச்செய்புக்காரென உதாரணங்காட்டின், ''ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்'' என்பதனான் வந்தனவன்றிவேண்டைக்கு ஆகாமையானும் இங்ஙனங் காட்டிய இலக்கியங்கட்கு இலக்கணமின்மையானும் அதுகாட்டலன்றென்க. ()

## திணைபால்வழுவமைதி.

௩௭௯. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும்
இழிப்பினும் பாற்றிணை யிழுக்கினு மியல்பே.

எ - ன், திணைபால்வழுவமைப்புணர்த்துதல் நுதலிற்று.

---

* ஆசார. ௯. † சீவக. ௨௩௯0.
‡ திருவா. கோத்தும்பி, ௧௫. § புறநா. ௩௩௫.

(இ - ள்.) உவப்புமுதலியவைகளினும் பாலுந் திணையும் வழுவிவரினும் இயல்பாம். எ - று.

பாலைமுற்கூறினர், அவ்வழுவமைதி பயின்றுவருதலின். இழுக்கினுமென்னு மும்மை உவப்புமுதலியவற்றின் இழுக்கியே வருமென்னு நியதியவல்லவென்னும் பொருள்தந்துநின்றது.

(வ - று.) தன்புதல்வனை என்னம்மைவந்தாளென்பது உவப்பின் ஆண்பால் பெண்பாலாயிற்று. ஒருவனை அவர்வந்தாரென்பது உயர்வின் ஒருமைப்பால் பலர்பாலாயிற்று. *"தாதாய் மூவே ழுலகுக்குந் தாயே" என்பது சிறப்பின் ஆண்பால்பெண்பாலாயிற்று. †"எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந், தேரான் பிறனில் புகல்" என்பது செறலிற் பலர்பால் ஒருமைப்பாலாயிற்று. பெண்வழிச்செல்வானைநோக்கி இவன் பெண்ணென்பது இழிவின் ஆண்பால்பெண்பாலாயிற்று. ஓராவினை என்னம்மைவந்தாளென்பது உவப்பின் அஃறிணை உயர்திணையாயிற்று. ‡"செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோரின் னுரைதான், றந்தாரேற் றந்தா ரென்னின்னுயிர்" என்பது உயர்வினான் அஃறிணை உயர்திணையாயிற்று. §"தம்பொரு ளென்பதம் மக்கள்" என்பது சிறப்பினான் உயர்திணையஃறிணையாயிற்று. ‖"ஏவவுஞ் செய்கலான் றான்றேரா னவ்வுயிர், போஒ மளவுமோர் நோய்" என்பது செறலின் உயர்திணை அஃறிணையாயிற்று. "நாமரனுடைமை" என்பது இழிப்பின் உயர்திணை அஃறிணையாயிற்று. பிறவுமன்ன.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" என்பதனானே புதல்வனை அப்பன்வந்தானென்றும், புதல்வியை அம்மைவந்தாளென்றும் வரும் மரபுவழுவமைதிகளுங் கொள்க. இவ்வழுவமைதி உருவகவுவமைகளின் வழுவி அமைவனவொழியக் கொள்க. (உஅ)

## பாலிடவழுவமைதி.

௩௮௦. ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே.

எ - ன், முற்கூறிய உவப்புமுதலியகாரணத்தானன்றி அமைந்த பால்வழுவமைப்பும் அவ்வாறமைந்த இடவழுவமைப்புமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமைப்பாலின்கட் பன்மைச்சொல்லைத்தழுவிக் கூறுதலும், பன்மைப்பாலின்கண் ஒருமைச்சொல்லைத்தழுவிக்கூறுதலும் ஓரிடத்தின்கட் பிறவிடச்சொல்லைத்தழுவிக் கூறுதலுமுளவாம். எ - று.

(வ - று.) வெயிலெல்லாமறைத்ததுமேகம், இக்குளத்துநீரெல்லாம் கொண்டுய்த்தானிவன் எ - ம், இரண்டுகண்ணுஞ்சிவந்தது, § "இருநோக்கிவ ளுண்க ணுள்ளது" எ - ம் அஃறிணைக்கண் ஒருமையிற்பன்மையும் பன்மையி னொருமையும்வந்தன; ¶ "அருந்தை தந்தை யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்" எ - ம், **"புலைய னெறிந்த பூசற் றண்ணுமை, யேவ லிளையர் தாய்

* திருவா. புணர்ச்சிப். ௬. † திருக்குறள், ௧௪௪. ‡ சீவக. ௧௦௩௩.
§ திருக்குறள், ௬௩. ‖ திருக்குறள், ௮௪௮.
§ ,, ௧௦௯௧. ¶ அகநா. ௬௬.

** இந்தப்பகுதி இன்னநூலில் இன்னபாடலிலுள்ளதென்று இதுகாறும் புலப்படாமலிருந்தது. ஆனாலும், சம்பத்திற்கிடைத்த ஒருபழஞ்சுவடியிற்

வயிறு கரிப்ப" எ-ம் உயர்திணைபொருமையிற் பன்மையும் பன்மையினொருமை யும்வந்தன. சாத்தன்றாயிவைசெய்வலோ, * "கல்வியனென்னும் வல்லாண் சிறஅ, னெல்லே னல்ல னதுவா யாகுதல்" எ-து தன்மையின்கட் படர்க்கை வந்தது; † "திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செகுத்த லாகு, நண்பொடு பெண்டிர் மக்க ளியாவையு நண்ண லாகு, மொண்பொரு ளாவ தையா வுடன் பிறப் பாக்க லாகா, வெம்பிவை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்றான்" எ-து முன்னிலைக்கட் படர்க்கைவந்தது. நீயோஅவனோ யாரிதுசெய்தார், யானோவவனோ யாரிதுசெய்தார், நீயோயானோ யாரிதுசெய்தார், நீயோஅவனோ யானோ யாரிதுசெய்தாரென விரவி ஓரிடத்திங்கட் பிறவிடம்வருதலுங்கொள்க. பிறவுமன்ன.

ஒருபாற்பொருளை மற்றொருபாற்சொல்லானும், ஓரிடப்பொருளை மற்றோ ரிடச்சொல்லானுங்கூறுதலின் வழுவாய் அவை சான்றோர்க்கு ஒப்பமுடிந்தமை யின் அமைதியாயின; ‡ "ஒருவி ரொருவி ரோம்பினிர் கழிமின்", யான் எம்மூர் புகுவனென்பன ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதியெனின், ஒருவி ரொருவி ரோம்பிணைகழிவையெனின், வழாநிலையாகவேண்டும். அங்ஙனமாகாமையின் "ஒருவரென்ப துயரிரு பாற்றாய்" என்னுஞ் சூத்திரத்துள், "ஒருமொழி யொ ழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனானமைந்த வழாநிலையாம். யான் எம்மூர் புகுவனென்புழித் தன்கிளையினைத் தன்னொடுபடுத்து எம்மூரென்று ஞதலின் வழாநிலையாம். இத்தொடக்கத்து வழாநிலைகளை இவ்வழுவமைதியாக உதாரணங்கூறுவார் கூற்றையெல்லாம் உய்த்துணர்ந்துகளைக. (உ௬)

இடம்வழுவாமற்காத்தல்.

௩அக. தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை
எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும்.

எ . ன், இடம் வழுவற்கவெனக்காத்தலுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நால்வகைச்சொற்களையும் படர்க்கைசாரும்; இவற்றுள் முதற்கணின்ற தரல் வரலென்னும் இருவகைச்சொற்களையும் தன்மைமுன் னிலைகள்ஏற்கும். எ - று.

தரல் வரல் கொடை செலலென்பன அப்பகுதிகளையுணர்த்திநின்றன.

(வ - று.) அவனுக்குத்தந்தான், அவன்பால்வந்தான், அவனுக்குக்கொடு த்தான், அவன்பாற்சென்றான் எ-ம், எனக்குத்தந்தான், என்பால்வந்தான் எ-ம், நினக்குத்தந்தான், நின்பால்வந்தான் எ-ம் வரும். இப்பகுதியிற்பிறந்த ஏனை வினைவிகற்பங்களோடும் தொழிற்பெயரோடும் இவ்வாறேயொட்டுக.

இவைபடர்க்கை, இவைதன்மை முன்னிலையென்றது சாரும் ஏற்குமென் றமையான் இடவிகுதிகள்போல் இவை இடப்பகுதிகளாகாது அவ்விடங்கட்

சிறிதுபாடபேதமுற்ற இவ்வடியையுடைய பாடலொன்று பின்னுள்ளவாறு காணப்பட்டது:—

"நிரையிர் செல்லு மோவென நேர்ந்து, புலைய னெறிந்த பூசற் றண்ணுமை, ஏவ லிளையர் தாய்வயிறு கரிக்கு, மின்னு வருஞ்சுர மென்ப, வென்னோ தோழி யவர் சென்ற வாறே."

* புறநா. ௩சகூ. † சீவக. ௧௭௬௦. ‡ மலைபடு. உ௧அ.

கியைந்த மரபினவாமென்பதூஉம், தரல்வரலென்னுமிரண்டினையும் தன்மை முன்னிலைக்குங்கூட்டினமையிற் படர்க்கைக்கேசிறந்தன சொடை செலலென்னு மிரண்டுமென்பதூஉம், ஏனைத் தரலும் வரலும் அத்துணைச்சிறப்பினவல்லவெ ன்பதூஉம், இந்நெறிமயங்கி எனக்குக்கொடுத்தான் என்பாற்சென்றான் நினக் குக்கொடுத்தான் நின்பாற்சென்றானெனவரின், முன்னர்க்கூறிய இடவழு வமைதியின்பாற்படுமென்பதூஉம் பெற்றாம். படர்க்கைக்குப் பின்னைய இரண்டும் சிறந்தும் முன்னையவிரண்டும் அத்துணைச்சிறப்பின்றியும் வருதல் காட்டிய உதாரணங்களுட்காண்க. (௩௦)

## காலம்.

௩அ௨. இறப்பெதிர் [1]நிகழ்வெனக் கால மூன்றே.

எ - ன், முன்னர் வழுவுணர்த்துஞ்சூத்திரத்துள் முதற்கணின்ற திணைபா லிடங்களின்பெயரும் முறையும் தொகையும் பெயரியலுட்போந்தமையின் அவ ற்றையொழித்து இறுதிக்கணின்ற காலமுதல் நான்கினையுமுணர்த்தினல்லது அவற்றின்வழுவும் வழாநிலையும் வழுவமைதியுந்தோன்றாமையின், அவற்றுட் காலத்தின்பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

பிறிதோரிலக்கணங்கூறியமுகத்தான் முன்னர் விளங்கிக்கிடந்த கால்விகற் பங்களை ஈண்டுத்தொகுத்துணர்த்தினமையின் இது முடிந்ததுமுடித்தலென்னு முத்திக்கு இனம்.

(இ - ள்.) முன்னர்க்கூறியகாலம் இறந்தகாலமும் எதிர்காலமும் நிகழ் காலமுமென மூன்றாம். எ - று.

யாதொருபொருளும் தோன்றுமளவிற்றோன்றி வளருமளவின்வளர்ந்து முதிருமளவின்முதிர்ந்து அழியுமளவின்அழியுமன்றி உயிர்கள்வேண்டியவாறு ஆகாமையின் அவற்றை அவ்வளவின் அவ்வாறியற்றுவது காலமெனவும், அத னால் இயலும் பொருள்களின்றொழில் இறந்ததும் எதிர்வதும் நிகழ்வதுமாத லின் அவ்வாறு இயற்றுங்காலமும் மூன்றுகூற்றதாமெனவுமுய்த்துணர்தலின், இங்ஙனமுணராது காலமின்றெனவும் நிகழ்காலமொன்றுமேயெனவும் இறந்த காலம் எதிர்காலமிரண்டுமேயெனவுங் கூறுவார் கூற்றைவிலக்கிக் காலமூன்றே யென்றார். இதன்றிறம் இன்னும் விரித்துரைப்பிற்பெருகும். நிகழ்காலம்போல வெள்ளிடைப்பொருளன்றி இறந்தகாலம் எதிர்காலமிரண்டும் மறைபொருளாய் நிற்றலின், இறப்புநிகழ்வென்றது இறப்பெதிர்வென்றார். (௩௧)

## காலவழுவமைதி.

௩அ௩. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே.

எ - ன், காலவழுவமைப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தந்தொழில் இடையறாது முக்காலத்தினும் ஒருதன்மைய வாய் இயலும்பொருள்களை நிகழ்காலத்தாற்கூறுவர் புலவர். எ - று.

(வ - று.) அவனியைத்தாங்கி அரசிருக்கிறார், நினக்குத்துணை யான் இருக்கிறேன், எனக்குத்துணை நீ இருக்கிறாய், தெய்வமிருக்கிறது, நிலங்கிடக் கிறது, மலைநிற்கிறது, யாறு ஒழுகுகிறது எனவரும்.

(பி - ம்.) 1 'நிகழ்பென'

இதற்குச் செய்யுமென்முற்றை உதாரணங்காட்டுவாருமுளர்; அது, பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையாகவரும் முச்காலத்தினும் ஒத்தியல் பொருட்கு இயையாமையானும் அவ்வழக்கின்மையானும் அது பொருந்தாதென்க. யாறொழுகும், தீச்சுடுமென வழங்குமாலோவெனின், அஃது ஒழுகுந் தன்மையையுடையது, சுடுந்தன்மையுடையதென்னும்பொருட்டாய்நிற்றலின், * "இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்" என்னுஞ்சூத்திரத்தின்பாற்படுவதாமென்க. யாறு ஒழுகுவது, தீச்சுடுவதென்பதுமது. (௩௨)

௩அ௪. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉ முக்கால மேற்புழி.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) விரைவு மிகுதி தெளிவென்னும் மூன்றுகாரணத்தினானும் இக்காரணமின்றியும் முக்காலங்களும் ஒன்று ஒன்றாகக்கூறப்படும், ஏற்குமிடத்து. எ - று.

காரணமின்றியென்பார் இயல்பினுமென்றும் பிறழ்தல் ஒருதலையன்றென்பார் பிறழவுமென்றும் விரைவுமுதலியநான்கினும் தனித்தனி முக்காலங்களும் முறையே பிறழாதென்பார் ஏற்புழியென்றுங்கூறினார்.

(வ - று.) சோறு வேவாநிற்ப அஃதுண்டுபோதற்பொருட்டாக இருந்தானொருவனைப் புறத்துநின்றானொருவன் இருவரும் போகவேண்டுங்குறையுடைமையின் இன்னும் உண்டிலையோ வென்றால், உண்டேனுண்டேனென்னும்; உண்ணாநின்றானும் உண்டேனுண்டேனென்னும். இவை விரைவின் எதிர்காலமும் நிகழ்காலமும் இறந்தகாலமாயின. அக்காட்டிற்புகிற் கூறைகோட்பட்டான்; கள்வான் நினையிற் கையறுப்புண்டான்: இது மிகுதியான் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று; கூறைகோட்படுதலும் கையறுப்புண்ணுதலும் தவறினுந்தவறுமாதலின் இது மிகுதியாயிற்று. அறஞ்செய்யிற் சுவர்க்கம்புக்கான்; †எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் மழைபெய்தது: இது தெளிவின் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று, உரையளவையானும் காட்சியளவையானும் இவற்றிற்கு இவை காரணமாகத் தெளிந்தமையின் இது தெளிவாயிற்று. யாம் பண்டு விளையாடுவது இக்கா, யாம் பண்டுவிளையாடுகிறது இக்கா: இது காரணமின்றி இயல்பினான் இறந்தகாலம் எதிர்காலமு நிகழ்காலமுமாயிற்று. பிறவுமன்ன. இவ்வுதாரணங்களுட் சிலவற்றை மாறிக்காட்டுவாருமுளர். அவைபொருந்தாமை அப்பொருள்களானுணர்க. உழுதுவருக உண்டுவருக என்புழி, உழுது உண்டு என்பனவற்றையும் இயல்பின் எதிர்காலம் இறந்தகாலமாய் மயங்கினவென்பாருமுளர். வருதலைநோக்குங்கால் அவை இறந்தகாலமேயாதலின் வழாநிலையாமென்க. (௩௩)

அ ய வ கை வி னை.

௩அ௫. அறிவறி யாமை யையுறல் கொளல்கொடை
ஏவ றரும்வினை வாறு மிழுக்கார்.

---

* தொல். கிளவி. கக.

† இக்கருத்து, "பொய்யா வெழிலி பெய்விட நோக்கி, முட்டை கொண்டு வற்புலஞ் சேருஞ், சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக்கு" (புறநா. கஎ௩) என்பதனாலும் விளங்குகின்றது.

எ - ன், வினாவின்பெயரும் முறையும் தொகையுமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அறிவுமுதலியனதருதலான்வரும் வினாஆறனையும் களையாது கொள்வர்புலவர். எ - று.

(வ - று.) ஆசிரியன் இச்சூத்திரத்திற்குப்பொருள் யாதென்பது அறிவினா; மாணாக்கன் அவ்வாறுகூறுவது அறியாவினா; குற்றியோ மகனோவென்பது ஐயவினா; பொன்னுளவோ மணியுளவோவென்பது கொளல்வினா; சாத்தற்கு ஆடையில்லையோவென்பது கொடைவினா; சாத்தா உண்டாயோவென்பது ஏவல்வினா; இவற்றுள் அறிவும் அறியாமையும் இவ்விரண்டும் விரவியஐயமுமன்றி வினாவைத்தருவதொன்றின்மையின் அவற்றைமுற்கூறி ஏனையவும் அவற்றின்கணடங்குமேனும் கொளல் கொடை ஏவலென்னும் பொருள்விசேடத்தான் வேறுவிதந்துபிற்கூறி மூன்றாகற்பாலனவற்றை ஆறாகக்கூறுதல் தொன்றுதொடு நெறியென்பார் ஆறுமிழுக்காரென்றுங்கூறினார்; "அறியான் வினாத லறிவொப்புக் காண்ட, லையமறுத்த லவனறிவு தான்கோடன், மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினாவே" என்னும் ஒருசாராசிரியர்கூற்றினுள்ளும் பின்னைய இரண்டும் முன்னையமூன்றனுள் அடங்குமென்பதுதோன்ற அவற்றை முற்கூறுதல்காண்க. (௩௪)

## எண்வகைவிடை.

௩அசு. சுட்டு மறைநே ரேவல் வினாதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப.

எ - ன், இறையின்பெயரும் முறையும் தொகையும் வழுவமைதியுமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விறையெட்டனுள் முன்னையமூன்றும் செவ்வனிறையாம்; பின்னையஐந்தும் இறைப்பொருள் பயத்தலின் இறையாகத்தழீஇக்கொள்ளுவர்புலவர். எ - று.

எனவே இறையாவது செவ்வனிறையும் இறைபயப்பதுமென இருகூற்றதாமென்க.

(வ - று.) வஞ்சிக்குவழியாதென்றவழி இதுவென்றும், "மாவீழ்நொச்சி" என்பதற்குப் பொருள்யாதென்றவழி வண்டுவீழ்ந்து தேனுண்ணும்நொச்சிப்பூவென்றும் கருதிக் கூறுந் தாடக்கத்தனவெல்லாம் சுட்டு; சாத்தா இதுசெய்வாயோவென்றவழிச் செய்யேனென்பது மறை; செய்வேனென்பது நேர்; நீ செய்யென்பது ஏவல்; செய்வேனோவென்பது வினாதல்; இவ்வோகார விடைச்சொற்கு எதிர்மறைமுதலிய பொருள்விலக்கி ஆற்றலான் வினாப்பொருளே கொள்க. உடம்பு நொந்ததோ, உடம்புநோவாநின்றதென்பது உற்றதுரைத்தல். நோவாநின்றதென்பது நிகழ்காலமாயினும் நோவெழுந்தகாலங்கருதி உற்றதுரைத்தலாயிற்று. உடம்புநோமென்பது உறுவதுகூறல்; மற்றையதுசெய்வேனென்பது இனமொழி; இறைபயப்பனவற்றுள் வினாவெதிர்வினாதலொன்றும் நேர்தற்பொருளையும் ஏனையனைத்தும் மறைப்பொருளையும் பயத்தல்காண்க.

இறைபயப்பனவற்றை நிலவியவென விசேடித்தமையின், நிலவாதனவும் சிலவுளவெனப் பொருளுரைத்துச் செய்வேனோவென எதிர்மறை ஓகாரமாயும் யானோசெய்வேனெனச் சிறப்போகாரமாயுநின்று செய்யேனென்னும் இறைப்பொருள்பயந்துவருதலும் பிறவும் கங்கையாடிப் போந்தேன் ஒருகூறையீக வென வினாவில்வழி இறைநிகழ்தலுங்கொள்க. (௩௫)

## வினாவிடைகளில் முதல்சினைவழுவாமை.

௩அஎ. வினாவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல்.

எ - ன், வினாவும் செப்பும் முதல்சினை ஒற்றுமைகருதி வழுவக்கூறின் அமையாதெனக்காத்தலுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினாவுதற்கண்ணும் செப்புதற்கண்ணும் சினைமுதல்கள் ஒற்றுமைகருதி மயங்கக்கூறலாகா. எ - று.

(வ-று.) கண்பிறழ்ந்ததோ கயல்பிறழ்ந்ததோ சாத்தனல்லவனோகொற்றனல்லவனோ என வினாவினார்க்குக் கண்பிறழ்ந்தது கயல்பிறழ்ந்தது; சாத்தனல்லன் கொற்றனல்லன் என வரும். பிறவுமன்ன. எனவேகயற்கண்பிறழ்ந்ததோவெனச் சினையைவினவுவான் அதனையொழித்து அதனையுடையாளைக் கருதி இவள் பிறழ்ந்தாளோ கயல்பிறழ்ந்ததோவெனவினவுதலும், இவள்பிறழ்ந்தாளெனச் செப்புதலும் இவ்வாறு முதலைவினவுவானும் செப்புவானும் அதனையொழித்துச் சினையைவினவுதலும் செப்புதலும் வழுவாமென்பதாயிற்று. இங்ஙனமாயிற் குயிலோகிளவியெனவினவுவான் குயிலிசையைக் குயிலோவென்று வினவுதல்வழுவாம் பிறவெனின், அவ்வாறுகூறுவான் குயிலைக்கருதாது அதனிசையையேகருதிக் கூறுதலானும் குயிலிசையோ கிளவியென இசையென்னுஞ் சொல் எஞ்சிநிற்றலானும் இத்தொடக்கத்தன வழுவாகாவென்க. (௩௬)

## மரபு.

௩அஅ. எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

எ - ன், மரபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) யாதொருபொருளை யாதொருசொல்லான் யாதொருநெறியான் அறிவுடையோர்சொன்னார்களோ அப்பொருளை அச்சொல்லான் அந்நெறியாற் சொல்லுதல் மரபாம். எ - று.

எவ்வாறென்றது, ஒருபொருளைப் பலசொல்லானும் பலபொருளை ஒருசொல்லானுங் கூறுதல்முதலியவற்றைமயக்க. அவற்றுட் சிலவருமாறு:— குதிரைக்குட்டி யானைக்குட்டி எ - ம், யானைக்கன்று பசுவின்கன்று மாங்கன்று எ - ம் வரும். பிறவுமன்ன.

இவ்வாறன்றிக் குதிரைக்கன்று பசுவின்குட்டி எனக்கூறின் வழுவாமாதலிற் சான்றோர்வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் பயின்றுவருமரபறிந்து கொள்க. (௩௭)

## மரபுவழாநிலை.

௩அகூ. வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்.

எ - ன், மரபுவழுவற்கவென்பதுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெவ்வேறுவினைகட்குரிய பலபொருள்களையும் ஒருங்குதழுவி நிற்கும் ஒருபொதுச்சொல்லும் அவற்றின்சிறப்புச்சொற்களாய் எண்ணிநிற்கும் பலசொல்லும் ஒன்றற்குரிய சிறப்புவினைவேண்டாது எல்லாவற்றிற்குமுரிய தொரு பொதுவினைவேண்டுவனவாம். எ - று.

(வ - று.) அடிசிலென்பது உண்பன தின்பன நக்குவன பருகுவனவற் றிற்கெல்லாம் பொதுச்சொல்லாகலான் அதனை அயின்றார் மிசைந்தாரென்க. அணியென்பது கவிப்பன கட்டுவன இடுவன தொடுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை அணிந்தார் தாங்கினாரென்க. இயமென்பது கொட்டுவன ஊதுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை இய ம்பினார் படுத்தாரென்க. படையென்பது எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை வழங்கினார் தொ ட்டாரென்க.

இனி எண்ணியவழியும் சிலநாட்சோறும் சிலநாள் இடியும் சிலநாட்பாலும் சிலநாள்நீரும் சிலநாட்சாறும் அயின்றார் மிசைந்தாரென்க. கறியுஞ்சோறு முண்டானென எண்ணிக் கறியொடுவிராயசோற்றை உண்டானெனனும் பொ ருட்டாய்ச் சிறப்பினான் ஒருமுடிபேற்பனவற்றிற்கும் இவற்றிற்கும் வேற்றுமை யுணர்க. குழையும் கொடுநாணுமணிந்தார்; பறையுங்குழலுமியம்பினார்; வாளும் வேலும் வழங்கினாரென்க. பிறவுமன்ன. (நஅ)

நகூ0. வினைசார் பினமிட மேவி விளங்காப்
பலபொரு ளொருசொற் பணிப்பர்சிறப் பெடுத்தே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) குறித்தபொருளைவிளக்கும் வினையினையும் சார்பும் இனமும் இடமுமுதலியபெயரினையும் பலபொருளொருசொற்பொருந்தி விளங்கிக்கிடந்த தேல் அதனைவாளாகூறின் அவ்வினை பெயர்களைப்பொருந்தாமையால் விளங் காது கிடந்ததனைச் சிறப்பொடுகூட்டிக் கூறுவர்புலவர். எ - று.

பாக்குவெற்றிலைதின்றானென்றால் சுண்ணும்பும் கற்பூரமும் உடன்தின்றா னென்பது தழீஇக்கோடல்போற் சார்பு இனம் இடமெனச் சிறந்தன எடுத் தோதி ஏனையபெயர்களையும் தழீஇக்கோடலின் முதலியவென்றும். அன்றி இனைத்தென்றறிபொருளெனக் கூறுதலுமொன்று.

மேவியென்னும் வினையெச்சம் விளங்காவென்பதன்கண் முதனிலையொடு முடிந்தது.

(வ - று.) மாவென்பது மாமரத்திற்கும் வண்டிற்கும் ஒருசார்விலங்கிற் கும் திருவிற்கும் பொதுவான பலபொருளொருசொல். இப்பொருள்களுள், மாப் பூத்தது, காய்த்தது என்றதனையானே மா என்பது வினையால் விளங் கிற்று. "மாவீழ் வாச்சி மணிக்குழல் தாழ்ந்தது" என்றதனையானே வண்டென்பது சார்பால்விளங்கிற்று. சேனை யானை தேர் மாச் சதுரங்கமென்ற தனையானே குதிரையென்பது இனத்தால்விளங்கிற்று. "சொற்றொறு மிற் றிதன் பெற்றி" என்பதனானே இதனுட் சேனையென்பது ஆனைமுதலிய மூன் றுறுப்பினையுமொழித்துக் காலாண்மேற்சேறலும் இவ்விதியாற்படுத்துக.

*"மாமறுக்த மலர்மார்பு" என்றதுணையானே திருவென்பது இடத்தான் விளங்கிற்று. இவை வாராகூறப்பட்டன. இனி மாவேறினன், மா யாது என்றவழிக் குறித்தபொருள் விளங்காமையின் விளங்குதற்பொருட்டுப் பாய்மா வேறினான், மாமரத்தின்கண் ஏறினான், பாய்மாயாது, மாமரமியாது எனச் சிறப்பொடுகூட்டிக்கூறுக. பிறவுமன்ன. (௩௯)

௩௯௧. எழுத்திய றிரியாப் பொருடிரி புணர்மொழி
இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) எழுத்தினதுஇயல்புவேறுபடாது பொருள்வேறுபட்டுச் சொல் லும்பொருளும் ஐயுறநிற்குந் தொடர்மொழிகள் அங்ஙனங்குறித்துக்கூறுஞ் சொற்களின் இறுதியும் முதலுந்தோன்ற இசையறுத்துக்கூறும் வேறுபாட்டால் துணியப்படுமென்றுசொல்லுவர் புலவர். எ - று.

எனவே அவ்வாறு இசையறுத்துக்கூறுதல் மரபென்பதாயிற்று.

(வ - று.) செம்பொன்பதின்றொடி, நாகன்றேவன்போத்து, [1]தாமரைக் கணியார், குன்றேறாமா, குறும்பரம்பு, ஆற்றுக்கரை, செம்பருத்தி என்றற் றொடக்கத்தனவற்றை அவ்வாறு இசையறுத்து உச்சரித்துக்காண்க. (௪0)

## மரபுவழாநிலையும் வழுவமைதியும்.

௩௯௨. ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி
ஒருவினை கொடுப்ப தனியு மொரோவழி.

எ - ன், மரபுவழுவற்கவெனக்காத்தலும் அதன்வழுவமைப்புமுணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) ஒருபொருண்மேற் பலபெயர்வருமாயிற் பொருளொன்றே யென்பதுதோன்ற இறுதிக்கண் ஒருவினைகொடுத்துக்கூறுவர்; ஒருபொருளா தல் தவறாதவழிப் பெயர்தொறுங்கொடுத்துங்கூறுவர்புலவர். எ - று.

ஒருபொருட்கு ஒருமுடிபென்பார் ஒருவினைகொடுப்பவென்றாரன்றி ஒரு பெயர்கொடுத்தலை ஒழித்தாரல்லரென்க.

(வ - று.) ஆசிரியன் பேருர்கிழான் சாத்தன்வந்தான் எ - ம், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிவந்தான் எ - ம், † "குயிலைச் சிலம் படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான், கயிலைச் சிலம்பிற்பைம் பூம் புனங் காக்குங் கருங்கட்செவ்வாய், மயிலைச் சிலம்பகண் டியான்போய் வரு வன்வண் பூங்கொடிகள், பயிலச் சிலம்பெதிர்கூய்ப் பண்ணைநண்ணும் பளிக் கறைக்கே," எ - ம், ‡ "பொருப்பர்க் கியாமொன்று மாட்டோம் புகலப் புக லெமக்காம், விருப்பர்க் கியாவர்க்கு மேலர்க்கு மேவலர் நெரித்த, நெருப்பர்க்கு நீடம் பலவர்க் கன்பர் குலநிலத்துக், கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே" எ - ம் இவை யிறுதிக்கண் ஒருவினையும் ஒருபெயருங் கொடுக்கப்பட்டன. இனிப் பெயர்தொறுங் கொடுக்குமாறு:— § "மின்னேர்

* புறநா. எ. † திருச்சிற். ௯௰. ‡ திருச்சிற். க௪௩. § சீவக. உகஉஉ.

(பி - ம்.) 1 'தாமரக்கணியார்'

வரைகொன்ற வேலோன் [1] புகுதக, இன்றேன் கமழ்தா ரியக்கன் புகுதக, வென்றோன் புகுதக வீரன் புகுதக, வென்றே நகர மெதிர்கொண் டதுவே'' எனவரும். பிறவுமன்ன. (௩௪)

௩௯௫. திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ
டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) திணைமுதலாகக் கல்வியீறாக விதந்தனபற்றிவருஞ்சிறப்புப் பெயருடனே இயற்பெயரை ஒருபொருள் ஒருங்கேற்குமாயின் அவ்வியற்பெயர் பின்வருதல் சிறந்தமரபாம். எ - று.

ஏற்றற்குவினைமுதல்ஒருபொருளென்பது மேலைச்சூத்திரத்தாற்பெற்றும். சிறப்பேயென்றமையான்முன்வருமென்பதூஉம், அதுவழுவமைதியென்பதூஉம் பெற்றும்.

(வ - று.) குன்றவன்கொற்றன், அருவாளனழகன், பார்ப்பான்பாராயணன், ஊர்கிழானேணன், பொன்னன்பொறையன், கரியன்கம்பன், நாடகிநம்பி, ஆசிரியனமிழ்தனெனவரும். இவை இயற்பெயர்பின்வந்தன. இனிக் கொற்றன்குன்றவன், அழகனருவாளன் என முறையே இயற்பெயர் முன்னும் வருதல்காண்க. இன்னும் இயற்பெயர்முன்வருங்கால், வெண்கொற்றப்படைத் தலைவன், வெள்ளேறக்காவிதி என இறுதி விகாரமாய் வருதலுங்காண்க. பிறவுமன்ன. (௩௫)

௩௯௬. படர்க்கைமுப் பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கு
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) படர்க்கையிடத்தவாகிய உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் விரவுப்பெயரென்னும் மூவகைப்பெயரோடு சுட்டுப்பெயர்சாரின் அச்சுட்டுப் பெயர் அம்மூவகைப்பெயர்க்கும் பின்வரும், அவ்வழி வினைநிகழ்வழியெனின்; வினைநிகழ்ச்சியின்றேல் அப்பெயர்க்குப் பின்னுமுன்னும்வரும். இம்மரபு வழக்கின்கண்ணவாம்; செய்யுட்கண்ணேயெனின் நியதியின்றி வேண்டியவாறே வரப்பெறும். எ - று.

(வ - று.) நம்பிவந்தான், அவற்குச்சோறிடுக; எருதுவந்தது, அதற்குப் புல்லிடுக; சாத்தன்தெய்வம், அவற்குப்பலியிடுக; சாத்தன்வந்தது அதற்குப்புல் லிடுக என வினைநிகழ்வழிச் சுட்டுப்பெயர் பின்வந்தன. வந்தான்நம்பி அவற்குச் சோறிடுக... வனவும் முறையே யாட்டுக. இவற்றுட் சாத்தன்றெய்வமென்புழி வினையின்றிப் பெயர்வந்ததாலோவெனின், படர்க்கைமுப்பெயரும் தனித்து நில்லாது பெயர்வினைகளைக்கொண்டுமுடிந்தும் பெயர்வினைகட்குப் பயனிலையாயும் புடைபெயரும்புடைபெயர்ச்சியை வினையென்றும் அப்புடைபெயர்ச்சியுள் வழிச் சுட்டுப்பெயர்வரிற் பின்வருமென்றுங்கூறினரன்றி இவ்வினையைவினை யென்றாரல்லரென்க. மைந்தன்பிறந்தான் அதனாற்றந்தையுவக்குமென்புழி அது

(பி - ம்.) [1] 'புகுதுக'

வென்னுஞ்சுட்டு மைந்தனையணைந்ததில்லையாலோவெனின், அவன் தற்கிழமை யாகிய பிறத்தலையணைதலின் அவனை அணைந்ததேயாமென்க. அன்றி, "சொற்றொறு மிற்றிகள் பெற்றி" என்னுஞ்சூத்திரத்தான் அமைத்தலுமொன்று. நம்பி யவன் அவனம்பி எனப் பெயர்க்குப் பின்னுமுன்னுஞ் சுட்டுப்பெயர் வந்தன; ஏனைப்பெயர்களோடுமொட்டுக பெயர்க்குப் பின்னுமுன்னும் சுட்டுப்பெயர் வருதல்மரபாமன்றே, இதனை வழுவற்கவெனக்காத்தல் எவ்வாறுவாராமைகருதி யெனின், சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனினெனக்கூறினமையின் வினையில் வழிச்சுட்டுப்பெயர் படர்க்கைமுப்பெயர்க்கும் பின்வருமோ முன்வருமோ இரு மருங்கும்வருமோ வாராதொழியுமோ யாங்ஙனமாங்கொலென்னும் ஐயமறுத்தற் குக்கூறினாரி இதுவழுவற்கவெனக்காத்தாரல்லர்; அக்கருத்துச்சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனினென்றதற்கே கொள்க. அதனை அவ்வாறுகாத்தல் எவ்வ ழுவாராமைகருதியெனின், நம்பிவந்தான் அவனுக்குச்சோறிடுகவென்பான் அவற் குச்சோறிடுக நம்பிவந்தானென்றேனும் அவன்வந்தான் நம்பிக்குச்சோறிடுக வென்றேனும் சுட்டுப்பெயரைமுன்வைத்துக்கூறின், அஃது ஒருபொருள்மேல் இருபெயர் வந்ததாகாது நம்பிவேறு அவன்வேறாய்முடியும் அவ்வழுவராமை கருதியென்க.

இனிச் செய்யுட்சேற்புழிவருமாறு:—"அவனணங்குநோய் செய்தா னையி லையாய் வேலன், விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி முகனமர்ந், தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல், பின்னை யதன்கண் விளைவு" என வரும். செய்யுட்கண் பின்வருதல் வழுவற்கவெனக்காத்தலும் இப்பாட்டின் கண் முன்வருதல் வழுவமைதியுமாமென்க. பிறவுமன்ன. (௪௩)

## அடுக்குத்தொடர்.

௩௯௫. அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்று நான் கெல்லைமுறை யடுக்கும்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) அசைநிலைக்கும், விரைவு வெகுளி உவகை அச்சம் அவலமுதலிய பொருணிலைக்கும், இசைநிறைக்கும் ஒருசொல் இரண்டு மூன்று நான்களவு முறையேஅடுக்கும். எ - று.

எனவே அசைநிலைக்கு இரண்டும், பொருணிலைக்கு இரண்டு மூன்றும், இசைநிறைக்கு இரண்டு மூன்று நான்கும் அடுக்குமென்பதாயிற்று.

(வ - று) ஒக்குமொக்கும், அன்றேயன்றே என்பன அசைநிலை. உண்டேனுண்டேன், போந்தேன்போந்தேன்போந்தேனென்பன விரைவு; எய்யெய், எறியெறியெறி என்பன வெகுளி; வருகவருக, பொலிகபொலிகபொலிக என்பன உவகை; பாம்புபாம்பு, தீத்தீத்தீ என்பன அச்சம்; உய்யேனுய்யேன், வாழேன் வாழேன் வாழேனென்பன அவலம்; இவைமுதலியன பொருணிலை. "ஏஏ அம்பன் மொழிந்தனள் யாயே", "நல்குமே நல்குமே நல்குமே நாமகள்", "பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ" என்பன இசைநிறை. பிறவுமன்ன.

ஒருசொல்லைப் பலகாற்கூறுதல் வழுவாயினும் இவ்விடத்தாமென்றல் வழு வமைதியும் இதற்கு இவ்வெல்லை இறவாதென்றல் வழுவற்கவெனக் காத்தலுமா மென்க. (௪௪)

## மரபுவழாநிலை.

௩௯௫. இரட்டைக் கிளவி யிரட்டிற் பிரிந்திசையா.

எ - ன், மரபுவழுவற்கவெனக்காத்தலுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இரட்டைச்சொற்கள் அவ்விரட்டிற்பிரிந்து தனித்துஒலியா. எ-று.

எனவே வலிந்து பிரித்துகூறிற் பொருள்படாதென்பதூஉம் இரட்டித்துக் கூறுதலே மரபென்பதூஉமாயிற்று.

(வ - று.) * "சலசல மும்மதம்பொழிய", † "கலகலென் கூந்துணையல்லால்", ‡ "குறுகுறு நடந்துஞ் சிறுகை நீட்டியும்", § "வற்றிய வோலை கலகலக்கும்", "துடிதுடித்துத் துள்ளிவரும்"; துடிதுடித்தென்புழிப் பின்னையது பிரிந்திசைக்குமேனும் முன்னையது பிரிந்திசையாமையின் இரட்டைச்சொல்லேயாமென்க. பிறவுமன்ன. (௪௫)

௩௯௬. ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஒருபொருண்மேற் பலபெயர் கூறுங்கால் அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காதுகூறுவர் புலவர். எ - று.

எனவே பிரிப்புள்ளனவற்றைக் கூறாரென்பதாயிற்று.

(வ - று.) ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன்வந்தான், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிவந்தானென்பன பிரிவிலவாய்ப்பலபெயரும் ஒருபொருண்மேற்சென்று கேட்போர்க்குக் கூறுவான்கருதியபொருள் விளக்கி நின்றன. "வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந், தையலாய் நீயின்று நல்கினை நல்காயேற், கூடலார் கோவொடு நீயும் படுதியே, நாடறியக் கௌவை யொருங்கு" எ - ம், "கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன், வைகலு மேறும் வயக்களிறே - கைதொழுவல், காலேக வண்ணனைக் கண்ணுரக் காணவெஞ், சாலேகஞ் சாரநட" எ-ம் சுட்டின்பொருளவாய்வரும் பெயரொடு தொக்க ஒருபொருட்பலபெயர்களுமன்ன.

பிரிவிலவென்றதற்கு இவ்வாறுபொருள்கூறாது, "கொய்தளிர்த்தண்டலை" என்னும்பாட்டினுட் காலேகவண்ணம் சேந்தனுக்கும் பிறர்க்குமுண்டாதலைப்பிரிவென்றுகருதி இது வழூவென்பாருமுளர். காலேகவண்ணம் பொதுவியல்பன்றிச் சேந்தனிற்பிரிந்ததன்றாதலானும் சேந்தனைக்களிற்றின்மேற் சேய்மைக்கண் வரக்கண்டாள் அவனைக் கண்ணுரக்காணவேண்டும் பெருவேட்கைதந்தது அவனது காலேகவண்ணமென்பாள் அவ்வாறுகூறவேண்டுமாதலானும், இதுசான்றோரிலக்கியமாதலானும் அதுபொருளன்றென்க.

இனிப்பிரிவுளதாய் வழூவியதுயாதோவெனில், "பகையியல் பாயிலி படைக்கை மறவன்" எனவரிற் பகையியல்பாயிலியைப் படைக்கைமறவனென்றல் கூடாமையிற்பிரிந்து வழூவாமென்க. பிறவுமன்ன. (௪௬)

---

* சீவக. ௮௨. † நாலடி. ௧௪௦.

‡ புறநா. ௧௮௮. § நாலடி. ௨௫௬.

## மரபுவழுவமைதி.

௩௯௮. ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ.

எ - ன், மரபுவழுவமைப்புணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஒருபொருளைக் குறித்துவரும் பலசொற்கள் அவ்வாறுவருதற்கு ஒருகாரணமின்றேனுஞ் சிறந்துநிற்றலின் அது வழுவென்று நீக்கப்படாது. எ - று.

சிறந்துநிற்றல் செவிக்குச் சொல்லின்பந்தோன்றநிற்றல்.

சிறப்பினினென்றமையாற் காரணமின்றிவந்தனவென்பது பெற்றாம்.

(வ-று.) "மீமிசை ஞாயிறு கடற்பாய்ந் தாங்கு", *"புனிற்றிளங் கன்று", "நாகிளங் கமுகு", †"ஆடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கல்", ‡ "உயர்ந்தோங்கு பெருவரை", §"குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி" எனவரும். பிறவுமன்ன.

இனிச் சிறப்பினினென்றதற்கு அப்பொருளைச்சிறப்பித்தலினெனப் பொருள்கூறுவாருமுளர். அச்சொற்கு அப்பொருள் இயையாமையானும் அக்காரணத்தான் வந்தனவேல் ஈண்டு ஒருபொருட்பன்மொழியாய்வரும் பெயர்கள் ஒருபொருட் பலபெயருள் அடங்குமாதலானும், ||"மீமிசை" என்றால் மேலென்ற பொருளன்றி விசேடித்து ஒருசிறப்பின்மையானும், உண்டேல அஃது இஃதெனவிதந்து கூறுவாராதலானும் அதுபொருளன்றென்க. (௪௭)

## மரபுவழுவாமற்காத்தல்.

௩௯௯. இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.

எ - ன், மரபுவழூவற்கவெனக் காத்தலுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இத்துணைத்தென்று வரையறையுணரப்படும்பொருளும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாதபொருளும் அவற்றை வினைப்படுத்துக்கூறுங்கால் முற்றும்மை வேண்டிநிற்கும். எ - று.

பொருமொன வேறுவிதந்தமையின் உலகென்றது ஒழிந்த காலமனைத்தினையும் இடமனைத்தினையுமென்பதூஉம், இனைத்தென்றறிபொருளென்றமையானும் உலகனெக்காலமனைத்தினையும் இடமனைத்தினையுங் கூறுதலானும் உம்மையென்றது முற்றும்மையையென்பதூஉம் பெற்றாம்.

(வ - று.) தமிழ்நாட்டுமூவேந்தரும் வந்தார், உலகமூன்றினையும் ஒருங்குணர்ந்தான், நின்கண்வைத்தபொருள் நூற்றினையும் அவ்விருவருக்குங்கொடு, இறைவற்குக்கண்மூன்றும்முச்சுடர், இறைவற்கு உடைபோர்வையிரண்டும்தோலென இனைத்தென்றறிபொருள் வினைபடுத்துரைப்பின் உம்மைவேண்டிநின்றன; இவற்றுள் முச்சுடர்தோலென்பன பெயராலோவெனின், ஈண்டுவினையென்றதூஉம், ¶"சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனில்" என்றதுபோலும். பவளக்கோட்டு நீலயானை என்றுமில்லை; முயற்கோடு ஆகாயப்பூ என்றுமில்லை; மண்ணிற்

---

* பெரியபு, திருவாரூர். ௨௨. † பொருந. ௬௧. ‡ மலைபடு. ௪௧.
§ நாலடி. ௪௯. || புறநா. ௯. ¶ நன். சூ. ௩௯௪.

படமென்றுமில்லை; நாலிற்கடம் என்றுமில்லை; ஒளிமுன் இருள் என்றுமில்லையென உலகினிலாப்பொருள் விளைப்படுத்துரைப்பின் உம்மைவேண்டிநின்றன. எவ்விடத்தும் இல்லையெனவுமொட்டுக.

உம்மைவருமென்றது உம்மைவேண்டுமென்றமையான் அஃது இசையெச்சமாய் நிற்க அதனைவேண்டுவனவாய், "வடவரைழ்க் குமரி, யிருதோ டோழர் பற்ற", "எருமை நாற்கா லீர்க்கீ ழவ்வே" எ-ம், மண்ணிற்படமில்லை; நாலிற்கடமில்லை; ஒளிமுன் இருளில்லை எ - ம் வரும்.

இவ்வில்பொருளின்கட் காலப்பெயர் இடப்பெயர்களும் உடனெஞ்சுகின்றன. இவ்வாறுவருதல் கருதாது செய்யுள்விகாரமாக உம்மை தொக்கதென்பாருமுளர். உலகினிலாப்பொருள், உள்பொருள்போற் காலத்தொடுபட்டதன்றென்பது தோன்ற என்றுமில்லையென்றது காலத்தொடுபட்டதுபோல்வைத்துப் பவளக்கோட்டுநீலயானை பண்டுமில்லையென எச்சவும்மைதந்து உதாரணங்காட்டுவர்; அது யானைகுடத்தினுமில்லைக் குழிசியினுமில்லையென்றதுபோலுமென்க.

இரட்டுறமொழிதலான், உலகின்கண் நிலையில்பொருள் விளைப்படுத்துரைப்பின் எச்சவும்மைவேண்டுமெனவும் பொருளுரைத்துக்கொள்க. அவைவருமாறு: செல்வமுநில்லாது, செல்வமும்பொய்யெனவரும். செல்வநில்லாது, செல்வம் பொய்யென எச்சவும்மைகொடாது வாளாகூறின், இளமை யாக்கைமுதலியன நிலைபெறுமெனவும், மெய்ப்பொருளெனவும் பொருள்படுமென்க. உம்மை வேண்டுமென்றதனாற் செல்வநில்லாது, செல்வம்பொய்யென உம்மை எஞ்சி நிற்றலுங்கொள்க. (௪அ)

## மரபுவழுவமைதி.

௪00. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே.

எ - ன், மரபுவழுவமைப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செயப்படுபொருளைக் கருத்தாவைப்போல வைத்து அதன் மேல் வினைமுதல்வினையேற்றிக்கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம். எ - று.

(வ - று.) இம்மாடு யான்கொண்டது, இச்சோறு யான்கொடுத்தது, இவ்வெழுத்து யானெழுதியது எனவரும்.

உம்மையாற் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறுகூறுதலேயன்றிக் கருவி நிலம் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையுமென்பது பெற்றும். அவைவருமாறு: இவ்வெழுத்தாணி யானெழுதியது, இவ்வீடு யானிருந்தது, இத்தொழில் யான்செய்தது, இந்நாள் யான்பிறந்தது எனவரும்.

இனி இல்லமெழுகிற்று, எழுத்தாணியெழுதிற்று என உதாரணங்காட்டுவாருமுளர். இல்லமெழுகிற்றென்பது தாரு மெழுக்கின்மையானும், நடத்தநடந்த தேரினைப்போல ஒருவன் எழுதவெழுதியது எழுத்தாணியாதலின் அது தன் தொழிலேயன்றி ஒருவன்தொழிலன்றாதலானும் அவைகாட்டாகாவென்க. (௪௧)

## மரபுவழுவாமற்காத்தலும் மரபுவழுவமைதியும்.

௪0௧. பொருண்முத லாறு மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.

எ - ன், மரபுவழுவற்கவெனக்காத்தலும் மரபுவழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளாதி ஆறாகிய அடைகள் அடுத்து வருமொழிகள் இனமுள்ளனவேயாமன்றி இனமில்லனவுமாம், உலகவழக்கினுள்ளும் செய்யுள்வழக்கினுள்ளும். எ - று.

உள்ளவுமென்னும் உயர்வுசிறப்பும்மையும் இல்லவுமென்னும் இழிவுசிறப்பும்மையும் எண்ணிநின்றன.

(வ - று.) நெய்க்குடம், குளநெல், கார்த்திகைவிளக்கு, பூமரம், செந்தாமரை, குறுங்கடலி எ - ம், உப்பளம், ஊர்மன்று, நாளரும்பு, இலைமரம், செம்போத்து, தோய்தயிர் எ - ம் வழக்கின்கண் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தன. *"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்",†"கானியாற் றடைகரை", "முந்நாட் பிறையின் முளியாது வளர்ந்தது", ‡ "கலவ மாமயி லெருத்திற் கடிமலர் ரவிழ்ந்தன காயா", § "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவள்", ‖ "ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேல்" எ - ம், ¶ "பொற்கோட் டிமையமும் பொதியிலும் போன்றே", ǂ "வடவேங்கடந், தென்குமரி", ** "வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன", †† "சிறகர் வண்டு செவ்வழி பாட", ‡‡ "செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும், வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்", §§ "மூழங்கு கடலோத மூழ்கிப் போக" எ - ம் செய்யுட்கண் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தன.

இனமுள்ளனவற்றை வாளாகூறிற் குறித்தபொருள் தோன்றாமையின் அடைகொடுத்து விதந்துகூறுகவெனவும், இனமில்லனவற்றிற்கு அடைகொடுத்துக்கூறுதல் மிகையாமாயினும் அமையுமெனவும் பொருள்போந்தமையின் முன்னையது வழுவற்கவெனக்காத்தலும், பின்னையது வழுவமைப்புமாமென்க.

ஆசிரியர் தொல்காப்பியனார், |||"இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை, வழக்கா றல்லது செய்யு ளாறே" என்றமையிற் பொருண்முதலாறு மடையென்றும் இருவழக்கினுமென்றும் இவ்விருமையும் பயின்றுவருமென்பதுதோன்ற உள்ளவுமில்லவுமாமென இனமுள்ளனவற்றோடு ஒருங்கெண்ணியுங் கூறினாரென்க. (௫௦)

அடைமொழி மரபுவழுவாமற்காத்தல்.

௪௦௨. அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.

எ - ன், மரபுவழுவற்கவெனக் காத்தலுணர்த்துதல் நுதலிற்று; பொருந்துவனகொள்கவென்பார் ஆண்டுறினென்றமையான்.

(இ - ள்.) மேற்கூறிய அடைசேர்மொழி இனத்தைத் தருதலேயன்றி அதனோடு இனமல்லதனையுந்தரும், அவ்விடத்திற்குப்பொருந்துமாயின். எ - று.

---

* திருக்குறள், ௯௧௩. † இனியது. ௫. ‡ சீவக. ௧௫௫௮.
§ குறுந். ௧௮. ‖ சீவக. ௧௦௦௭. ¶ புறநா. ௨. ǂ தொல். பாயிரம்.
** புறநா. ௩௨௧. †† சீவக. ௭௪. ‡‡ புறநா. ௩௮.
§§ தொல். செய். ௫. ௬௪ - உரை. ||| தொல். கிளவி. ௧௮.

(வ - று.) பாவஞ்செய்தான் நரகம்புகுமென்றதுணையானே புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம்புகுமென இனத்தைத்தருதலேயன்றி அவன் இதுசெய்யின் இதுவருமென்னும் அறிவிலியென்னும் இனமல்லதனையுந்தந்தது. மேலைச்சேரிச்சேவல் அலைத்ததென்றதுணையானே கீழைச்சேரிச்சேவல் அலைப்புண்டதென இனத்தைத்தருதலேயன்றி அச்சேவலுடையார்க்கு வெற்றியாயிற்றென்னும் இனமல்லதனையுந்தந்தது.

இனி, இரட்டுறமொழிதலான் இனமல்லதுந்தருமென்பதற்கு இனத்தைத்தருதலையொழித்து இனமல்லதனையுந்தருமெனவும் பொருளுரைத்துக்கொள்க. அவைவருமாறு:—சுமந்தான் வீழ்ந்தானென்றாற் சும்வாதான் வீழ்ந்தானல்லனெனுங் கருத்துச் சொல்லுவார்க்கு இன்றாதலின் அவ்வினத்தையொழித்துச்சுமையும் வீழ்ந்ததென்னும் இனமல்லதனைத்தந்தது. காலையெழுந்து கருமத்திற்செல்வான் கோழிகூவிற்றென்றால் ஏனைப்புட்கள், கூவுகிலவென்னுங்கருத்து அவற்கு இன்றாதலின் அவ்வினத்தையொழித்துப் பொழுதுபுலர்ந்ததென்னும் இனமல்லதனைத்தந்தது. பெய்முகிலனையானென்றாற் கைம்மாறு கருதாத பெருங்கொடையாளனென்னும் இனமல்லதனை இனமிலதாகிய அடைமொழி தந்தது. இவ்வடைகொடாது முகிலனையானென வாளாகூறினும் இக்கொடைப்பொருள் தருமாலோவெனின், அவ்வாறுகூறின், முகில்வண்ணனெனவும் பொருள்படுமாதலின் அதனையொழித்துக் கொடைப்பொருட்கு உரிமை செய்தது அவ்வடையேயாமென்க. பிறவுமன்ன. ஆண்டுமின்னென்றமையான் இவ்வாறு பொருந்துவனகொள்க. (ருக)

## அடைமொழி மரபுவழுவாமற்காத்தலும் வழுவமைதியும்.

சoரு. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலொ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.

எ-ன், மரபுவழுவற்கவெனக்காத்தலும் மரபுவழூஉமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறிய அடை முதல் சினைகளை அடுத்துவருங்கால், ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலும் ஒன்றையொன்று விசேடித்துவருதலும், இரண்டடை முதலை விசேடித்துவருதலும் வழங்குமடையாம்; இரண்டடை சினையைவிசேடித்துவருதலும் 1 இவ்வரம்பு இறந்துவருதலும் செய்யுளடையாம். எ - று.

ஈரடைமுதலோடாதலுமென்றமையான், முறையென்றது ஒன்றையொன்று விசேடித்துவருவதென்பதூஉம், அங்ஙனம்வரினே அடைபல சினைபல வாராது ஒவ்வொன்று வருமென்பதூஉம் பெற்றாம்.

(வ - று.) வேற்கைமுருகன், நிலப்பூங்குருந்து, கார்த்திகைப்பூக்கோழி, பழக்குலைவாழை, செங்காலுநாரை, முழங்குதிரைக்கடல் எ - ம், மலைச்சிறு கிணறு, * "சிறுகருங்காக்கை" எ - ம் வழக்கினுள் வந்தன. "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த", "கருநெடுங் கண்ணுறுங் காம நோயே" எ - ம்,

* ஐங்குறு. ருகசு.

(பி - ம்.) 1 'இவ்வாறு பிறழ்ந்துவருதலும்'

"பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை" எ-ம் செய்யுட்கண்வந்தன. பிறவுமன்ன. இவற்றுள், அடைசினை முதன்முறை யடைதலொன்றும் வழுவற்றவெனக்காத்தலும், ஏனையமூன்றும் அவ்வாறு நில்லாமையின் வழுவமைதியுமாமென்க.

* "கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த, செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா, வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி" எனவருவன கொம்புகூர்மாடு, மடல்விரிதாழை என்றாற்போல வருதலின், "உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்" என்னுஞ் சூத்திரத்துள், அஃறிணையொடு சார்த்தின் அஃறிணைமுடிபினவாமென அமைத்ததற்பாற்படுமென்க. (ருஉ)

## இயற்கைப்பொருள் மரபுவழுவமைதி.

ச஁ச. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

எ - ன், மரபுவழுவமைப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இயற்கைப்பொருள் செயற்கைப்பொருளென இருவகைப்படும்பொருள்களுள் இயற்கைப்பொருளை இத்தன்மைத்தென்று கூறுக. எ-று.

இயற்கையென்பது அவிகாரம்; செயற்கையென்பது விகாரம்.

(வ - று.) மெய்யுள்ளது, பொய்யில்லது, நிலம்வலிது, நீர்தண்ணிது, தீவெய்து, மயிர்கரியது, பயிர்பசியது எனவரும்.

நிலநீர்முதலிய பூதங்கள் மாயையின் விகாரமென்பதை நோக்கிற் செயற்கைப்பொருளாயினும் அப்பூதத்தின்விகாரங்களைநோக்கின் இயற்கைப்பொருளாமென்க.

இயற்கைப்பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின் இது வழுவமைதியாயிற்று. இது கருதாது இவ்வாறுகூறுதல் மரபென்பாருமுளர். அதுநிற்க.

வளியுளருந்தன்மைத்து, உயிருணருந்தன்மைத்து என்றது வளியுளரும், உயிருணருமெனவும் உதாரணங்காட்டுவர். வளியின்கண்ணும் உயிரின்கண்ணும் உளர்தலும் உணர்தலுமாகிய செயல் நிகழ்ந்ததுணையானே அவற்றிற்கு அவை செயற்கையாமன்றி இயற்கையாகாமையானும், அவ்வாறுகூறுதற்கு ஒருவிதியின்மையானும் அவைபொருந்தாவென்க. (ருங)

## செயற்கைப்பொருள் மரபுவழுவாமற்காத்தலும் வழுவமைதியும்.

ச஁ரு. காரண முதலா வாக்கம் பெற்றும்
காரண மின்றி யாக்கம் பெற்றும்
ஆக்க மின்றிக் காரண மடுத்தும்
இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.

எ-ன், மரபுவழுவற்கவெனக்காத்தலும் மரபுவழுவமைப்பும்உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதல் துணை நிமித்தங்களாற் செயும்பொருளாகிய செயற்கைப்பொருளைக்கூறுங்காற் காரணச்சொல் முன்வர ஆக்கச்சொற் பின்வரப்

* புறநா. உஙஅ.

பெற்றும், காரணச்சொல் தொக்குநிற்ப ஆக்கச்சொல்வரப்பெற்றும், ஆக்கச்சொல் தொக்குநிற்பக் காரணச்சொல்வரப்பெற்றும், இவ்விருவகைச்சொல்லும் தொக்கு நிற்கவும் நடக்கும். எ - று.

காரணச்சொல்லும் ஆக்கச்சொல்லும் யாண்டுவரினும் அந்நிலைக்களத்துத் தந்து பொருளுரைக்கப்படுதலிற் காரணமுதலாவென்றார்.

(வ - று) கடுவும் கைபிழி [1]பெண்ணெயும் பெற்றமையின் மயிர்நல்ல வாயின. எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால்யாத்தமையாற் பயிர்நல்லவாயின எ - ம், மயிர்நல்லவாயின, பயிர்நல்லவாயின எ-ம், கடுவும் கைபிழி யெண்ணெ யும் பெற்றமையான் மயிர்நல்ல, எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால்யாத்தமை யிற் பயிர்நல்ல எ - ம், மயிர்நல்ல, பயிர்நல்ல எ - ம் வரும். *"பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பாய்புன, லல்வய லூரநின் றார்புலால் - புல்லெருக்க, மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற், காதற்றாய் நாறு மெமக்கு" எனப் பரத்தையிற்பிரிந்த தலைவனைப்புலந்தும் அவன்செய்ததீங்கினைத் தன் இனியமுகத்தால் தணிக்கும் புதல்வனையுவந்தும், ஒன்றொன்றாகாதனவற்றை ஆயினபோற் கூறும்வழி ஆக்கச்சொற்றொக்க வருதலும் அதன்பாற்படுத்துக. பிறவுமன்ன.

காரணமுதலா ஆக்கம்பெறுதலொன்றும் வழுவற்கவெனக்காத்தலும் ஏனையமூன்றும் வழுவமைதியுமாமென்க. (௫௪)

## விடைமரபு வழுவாமற்காத்தல்.

௪0௬. தம்பா லில்ல தில்லெனி னினனாய்
உள்ளது [2]கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர்சொற் சுருங்கு தற்கே.

எ - ன், மரபுவழுவற்கவெனக்காத்தலுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவன்வினவியது தம்பக்கல் இல்லையாயின் அதனை இல்லை யென்னலுறின் அவன் வினவியதற்கு இனமாய்த் தம்பக்கலுள்ளதனைக்கூறி அக் கூற்றானே அதனையில்லையென்றும், உள்ளதாயின் இத்துணையுண்டென்றும் கூறு வர்புலவர்; வினவுதலும்செப்புதலுமாகியசொற்கள்சுருங்குதற்பொருட்டு. எ-று.

குன்றக்கூறன்முதலிய குற்றங்கள்நீக்கிச் சுருங்கச்சொல்லுதன்முதலிய அழ கொடுகூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்பார் சொற்சுருங்குதற்கேயென்றார்.

(வ-று.) பயறுண்டோவணிகீரேயென்றார்க்கு அஃதின்றென்பார் உழுந் துண்டு, உழுந்துந்துவரையுமுண்டென்க. இவ்வினமொழிகள் பயறில்லையென் னும் இறைபயந்துநிற்றலின் இனனாயுள்ளது [3]கூறிமாற்றியுமென்றார். அஃதுண் டென்பார் இத்துணையுண்டென்க. நூறுவிற்கும் பட்டாடையுண்டோவென் றார்க்கு அஃதின்றென்பார் ஐம்பதுவிற்கும் கோசிகமுண்டென்க. அஃதுண் டென்பார் எண்பது விற்பதுண்டென்க. பிறவுமன்ன.

இவ்வாறன்றி உழுந்தல்லதில்லை, பயறுளவென உதாரணங்காட்டுவாரு முளர். அவை சொற்சுருங்குதற்கேயென்பதனோடு மாறுபட்டு மிகைபடக்கூற லென்னுங் குற்றமாமென்க. (௫௫)

---

* தொல். கிளவி. சூ. ௫௬. ந. மேற்.

(பி - ம்.) [1] 'எண்ணை' [2] 'கூறியுமாற்றியும்' [3] 'கூறியுமாற்றியும்'

## இரக்குஞ்சொல்.

சஂ0எ. ஈதா கொடுவெனு மூன்று முறையே
இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) ஈயென்பது இழிந்தோன் உயர்ந்தோன்மாட்டு இரக்குஞ்சொல்லாம்; தாவென்பது ஒப்போன்மாட்டிரக்குஞ்சொல்லாம்; கொடுவென்பது உயர்ந்தோன் இழிந்தோன்மாட்டிரக்குஞ்சொல்லாம். எ - று.

(வ - று.) தந்தை ஈ, தோழ தா, மைந்த கொடு எனவரும். பிறவழி வரும் ஒப்பு உயர்வு தாழ்வினும் இவ்வாறே ஒட்டுக. வழங்கு, வீசு, நல்கு என்றற்றொடக்கத்து இரப்புரைகள்போலாது ஈவோர்க்கும் ஏற்போர்க்கும் ஒப்புயர்வுதாழ்வுகளை ஈதாகொடுவென்றதுணையானே உணர்த்திநிற்றலின் இவற்றை இனைத்தென்றற்பொருளாகக் கூறினர். அருள், அளியென்னும் இரப்புரைகள் ஈவோர்க்கு உயர்வும் ஏற்போர்க்கு இழிவுமுணர்த்தினவாலோவெனின், அவை கருணைக்குரிய சொற்கள்; குறிப்பினான் இரத்தற்பொருளையுணர்த்திநின்றன வன்றி இரப்புரையல்லவென்க.

இம்மரபு மயங்கிவருவனவுளவேல் * "புதியன புகுதலும் வழுவல" என்றதன்பாற்படுத்துக. (௫௬)

## மரபுவழுவமைதி.

சஂ0அ. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.

எ - ன், மரபுவழுவமைப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெளிப்படையானன்றிக் குறிப்பாற் பொருளுணரப்படுஞ் சொற்களும் சிலவுள. எ - று.

அவையாவன, † ஒன்றொழிபொதுச்சொன்முதற் சொல்லுவான் குறிப்பீறாக விதந்தனமுதலியவாம்.

செவியெல்லாம் சாலச் செம்பொனணியுஞ் செல்வத்தினரென்பார் செஞ்செவியரென்றும், குற்றமற்றமரபினரென்பார் வெள்ளொக்கலரென்றும், பெருவாழ்க்கையினரென்பார் குழைகொண்டுகோழியெறியும் வாழ்க்கையரென்றும் கூறும் சொல்லுவான் குறிப்பொன்றுமே உதாரணங்காட்டுவாருமுளர். அங்ஙனமாயின் ஏனைய குறிப்பிற்பொருள்தருமொழியல்லவாமென்க.

கேட்போர் இடர்ப்படாது வெளிப்படையிற்கூறுதல் மரபாதலின் இதுவழுவமைதியாயிற்று. (௫௭)

சஂ0கூ. கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) கேளாதனவற்றைக் கேட்குநபோலவும், சொல்லாதனவற்றைச்சொல்லுவனபோலவும், நடவாதனவற்றை நடப்பனபோலவும் இத்தொழில்

* நன். சூ. சகூ௨. † நன். சூ. உகூகூ.

களல்லனபிற செய்யாதனவற்றைச் செய்வனபோலவும் அஃறிணையிடத்தும் சொல்லப்படும். எ - று.

முன்னையபோல விதவாது இறுதிக்கண் இயற்றுவனவெனப் பொதுப் படக்கூறினமையின் இத்தொழில்களல்லன பிறவென்னுஞ்சொல் எஞ்சிநின்றன.

(வ - று.) * "நன்னீரை வாழி யனிச்சமே", † "இரவெல்லா நின்றுயா வீர்ங்கதிர்த் திங்காள்" எ - ம், ‡ "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக் கும்", § "மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலுந், தேய்தலு முடைமை யைத் திங்கள் செப்புமால்" எ - ம், இவ்வழி யவ்வூர்க்குப்போம், இவ்வரச ருணை எங்குஞ்செல்லும் எ - ம், ‖ "தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த் தபின், தன்னெஞ்சே தன்னைச் சுடும்", ¶ "வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன்ன மடமை கூரத், தண்கய நீருட்கண்ட தன்னிழல் பிறிதென் றெண் ணிக், கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப், பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றாடிற் றன்றே", $ "கருவிரற் செம்முக வெண்பற் சூன்மந்தி, பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூவிப் - பெருவரைமேற், தேன்றேவர்க் கீயு மலைநாட வாரலோ, வான்றேவர் கொட்கும் வழி" எ - ம் முறையே காண்க. அஃறிணைமருங்கினுமென்ற உம்மையான் உயர்திணைமருங்கினும் இவ் வாறுசொல்லப்படுதல் புலம்பல்முதலியவற்றுட் காண்க. (௫அ)

௪௧௦. [1] உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) உருவகத்தின்கண்ணும் உவமைக்கண்ணும் இருதிணை தம்முள் மயங்குதலும் முதல்சினை தம்முள்மயங்குதலும் இவ்வியலுட் சொல்லாதொழி ந்தனவும் போற்றிக்கொள்க. எ - று.

(வ - று.) ** "மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை, யன்ன நடை யினார்க் காரமுதந் - துன்னும், பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப்பூம் பைந்தார், ரெரி சினவேற் றானையெங் கோ" என்பன உயர்திணை அஃறிணையொடுமயங்கின. †† "தாழிரும் தடக்கையு மருப்புந் தம்பியர், தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மத, மாழ்கடற் சுற்றமா வழன்று சீவக, வேழுயர் போதக மினத்தொடேற் றதே" என்பன உயர்திணை அஃறிணையோடும் முதல்சினையோடும் மயங்கின. முகமதியென்பது சினைமுதலொடு மயங்கிற்று. ‡‡ "அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி, புகழ்தரு மேகலை ஞாயில் பூண்முலை, திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ், சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே" இஃது அஃறிணை உயர்திணையோடுமயங்கிற்று. இவை உருவகம். §§ "கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள், மங்கலங் கூற மலிபெய்திக் - கங்கையாள், பூம்புன லாகந் தழீஇயி னான் போரடுதோள், வேம்பார் தெரியலெம் வேந்து", ‖‖ "இலனென் றசைஇ யிருப்பாரைக் காணி, னிலமென்னு நல்லா ணகும்", ¶¶ "வருநதி யீன்றண் மறந்

* திருக்குறள், ௧௧௧௧. † தொல். கள. சூ. ௪௨. ந. உரை.
‡ திருக்குறள், ௭௦௯. § சீவக. ௨௬௩௨. ‖ திருக்குறள், ௨௯௩.
¶ சீவக. ௧௬௨௩. $ திணைமா. ௧௦. ** பு.வெ. ௧௮௯. †† சீவக. ௭௪௫.
‡‡ சீவக. ௧௪௪௪. §§ பு-வெ. ௨௨௪. ‖‖ திருக்குறள், ௧௦௪௦. ¶¶ சீவக. ௧௩௯௧.

(பி - ம்.) 1 'உருவகமுவமையிற்'

தொழிந்தாள் வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாண், முருந்தின் காறுங் கூழை யை முனிவார் நின்னை யென்முனிவார், பொருந்திற் றன்று விதுவென்றுய் பொன்று மளித்திவ் வுயிரென்றுய், திருந்து சோலைக் கருங்குயிலே சிலம்ப விருந்து கூவுதியால்" என்றற்றொடக்கத்தனவுமன்ன. * "மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்" என்பது உயர்திணையோடு அஃறிணைமயங்கிற்று. † "கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" என்பது அஃறிணையோடு உயர்திணைமயங்கிற்று. கயற்கண் என்பது சினைமுதலொடு மயங்கிற்று. தளிர் மேனியென்பது முதல் சினையொடு மயங்கிற்று. பிறவுமன்ன.

‡"தருமன் றண்ணளி யாற்றன தீகையால், வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே, யருமை யாலழ கிற்கணை யைந்துடைத், திருமகன்றிரு மாநில மன்னனே", §"இந்திர குமரன் போல விறைமக னிருந்து பின்னை" என்றற்றொடக்கத்தனவாய் மயங்காதுவருதல் மரபாதலின் இதுவழுவமைதியாயிற்று. இனிப் பிறவுமென்றதனால், உருவகவுவமைக்கண் இவன் பாரதி, இவன்பாரதியனையானெனப் பான்மயங்கக்கூறுதலும், கயலினது பிறழ்ச்சிபோலும் கண்ணினது பிறழ்ச்சியென்பார்கயற்கணென்று சொல்லின்முடிவின் அப்பொருண்முடியாது எஞ்சக் கூறுதலும், பிறவற்றுள்ளும் இவ்வாறு எஞ்சக்கூறுதலும், செங்கோல், கொடுங்கோல், வீரக்கழல், சினவேலென ஒருபொருட்டன்மையை மற்றொருபொருண்மேல் வைத்துக்கூறுதலும், எந்தாயெனன்பார் அருளிற்றெனன ஒருவினையை மற்றொருவினையாற்கூறுதலும், "அடிவண்ண மல்லா லலங்குதார்க் கோதை, முடிவண்ணங் கண்டறியா வேந்து", ‖ "துஞ்சாக், கணவ வடபுலத் தாசே" என உயர்திணையை அஃறிணையாகக்கூறுதலும் இவைபோல்வன பிறவும் வழுவமைதியாகக்கொள்க. (ருக)

## பொருள்கோள்.

சகக. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
தாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.

எ - ன், நால்வகைச் சொற்களானுஞ் செய்யுஞ்செய்யுள் கொள்ளும் பொருள்கோளின்பெயரும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) யாற்றுநீர்ப்பொருள்கோளும், மொழிமாற்றுப்பொருள்கோளும், நிரனிறைப்பொருள்கோளும், விற்பூட்டுப்பொருள்கோளும், தாப்பிசைப்பொருள்கோளும், அளைமறிபாப்புப்பொருள்கோளும், கொண்டுகூட்டுப்பொருள்கோளும், அடிமறிமாற்றுப்பொருள்கோளுமெனப் பொருள்கோள் எட்டாம். எ - று.

இவற்றுள் தாப்பிசையென்பதற்கு ஊசல்போல் இடைநின்று இருமருங்குஞ்செல்லுஞ் சொல்லென்பது பொருள். தாம்பென்பது ஊசல். அஃது அளைமற்பாம்பென்பதிற் பாம்பென்பது பாப்பெனநின்றாற்போல வலிந்துநின்றது. ஏனையவும் காரணக்குறியாதல் காண்க. (கூ0)

## யாற்றுநீர்ப் பொருள்கோள்.

சகஉ. [1] மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.

---

* சீவக. உ௯அகூ. † சீவக. ருரு. ‡ சீவக ககூ0. § சீவக. கஉருரு.
‖ புறநா. ருக. (பி - ம்.) 1 'மற்றைய'

எ - ன், நிறுத்தமுறையானே யாற்றுநீர்ப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மொழிமாற்றுமுதலியபோற் பிறழ்ந்துசெலவேண்டாது யாற்றுப்புனலொழுக்குப்போல் நெறிப்பட்டு அடிதொறும் பொருள்அற்றற்றொழுகும் அப்பொருள்கள் யாற்றுநீர்ப்பொருள்கோளாம். எ - று.

இடைஅறுதொழுகும் யாற்றுநீரொழுக்கு உவமையாதலின் அடிதொறும் வான்பொருள் அற்றற்றொழுகுதலாவது மொழிமாற்றுமுதலியபோற் பிறழ்ந்து செல்லுஞ்செலவற்று ஆங்காங்கமைந்தொழுகுதலாமன்றி அடிதொறும் பொருண்முடிதலன்றாமென்க. அங்ஙனமாயின் ஆங்காங்கெனப் பொதுப்படக்கூறாது அடிதொறுமென்றதென்னையெனின், அவ்வாறேகூறுவார் 1 ஓரிலக்கணை மேல் வைத்துக்கூறினரென்க.

(வ - று.) * "சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன், மெல்லவே கருவிருந் தீன்று மேலலார், செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்த நூற், கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" எனவரும். இப்பாட்டினுட் சொல்லென்னு மெழுவாயினை முதலெடுத்து அதன்தொழிலாகிய வினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொள்ள இடையே முறைநிறீஇக் காய்த்த வென்னும் பயனிலையை இறுதிக்கட்டந்து முடித்தமையின் இப்பொருளொழுகுதல் யாற்றுநீரொழுக்குப்போறல் காண்க.

இதற்கு இவ்வாறன்றி ஏனையடிகளைநோக்காது அடிதொறும்பொருண் முடிந்துவருவது யாற்றுநீர்ப்பொருள்கோளெனப் பொருளுரைத்து, † "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம், விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ், சொலற்பாலவல்லாத சொல்லுதலுங் குற்றங், கொலைப்பாலுங் குற்றமேயாம்" என உதாரணங்காட்டுவாருமுளர். யாற்றுநீரொழுக்குக்கு இடையறுதலின்மையானும், அற்றதேல் அதனை ஒழுக்கென்றல் கூடாமையானும் அஃது உவமையன்றாம். ஒவ்வோரடிபொழுகுதற்கு உவமையாயிற்றெனிற் பாட்டுமுழுவதும் இடையறுதொழுகிப்பயின்றுவரும்பொருள்கோள் மொழிமாற்றுமுதலியவற்றுள் அடங்காமையிற் குன்றக்கூறுதலாம்; இங்ஙனமாதலின் அதுபொருளன்றாய் அவர்காட்டியவுதாரணம் அடிமறிமாற்றின்பாற் படுமென்க. அப்பொருள்கோளின் விகற்பம் அச்சூத்திரத்துட் டோன்றக்கூறுதும். இதனை வான்பொருளென்றார், இது நெறிப்பட்டுவருதலானும், பயின்றுவருதலானும், மொழிமாற்றுமுதலிய வந்தசெய்யுட்கண்ணும் விராய்வருதலானுமென்க. (கூக)

## மொழிமாற்றுப் பொருள்கோள்.

௪கஉ. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன் மொழிமாற்றே.

எ - ன், மொழிமாற்றுப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இரண்டுமொழியும் அவைகொள்ளும் இரண்டுபயனிலையுமாய் வரக்கூறுவோர் நான்கனுள் ஏற்றபயனிலைகட்கு இயையுமொழிகளைத் தனித்தனி கூட்டிக்கூறாது ஏலாதபயனிலைகட்கு இயையாதமொழிகளைத் தனித்தனி கூட்டி ஓரடியுள்ளே கூறும் பொருள்கோள் மொழிமாற்றுப் பொருள்கோளாம். எ-று.

* சீவக. ருஉ. † நான்மணி. உகூ.

(பி - ம்.) 1 'ஓரிலச்சினை'

ஒன்றற்கொன்று பொருந்தியதென்பார் ஏற்றபொருளுக்கு இயையுமொழி யென்றார். மொழிமாற்றென்பது தனக்குள்ளதைக்கொடுத்துப் பிறர்க்குள்ளதை வாங்கும் பண்டமாற்றுப்போறலின் இரண்டுமொழியும் அவைகொள்ளும் இரண்டுபயனிலையும் வந்தல்லது மொழிமாற்றுதல் கூடாமையின் அத்தொகை தந்து கூறினும்.

(வ - று.) "சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய, யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப, கானக நாடன் சுனை" எனவரும். ஆழவென்னும் பயனிலைக் கியைந்த அம்மியென்னுமொழியினை மிதப்பவென்னும்பயனிலைக்கும் மிதப்ப வென்னும் பயனிலைக்கியைந்த சுரையென்னுமொழியினை ஆழவென்னும் பயனிலைக்குமாக மாற்றிக்கூறியவாறும் நீத்தென்னும் பயனிலைக்கியைந்த முயலென்னுமொழியினை நிலையென்னும்பயனிலைக்கும் நிலையென்னும்பயனிலைக்கியைந்த யானையென்னுமொழியினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக்கூறிய வாறுங் காண்க.

"ஆலத்து மேல குவளை குளத்துள, வாலி னெடிய குரங்கு". என ஈரடி முதலியவற்றுட்கூறிற் சேய்மைக்கண்ணவாய் மொழிமாற்றென்பது தோன்றாமையின் அஃதன்றெனவிலக்கி அண்மைக்கட்கூறுவதே மொழிமாற்றென்பார் ஓரடியுளென்றார். ஆலத்துமேலவென்பது ஓரடியுள்வாராமையிற் கொண்டு கூட்டென்பாருமுளர். அது மொழிமாற்றிற்குங் கொண்டுகூட்டிற்கும் வேற்றுமையுணரார்கூற்றென்க. அவர் இச்சூத்திரத்திற்கு மொழிமாற்றொடு பொருந்தாது கொண்டுகூட்டொடு பொருந்தப் பொருள்கூறிச் சுரையாழவென்னும் உதாரணங்காட்டுவர். (௯௨)

## நிரனிறைப் பொருள்கோள்.

௪௪௪. பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினு
நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே.

எ - ன், நிரனிறைப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயரும்வினையுமாகிய சொற்களையும் அவைகொள்ளும் பெயரும்வினையுமாகிய பயனிலைகளையும் வேறுவேறு நிரையாகநிறுத்தி முறையாயேனும் எதிராயேனும் இதற்கு இதுபயனிலையென்பதுபடக்கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப்பொருள்கோளாம். எ - று.

(வ - று.) "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி, மதிபவள முத்தமுகம் வாய்முறுவல், பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல், வடிவினளே வஞ்சி மகள்:" இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய்நின்ற முறைநிரனிறை. "காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப, போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய - நீதியான், மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு, நுண்ணிய வாய பொருள்:" இது வினைப்பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய்நின்ற முறைநிரனிறை. "களிறுங் கந்தும் போல நளிகடற், கூம்புங் கலனுந் தோன்றுந், தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே:" இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய்நின்ற எதிர்நிரனிறை. *"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவா ரஃகாவும், பாடகமு மூரகமும் பஞ்

* இந்தவெண்பா, கணிகண்ணர்பாடியதாக வைஷ்ணவ குருபரம்பரையால் தெரியவருகின்றது.

சரமா - நீடியமா, னின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றே, மன்றார் மதிட் கச்சி மாண்பு:'' இது பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய்நின்ற எதிர் நிரனிறை. பிறவுமன்ன.

மேலைச்சூத்திரத்துள்மொழியென்றும் இச்சூத்திரத்துட் சொல்லென்றுங் கூறிய நிறுத்தசொல்லும் அதுகொள்ளும் பயனிலையெனினும் பொருளெனினு மொக்கும் குறித்துவருகிளவியுமன்றி அல்வழிவேற்றுமையுருபுகளும் பிறசொற் களும் உடன்வருமாலோவெனின், சாத்தன்வந்தானென்றால் அவனுடை அணி முதலியனவும் உடன்வருதல் கூறாதேயமைதல்போலுமென்க.

''சொற்றொறு மிற்றிதன் பெற்றி'' என்பதனானே, ''கர்மவிதி கண்முக மென்மருங்குற் செய்யவாய்,தோமி றுகடி னி சொல்லமிழ்தர்-தேமலர்க்,காந்தள் குரும்பை கனக மடவாள்கை, யேந்திளங் கொங்கை யெழில்'' எனவரும் எழுத் துநிரனிறையும், ''வெண்பா முதலாக வேதிய ராதியா, மண்பால் வகுத்த வரு ணமா - மொண்பா, இனங்கட்கு மவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூல், மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து'' எனத் தொகுத்துக்கூறும் நிரனிறைமுதலிய வுங்கொள்க.

''அம்ம் பவள்ள் வரிநெடுங்க ணுய்வஞ்சிச், கொம்ம் பவள்ள் கொடிமருங் குல் கோங்கி, னரும்ம் பவண்ண் முலையொக்கு மொக்குங், கரும்ம் பவளவாயிற் சொல்'' என்னும் யாற்றுநீர்ப்பொருள்கோளை மயக்கநிரனிறை என்பாருமுளர். இது சொல்லையும் பொருளையும் தனித்தனிநிறீஇக் கூறியதன்றி நிரல்நிறையாக நிறீஇக்கூறாமையின் நிரனிறையன்றென்பார் நெறியென்றார். (௧௩)

## பூட்டுவிற் பொருள்கோள்.

௪௧௫. எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.

எ - ன், பூட்டுவிற் பொருள்கோளாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் முதலினும் ஈற்றினுநிற்குமொழிகள் தம்முட் பொருணோக்கமுடைய பொருள்கோள் பூட்டுவிற்பொருள்கோளாம். எ - று.

(வ - று.) *''திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர், நிறந்து படிற்பெ ரிதா மேத - முறந்தையர்கோன், றண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக், கண் ணாரக் காணக் கதவு'' எனவரும். பிறவுமன்ன. (௧௪)

## தாப்பிசைப் பொருள்கோள்.

௪௧௬. இடைநிலை மொழியே யேனையீ ரிடத்து
நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை.

எ - ன், தாப்பிசைப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இடைநிற்குமொழி ஒழிந்த முதலினும் ஈற்றினுஞ்சென்று பொருளைக்கூடும் பொருள்கோள் தாப்பிசைப்பொருள்கோளாம். எ - று.

(வ - று.) † ''உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண, வண்ணாத்தல் செய்யா தளறு'' எனவரும். (௧௫)

---

* முத். புறத் - காம. † திருக்குறள், ௨௫௫.

## அளைமறிபாப்புப் பொருள்கோள்.

௪௧௭. செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

எ - ன், அளைமறிபாப்புப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கண் ஈற்றினின்றசொல் இடையினும் முதலினுஞ் சென்றபொருள்கோள் அளைமறிபாப்புப்பொருள்கோளாம். எ - று.

(வ - று.) "தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டேன்றித் தளர்வார் தாமுஞ், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார் தாமு, மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே" எனவரும். ()

## கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

௪௧௮. யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே.

எ - ன், கொண்டுகூட்டுப்பொருள்கோளாமாறு உணர்த்துனுதலிற்று.

(இ - ள்.) செய்யுளடி பலவினும் இயல்பாகிய யாற்றுநீர்ப்பொருளுக்கேலாது கோத்துக்கிடந்த மொழிகளையெடுத்து அப்பொருளுக்கு ஏற்றவிடத்துக் கூட்டும்பொருள்கோள் கொண்டுகூட்டுப்பொருள்கோளாம். எ - று.

இயல்பாகிய யாற்றுநீர்ப்பொருள்கோளிற் பிறழ்ந்துவருவனவற்றை மொழிமாற்றுமுதலியவாகப் பகுத்தமையின் அப்பொருளுக்குஏற்றவிடத்தென்றும்.

(வ - று.) "தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல், வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி, யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே, வங்கத்துச் சென்றார் வரின்" எனவரும். இதனுள், வங்கத்துச்சென்றார்வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாண்மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழிவெண்முட்டையுடைத்தன்னபசலை தணிவாமெனக் கொண்டுகூட்டுக.

"உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்" என்பதனை முதல்சினையென முறைநிறீஇப் பொருள்கொள்வதும் அது. (கூள)

## அடிமறிமாற்றுப் பொருள்கோள்.

௪௧௯. ஏற்புழி யெடுத்துடன்கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறா வடியவு மடிமறி.

எ - ன், அடிமறிமாற்றுப்பொருள்கோளாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பொருளுக்கேற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டுமடியினையுடையவும் யாதானும் ஓரடியையெடுத்து அச்செய்யுட்கண் முதலிடையீறுகளில் யாதானும் ஓரிடத்துக்கூட்டினும்பொருளோடு ஓசைமாட்சியும் ஓசையொழியப் பொருள்மாட்சியும் வேறுபடாத அடியினையுடையவுமாகிய பொருள்கோள் அடிமறி மாற்றுப்பொருள்கோளாம். எ - று.

மாட்சி - செறிப்பட்டொழுகல்.

ஏற்புழியெடுத்துக்கூட்டுதல் - இருவகையடிமறிமாற்றிற்கும் பொருந்துமாயினும் அவ்வடிகள் மாற்றுதற்குஅமைந்துநீங்கும்; இவ்வடிகள் நீங்காவென்பார் உடனென்றும் ஓசையொழியப்பொருண்மாட்சிமாத்திரையும் மாறுவடியவுமென்பார் பொருளிசைமாட்சியுமென உம்மை தந்துகூறினார்.

(வ - று.) * "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார், கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு, மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம், விடுக்கும் வினையுலந்தக் கால்" என்பதனுள், கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்காலீண்டும், விடுக்கும்வினையுலந்தக்கால் மிடுக்குற்றுப்பற்றினும் நில்லாதுசெல்வம்; இஃதறியார் நடுக்குற்றுத்தற்சேர்ந்தார் துன்பந்துடையாரென அடிகளை ஏற்புழியெடுத்துக்கூட்டுக. "மாறுகொதலர் மலைமறந்தனரே, யாறுக்கட்பனி வரலானாவே, யேறுமென்றோள் வளைநெகி ழும்மே, கூறாய் தோழி யான்வாழு மாறே" என்பதனுள் யாதானும் ஓரடியையெடுத்து யாதானுமோரிடத்துக்கூட்டி உச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடாமைகாண்க. †"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம், விலைப்பாலிற் கொண்டூன்மிசைதலுங் குற்றஞ், சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம், கொலைப்பாலுங் குற்றமே யாம்." இதனுள் ஈற்றடியொழிந்தமூன்றடியுள், யாதானுமொன்றையெடுத்து யாதானு மோரிடத்துக்கூட்டிப்பொருளும் ஓசையும் வேறுபடாமையும் ஈற்றடியை யெடுத்து யாதானுமோரிடத்துக்கூட்டி யுச்சரித்துஓசைவேறுபட்டுப் பொருள்வேறுபடாமையுங்காண்க.

செய்யுளடி பலவினையுந் தொகுத்துக்கூறாது மூன்றும்ஒன்றுமாகப் பிரித்ததென்னையெனின் எண்வகைப்பட்டபொருள்கோளும் அவற்றின்விகற்பங்களுமாய பொருள்கோள்களுள் ஒன்று ஒருசெய்யுள் முழுவதூஉம் அமைந்துகிடக்க வேண்டுமென்னும் யாப்புறவின்றி ஒன்றும்பலவும் அமைந்துகிடத்தலினென்க. அவ்வாறமைந்து கிடத்தல் அவ்வப்பொருள்கோட்குக்காட்டிய செய்யுட்கண்ணும் பிறசெய்யுட்கண்ணுங்கண்டுகொள்க. அடிமறித்தலன்றி மாற்றுதலே ஏற்புழியெடுத்துடன் கூட்டுறுமடியவுமென்றதற்கின்றும். அங்ஙனமாக அதனையும்அடிமறிமாற்றென்றது என்னையெனின், மறித்தற்குரிய கொண்டுகூட்டொடு மறித்தற்கும் மாற்றுதற்குமுரிய அடிமறிமாற்றோடுஞ்சார அதனை முதற்கட்கூறி அடியாக மறித்தலுடைமையின் அடிமறிமாற்றின்பாற்படுத்துச் சிலவுறுப்புக்குறைந்தாரையும் மக்களென்றாற்போல அதற்கும் அடிமறிமாற்றெனப் பெயர் தந்து கூறினாரென்க.

செய்யுட்குரிய பொருள்கோளை ஈண்டுக்கூறியதென்னையெனின், செய்யுட்குத் தொடரென்னுங் காரணக்குறிபோந்தது மொழிதொடர்ந்ததாலன்றே; அங்ஙனமாதலின் இதுவும் தொடர்மொழியிலக்கணமேயாமென்க. (கஅ)

மூன்றாவது பொதுவியல் முற்றிற்று.

---

* நாலடி. கூ. † நான்மணி. உகூ.

நான்காவது

# இடையியல்.

## இடைச்சொல்லின் பொதுவிலக்கணம்.

௪௨௦. வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள விசைநிறை யசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் றனித்தியல் பின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.

எ - ன், * "இடையுரி யடுத்து நான்குமாம்" என நிறுத்தமுறையானே இடைச்சொல்லிலக்கணம் இவ்வியலானுணர்த்துவான்றொடங்கி அவை இத்தன்மைய இவ்வியல்பினவென அவற்றின்பொதுவிலக்கணம் உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) எழுவாயுருபுமுதலிய எட்டுவேற்றுமையுருபுகளும், பகுதி விகுதி இடைநிலை யென்னும் தெரிநிலையும் குறிப்புமாகிய வினையுருபுகளும், அன் ஆன்முதலிய சாரியையுருபுகளும், போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், பிறவாறு தத்தமக்குரிய பொருளையுணர்த்திவருவனவும், வேறுபொருளின்றிச் செய்யுளிசை நிறைத்தலே பொருளாகவருவனவும், அசைத்தலே பொருளாகநிற்பனவும், வெளிப்படையின் வரும் இவைபோலாது குறிப்பின் வருவனவுமென்னும் எட்டுவகையினையுடையவாய்த் தனித்துநடத்தலின்றிப் பெயரினகத்தும் வினையினகத்தும் அவற்றின்புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்களாறனுள் ஓரிடத்து ஒன்றேனும் பலவேனும்வந்து அப்பெயர்வினைகட்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்குந்தன்மையது இடைச்சொல்லாம். எ-று.

தெரிநிலைவினையிடைநிலைபோல் ஏனையிடைநிலை சாரியைகட்கு வேறுபொருளின்றேனும் பெயர்வினைகட்கு இன்றியமையாதுவருதலே பெரும்பாலவாதலின் அவற்றின்பொருளே பொருளென்பதுகருதி இசைநிறைஅசைநிலைகளைச் சாரவையாது முதற்கண்வைத்தாரென்க.

பெயரினும் வினையினுமென்ற உம்மையைப் பின்முன் என்பனவற்றோடுங் கூட்டுக.

தனித்துநடத்தலின்றிப் பெயர்வினைகளிடமாக நடத்தலின் இடைச்சொல்லெனக் காரணக்குறிபோந்ததென்று அதன்தன்மைகூறியமுகத்தாற் கூறியவாறு காண்க.

முதனூலின்வழியாக நடக்குநூலை அங்ஙனங்கூறாது வழிநூலென்றாற்போலப் பெயர்வினைகளினிடமாகநடக்குஞ்சொல்லை அங்ஙனங்கூறாது இடைச்சொல்

* நன். சூ. ௨௭௦.

லெனக்கூறினர். அங்ஙனமாயின் இடமென இயற்சொல்லாற்கூறாது இடையெனத்திரிசொல்லாற்கூறியதென்னையெனின், இயற்சொல்லாற்கூறின் இடப்பொருளையுணர்த்துஞ்சொல்லெனப் படுமாதலின் அதனோடு இதற்கு வேற்றுமை தோன்றற்கென்க.

எழுவாயுருபும் விளியுருபும் பெயரும் பெயரதுவிகாரமன்றே, அவற்றையும் இடைச்சொல்லெனக் கூறியதென்னையெனின், வேற்றுமையெனப் பொதுப் படக்கூறினமையானும் * எழுவாயுருபு † எட்டனுருபென்றமையானும், ஆவென்பது தன்னையுணர்த்தின் எழுத்தாயும் பிறபொருளைச்சுட்டுதற்கண்ணே சொல்லாயுநின்றாற்போலப் பெயர் தன்னியல்பின்னில்லாது எழுவாயுருபும் விளியுருபுமாய் அவ்வேற்றுமைப் பொருளுணர்த்தியகாலத்துஇவ்வுருபாகிய காரியங்கள் பெயராகிய காரணங்களிடமாக நடத்தலன்றித் தனித்து நடவாமையானும் அவையும் இடைச்சொல்லேயாமென்க. வினையின்கட்பகுதி பெயரன்றே, அதனை இடைச்சொல்லென்றதென்னையெனின் வினையுருபெனப் பொதுப்படக்கூறினமையானும் பொருளாதியாறும் பெயரும் விகுதிக்குப் பகுதியாகியகாலத்துத் தனித்துநடக்குந்தன்மையின்றி அவ்வினைக்குறிப்பிற்கு அகத்துறுப்பாய் அதனிடமாக நடத்தலானும் தனித்துநடக்குந்தன்மையுளதேற் பகுபதங்களை ஒருமொழியென்னாது தொடர்மொழியெனல் வேண்டுமாதலானும் அதுவும் இடைச்சொல்லேயாமென்க. இவ்வினைக்குறிப்புருபுகளை இடைச்சொல்லெனவே இவை பெயர்ப்பகுபதமாயகாலத்து அதன் பகுதிவிகுதி இடைநிலையுறுப்புக்களும் இடைச்சொல்லேயென்பது தாமே போதருமென்க. தெரிநிலைவினைப்பகுதிக்கட் காலமின்மையின் வினையன்றாய்த் தனித்துநடத்தலின்றி அவ்வினைக்கு அகத்துறுப்பாம் அதனிடமாக நடத்தலின் இடைச்சொல்லேயாமென்க. இதுகருதாது வேற்றுமையுருபென்பதற்கு எழுவாய்விளிகளை யொழித்து இரண்டாவதுமுதலிய ஆறுருபுமேயென்றும் வினையுருபேயென்பதற்குப் பகுதி யிடைநிலைகளை யொழித்து விகுதியொன்றுமேயென்றும் பொருள்கூறுவாருமுளர். அதுநிற்க: எண்வகையுட்டோன்றுதொழிந்தன வருஞ்சூத்திரங்களானுணர்க.

நம்பிவர்தான், நம்பிவா என்புழிப் பெயரினகத்துறுப்பாய் எழுவாயுருபிடைச்சொல்லொன்றும் விளியுருபிடைச்சொல்லொன்றும் வந்தன. தச்சன், தச்சத்தி, முடியினனென்புழிப் பெயரினகத் துறுப்பாய்ப் பகுதி விகுதி இடைநிலை சாரியை இடைச்சொற்கள் வந்தன. வினைக்குறிப்பின் அகத்துறுப்பாய்ப் பல வருவனவுமன்ன. நட, வேறு என்புழித் தெரிநிலைவினையினும் குறிப்புவினையினும் அகத்துறுப்பாய பகுதியிடைச்சொல் ஒன்று வந்தன. இவற்றின்விகுதிக்கு வேறுருபின்மையின் ஒருறுப்பினவாயின. நடந்தான், நடந்தனனென்புழி, தெரிநிலைவினையின் அகத்துறுப்பாகிப் பகுதி விகுதி இடைநிலை சாரியையிடைச்சொற்கள்பல வந்தன. அவன், எவன், என்னோன், ஏனையோன் எ-ம், போல, புரைய எ-ம், சாத்தனென்பான், சாத்தனையினென் எ-ம் இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயராயும் வினையாயும் வினையிலக்கணையாயும் நிற்றலின் இவற்றின் பகுதிவிகுதி முதலியவுமன்ன. "அதுமன்", "அதுமற்றம்ம" எ-ம், ‡ "கொன்னூர்", § "ஒஒ வுவம வுறழ்வின்றி" எ-ம் பெயரினகத்துறுப்பாய்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. பிறவுமன்ன. இவற்றுட்சில ஒரோவழி விகாரப்பட்டு, மன், கொன், என்றற்பாலன மன்னை, கொன்னையென வரு

* நன். சூ. உ௯௫. † நன். சூ. ௩௦௩. ‡ குறுந். கந௮. § கலிவழி. ௩௩.

வனவுமுள. அவையெல்லாம், * "புதியன புகுதலும் வழுவல" என்பதனாற் படுத்துக. (க)

## இடைச்சொற்பொருள்.

சஉக. தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்
பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை
பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள்.

எ - ன், மேல் தத்தம்பொருளவென்றார், அப்பொருளாவன இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலை முதலாக வோதப்பட்ட பதினான்கும் இவைபோல்வன பிறவும் மேல் தத்தம் பொருளவென்ற இடைச்சொற் பொருள்களாம். எ - று.

இன்னனவென்றதனாற் சிலவருமாறு: அக்கொற்றன், எக்கொற்றனென்பன சுட்டுப்பொருளும் வினாப்பொருளுந் தந்தன. நக்கீரர், நப்பாலத்தனென்புழி நகரவிடைச்சொற் சிறப்புப்பொருடந்தது; † "அ ஆ விழந்தானென் றெண்ணப் படும்", "ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினொடு", ‡ "அந்தோ வினையை பட்டனர்", § "அரக்காம்ப னாறும்வா யம்மருங்கிற் கன்னோ, பரற் கான மாற்றின கொல்லோ" என்புழி அஆ, ஆஅ, அந்தோ, அன்னோவென்னு மிடைச்சொற்கள் இரக்குதற் பொருடந்தன. இவையன்றி அதிசயப்பொருளு முள. ‖ "அற்றோ நமயாமை கண்டாரு", ¶ "சேரி தோழிது செலவத் தியற்கையே" என்புழித் தொறு, தோவென்னு மிடைச்சொற்கள் இடப்பன் மைப்பொருள் தந்தன. இனிச்செல்வாளை, இனியெம்மெல்ல என்புழி இனியெ ன்னுமிடைச்சொற் காலப்பொருளும் இடப்பொருளும் முறையே தந்தது. பிற வும் இவ்வாறு தனித்து நடக்கும் பெயர்வினையாகாது வருவனவெல்லாங் கொள்க. (உ)

## ஏகாரவிடைச்சொல்.

சஉஉ. பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே.

எ - ன், வேற்றுமையுருபுமுதலியனவாக்கும் மேலேசொல்லப்பட்டமையின் அவற்றையொழித்து ஏனையவற்றையுணர்த்துவான்றொடங்கி அவற்றுள் ஏகார விடைச்சொல்லிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலைமுதலியபதினான்கும் அவைபோல்வனபிறவுமாகிய பொருள்களுள்ளும் இசைநிறைத்தல் அசைத்தல் குறிப்பு என்னு மூன்றுபொருள் களுள்ளும் பிரிநிலைமுதலிய ஆறுபொருளையுந்தரும் ஏகாரவிடைச்சொல். எ - று.

(வ - று.) அவனே கொண்டானென்பது ஒருகுழுவினின்றும் ஒருவனைப் பிரித்துநிற்றலிற் பிரிநிலையேகாரம்; அவனேகொண்டானென்னும் பொருள்பட வினாவி நிற்றலின் வினா. நிலனே நீரே தீயே வளியேயென்பது நிலனும் நீரும் தீயும் வளியுமென்னும் பொருள்பட எண்ணி நிற்றலின் எண். $ "கடலொடார்ன் றல காடிறந் தோரே" என்புழிச் சொல்லிறுதிக்கண் அசைத்தற்பொருடந்

* நன். சூ. சசுஉ. † நாலடி. கூ. ‡ சீவக. நகஉ.
§ நாலடி. நகூ. ‖ திருக்குறள், ககசப. ¶ சீவக. கஉகூ. $ அகநா. க.

தலின் ஈற்றசை. ஏகாரவசைநிலை முதற்கண் வாராதென்பார் ஈற்றசையென்றார். அவனேகொண்டானென்பது துணிதற்பொருள்தரின் தேற்றம். இத்தேற்றப் பொருள் பிரிநிலைக் கண்ணேயுளதாதலின் இப்பொருளை வேறெடுத்துக்கூறுதல் ஏனைய போற் சிறப்புடைத்தன்றென்பார் இதனைப் பொருட்சிறப்பில்லா ஈற்றசைக்கும் இசைநிறைக்கும் இடையேகூறினார். *"ஏஏ யிவளொருத்தி பேடியோ வென்றார்" என்பது இசைநிறைத்தற்பொருள் தருதலின் இசைநிறை. அவனேகொண்டானென்பது ஓராவழி அவன்கொள்கிலனென எதிர்மறைப் பொருள்தந்து செம்பொருள்தோன்றி வலிந்துகொள்ளப்பட்டதாதலின் "புதியன புகுதலும் வழுவல" என்பதன்பாற் படுத்துக. (௩)

## ஓகாரவிடைச்சொல்.

௪௨௩. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.

எ - ன், ஓகாரவிடைச்சொல்லிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒழியிசைமுதலிய எட்டுப்பொருளையுந்தரும் ஓகாரவிடைச் சொல். எ - று.

(வ - று.) கொளலோகொண்டானென்பது கொண்டுய்யப்போயினனல்லனென்றற்றொடக்கத்து ஒழிந்தசொற்களைத்தருதலின் ஒழியிசை. குற்றியோ மகனோவென்பது வினா. சிறப்பு உயர்வுசிறப்பு,இழிவுசிறப்பென இருவகைத்து. ஓ ஓ பெரியனென்பது உயர்வுசிறப்பு. ஓ ஓ கொடியனென்பது இழிவுசிறப்பு. அவனோகொண்டானென்பது கொண்டிலனென்னும் பொருள்தந்தவழி எதிர்மறை. அலியைநோக்கி, ஆணோ,அதுவுமன்று; பெண்ணோ,அதுவுமன்று என்பது அத்தன்மையின்மை தெரிந்தவழிநிற்றலிற் றெரிநிலை. உறுதியுணராதுகெட்டாரை ஓஒ தமக்கு ஓர்உறுதியுணராரோ என்பது கழிவிரக்கப்பொருள்தருதலிற் கழிவு. "காணிய வம்மினோ கங்குலது நிலையே" என்பது அசைநிலை. அவனோ கொண்டானென்பது பலருணின்றும் ஒருவனைப்பிரித்தமை கருதியவழிப் பிரிநிலை. இப்பொருள் எதிர்மறைக்கண்ணேயுளதாதலின், அசைநிலையின்பின் வைத்தார். (௪)

## என என்று என்னும் இடைச்சொற்கள்.

௪௨௪. வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினு
மெனவெனு மொழிவரு மென்று மற்றே.

எ - ன், எனவெனவும் என்றெனவும் வரும் இடைச்சொல்லிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினைப்பொருண்முதலிய ஆறுபொருளினும் எனவென்னு மிடைச்சொல்லும்வரும்; என்றென்னுமிடைச்சொல்லும் அவ்வாறு வரும். எ-று.

(வ - று.) கொள்ளெனக்கொண்டான்,மைந்தன் பிறந்தானெனத் தந்தை உவந்தானென்பது வினை. ஊரெனப்படுவதுஉறையூர், †"அழுக்கா றெனவொரு பாவி" என்பது பெயர். விண்ணெனவிசைத்தது, ‡"பொள்ளென வாங்கே புறம்வேரார்" என்பது குறிப்பு. ஒல்லெனவொலித்தது, § "நிலையருங்

* சீவக. ௬௫௨.
† திருக்குறள், ௧௬௮.
‡ திருக்குறள், ௪௮௭.
§ புறநா. ௨௪௩.

கட்டத்துத் துடுமெனப் பாய்ந்து'' என்பது இசை. நிலனென நீரெனத் தீயென வளியென வரும் பூதநான்குமுளுருவம் என்பது எண். வெள்ளென விளர்த்தது, மெல்லெனடைந்தது என்பது பண்பு. இங்ஙனம்எண்ணுப்பொருட்குக்காட்டிய பெயர்கள் தனித்துநில்லாதுஎண்ணி அளவைப்பண்புப்பொருள் உணர்த்தலின் அப்பொருள் முதற்கணிறீஇய பெயர்ப்பொருளவாறென்க. என்றென்பதனையுங்கொண்டுளென்றும் என்பதனை முறையே இயையுமாற்றொட்டுக. சுட்டுப்பெயர் விறைப்பெயர்கட்குத் தமக்கென ஒருபொருளின்றிச் சுட்டவும் வினவவும்படும் பொருளாகி ஆறுபெயர்ப்பொருளே பொருளாகவருதல் போல இவ்விரண்டிடைச்சொற்கும் தமக்கென ஒருபொருளின்றி வினைமுதலியவாய் இங்ஙனம்விதந்தவற்றின் பொருளே பொருளாகவருமென்பார், ஆறுபொருளையுந் தருமென்னுது ஆறினும்வருமென்றார். (ரு)

உம்மையிடைச்சொல்.

௪௨௫. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.

எ - ன், உம்மையிடைச்சொல்லிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எதிர்மறைமுதலிய எட்டுப்பொருளையுந்தரும், உம்மையிடைச் சொல். எ - று.

(வ - று.) சொற்றன் வருதற்குமுரியனென்பது எதிர்மறை. * "குற வருமருளுங் குன்று'', இவ்வூர்ப்பூசையும் புலால் தின்னாது என்பது உயர்வு சிறப்பு. பார்ப்பானுங்கள்ளுண்டான், "புலையனும்விரும்பாப் புன்புலால் யாக்கை'' என்பது இழிவுசிறப்பு. பூசையும்புலால்தின்னாதென்பதனை இழிவுசிறப்பென்பாருமுளர். அங்ஙனமாயின் ஒருபொருளினது உயர்வைச்சிறப்பித்தல் இழிவைச்சிறப்பித்தலெனப் பொருள்படாது உயர்ந்தபொருளால் மற்றொன்றைச் சிறப்பித்தல், இழிந்தபொருளான் மற்றொன்றைச் சிறப்பித்தலெனப்பொருள் படும். அவ்வாறு பொருள்படின்,ஓகாரப்பொருளாய் வரும் உயர்வுசிறப்பிற்கும் இழிவுசிறப்பிற்குமாகாமையின் அது பொருந்தாதென்க. இனிஇவ்வும்மைப் பொருளைக் குன்றமுதலியவற்றிற்கொள்ளாது குறவர்முதலியவற்றிற்கொண்டு பூசையுமென்பதனை இழிவுசிறப்பும்மையெனக்கோடலுமொன்று. இங்ஙனம் இழிவுசிறப்பென்பதற்கு இழிவினுட்சிறந்த இழிவெனப்பொருள்கூறுக. உயர்வு சிறப்பும் அது. பூசைக்குப் புலால்தின்னாதல் இழிவும் தின்னாமைசிறப்புமாகப் பொருள்கொளின், குறவர்க்கு மருளுதல சிறப்பாகவேண்டுமாதலின் அது பொருந்தாதென்க. பத்தாயினுமெட்டாயினுங்கொடு என்பது ஐயம். சாத்தனும் வந்தானென்பது கொற்றன் வந்ததனை நீயெனப் பொருள்படின் இறந்ததுதழீஇய வெச்சவும்மை. கொற்றனும் வருவானெனப் பொருள்படின் எதிரதுதழீஇய வெச்சவும்மை. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், எல்லாரும்வந்தாரென்பது முற்றும்மை. சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தாரென்பது எண்ணும்மை. ஆணுமன்று பெண்ணுமன்று என்பது தெரிநிலையும்மை; தெரிநிலையோகாரம்போற் பொருளுணர்த்துகவென்க. நெடியனுமாயினான், பாலுமாயிற்று என்புழி அவனேவலியனுமாயினான், அதுவேமருந்துமாயிற்றெனப் பொருள்படின் ஆக்கம். (௬)

* மலைபடு. உ௭௫.

## முற்றும்மைக்குச் சிறப்புவிதி.

சஉகூ. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

எ - ன், முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றும்மை ஒரோவிடங்களில் எச்சவும்மையுமாம். எ - று.

(வ - று.) *"ஆறுந்தருவது வினையே" என்புழி ஐந்துந்தருவதுவினையே யென்றும், எல்லாரும் இதுசெய்யாரென்புழிச் சிலர் இதுசெய்வாரென்றும் முற்றும்மைப்பொருளும் எச்சவும்மைப்பொருளும் ஒருங்குதருதல்காண்க. இங்ஙனந்தருதலின் எச்சமுமென இறந்ததுதழீஇயவெச்சவும்மையாற் கூறினார். ()

## எச்சவும்மைக்காவதோருவிதி.

சஉஎ. செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை.

எ - ன், எச்சவும்மைக்கு ஆவதொருவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எச்சவும்மை செவ்வெண்ணின்கண் வருமாயின் ஈற்றின்கண் வரும். எ - று.

(வ - று.) †செய்பவன் கருவி நிலஞ் செயல் காலஞ் செய்பொருளுந் தருஞ்சிறத்து வினையே என்புழி இவற்றுட் சிலவுந்தருஞ்சிறத்ததுவினையே யெனவும், கல்வி செல்வம் ஒழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளரென்புழி இவற்றுட் சிலபெறுவாருமுளரெனவும் பொருள்படுதல் காண்க. (அ)

## சில எண்ணிடைச்சொற்களுக்கிலக்கணம்.

சஉஅ. பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்
ணான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ
டிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும்.

எ - ன், முன்னர் எடுத்துவிதந்தும் விதவாதும் வரும் சிலஎண்ணிடைச் சொற்கட்கு ஆவதோரிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்களினிடையே எண்ணிடைச்சொல்தொக்கு நிற்பவருஞ் செவ்வெண்ணும், பெயரொடுதொகாதுவரும் ஏகாரவெண்ணும், என்றாவெண்ணும், எனாவெண்ணுமாகிய நான்கும் தொகைபெற்று நடக்கும்; உம்மையெண்ணும், என்றெண்ணும், எனவெண்ணும், ஒடுவெண்ணும் ஆகிய இந்நான்கெண்ணும் தொகை பெற்றும் பெறாதும்நடக்கும். எ - று.

பெயரெண்ணென்னாது செவ்வெண்ணென்றதனால் அஃது எண்ணிடைச் சொற்றொக்கதொகையில்லையென்பதூஉம், அங்ஙனமாதலின் அச்செவ்வெண்ணும் ஏகார முதலிய எண்ணிடைச்சொற்களோடு உடன்கூறினரென்பதூஉம் பெற்றாம்.

(வ - று.) சாத்தன் கொற்றன் தேவன் பூதன் நால்வரும்வந்தார், சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும்வந்தார், சாத்தனென்றா கொற்றனென்றா தேவனென்றா பூதனென்றா நால்வரும்வந்தார், சாத்தனெனாக் கொற்றனெனாத் தேவனெனாப் பூதனெனா நால்வரும்வந்தார்: இவை தொகைபெற்றே வந்தன. பெயர்ச்செவ்வெண் தொகைபெறுதற்கு இச்சூத்திரத்தைக் காட்டினு

---

* நன். சூ. ௩உ௦.  † நன். சூ. ௩உ௦.

மமையம். இவைமுக்கிடத்து ஓரோவழித் தொகைபெறுதுவரின் இசையெச்சமாகவும் செய்யுட்கட்டொகை பெறுதுவரிற் றொகக்கும் வழி தொகுத்தலாயமையின் அவ்விகாரமாகவும் அன்றேல் இசையெச்சமாகவுங்கொள்க. சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் நால்வரும்வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வரும்வந்தார், சாத்தனெனக் கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வருளர், சாத்தனொடு கொற்றனொடு தேவனொடு பூதனொடு நால்வரவன்னமர்கர் எ-ம், சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தார், நிலனென்று நீரென்று தீயென்று காற்றென்று அளவறு காயமென்றாகியவுலகம், நிலனென நீரெனத் தீயெனக் காற்றென அளவறுகாயமென ஆகியவுலகம், நிலனொடு நீரொடு தீயொடு காற்றொடு அளவறுகாயமொடாகியபூதம் எ - ம் இவை தொகைபெற்றும் பெறாதும்வந்தன. (கூ)

## சில எண்ணிடைச்சொற்களுக்குச் சிறப்புவிதி.

சஉகூ. என்று மெனவு மொடுவு மோரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.

எ - ன், எண்ணிடைச்சொல்லுட் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இம்மூன்றெண்ணும் எண்ணும்பொருடோறும் நிற்றலேயன்றி ஓரிடத்துநின்றும் பிரிந்து எண்ணும் பொருடோறும் பொருந்தும். எ - று.

(வ - று.) * "வினைபகை யென்றிரண்டி னெச்ச நினைபுங்காற்,றீயெச்சம் போலத் தெறும்"; † "பகைபாவ மச்சம் பழியென நான்கு, மிகவாவா மில்லிறப்பான் கண்", ‡ "பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து, மிருடீர வெண்ணிச் செயல்" எனவரும்.

எண்ணும்பொருடொறும் தனித்தனி நிற்றலினும் ஓரோவழிநின்று பிரிதல் இம்மூன்றெண்ணிற்கும் அமைந்துகிடந்தனவாதலின் எண்டுக்கூறப்பட்டவெனவே ஏனையெண்கட்கு எண்ணும்பொருடொறு நிற்குநிலையே சிறந்தனவென்பதூஉம், ஓரோவழிநின்றுபிரிதல் வலிந்துகொளற்பாலனவென்பதூஉம், அவை எண்டமையாது தீபகமென்னும் அணியிலக்கணத்தின்பாற் படுமென்பதூஉம் பெற்றும். (சo)

## பெயரோடுவரும் இடைச்சோல் வினையோடுவருதல்.

சங0. வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன.

எ - ன், மேற் பெயரொடுவந்த எண்ணிடைச்சொற்கள் வினையொடுவருமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏற்பனவாகிய எண்ணிடைச்சொற்கள் வினையொடுவரினும் மேற் பெயரொடுவந்தாற்போலும். எ - று.

ஏற்பனவெனவே வினையொடு ஏனையவெண் வருதலுந் தொகைபெறுதலும் இல்லையென்க.

(வ - று.) "மண்டல மழுங்க மலைநிறங் கிளர, வண்டின மலர்பரந் தூதகிசையே, கண்டற் கானற் குருகின மொலிப்ப" என்பது செவ்வெண். கற்றும்

* திருக்குறள், ௬௭௪. † திருக்குறள், ௧௪௬. ‡ திருக்குறள், ௬௭௫.

கேட்டும் கற்பிளகடந்தானென்பது உம்மையெண். உண்ணவென்று உடுக்க வென்று பூசவென்று முடிக்கவென்று வந்தானென்பது என்றெண். உண்ண வென உடுக்கவெனப் பூசவென முடிக்கவென வந்தானென்பது எனவெண். உண்ண உடுக்கப் பூச முடிக்கவென்றுவந்தான், உண்ண உடுக்கப் பூச முடிக்க வெனவந்தான், "நன்னிதி பெருக நாடொறும் வாழ்கவென், னுன்னுமிவ் வேட் கை யொழிந்தன ரிலரே" என்பன என்றும் எனவும் ஒரோவழிநின்றும் பிரிந் தன. பிறவற்றுள்ளும் ஏற்பனவந்தவழிக்காண்க.

சாத்தன்வந்தான், கொற்றன்வந்தான், இருவரும்வந்தமையாற் கலியாணம் பொலிந்ததென வினைச்செவ்வெண் தொகைபெற்றதென்பாருமுளர். தொகைச் சொற்பெயராதலின் அறுவகைப்பெயர்களொடுபொருந்தி இருபெயரொட்டா மன்றி வினையொடுபொருந்தாமையானும் இங்ஙனம் இருவரென்னுந்தொகை சாத்தன்கொற்றனாகிய இருவரெனப் பெயர்த்தொகையாதலானும் அது பொருந் தாதென்க. (கக)

## தில்லென்னுமிடைச்சொல்.

சஉக. விழைவே கால மொழியிசை தில்லே.

எ - ன், தில்லென்னுமிடைச்சொல்லின் இலக்கணம் உணர்த்துதல் நுத லிற்று.

(இ-ள்,) இம்மூன்றுபொருளையுந் தரும், தில்லென்னுமிடைச்சொல். எ-று.

(வ - று.) * "வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப், பெறுகதில் லம்மயானே" என்பது பெறுதல்வேட்கையை உணர்த்தலின் விழைவு. * "பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே" என்பது பெற்றகாலத்து அறிகவெனக் காலத்தை யுணர்த்தலிற் காலம். † "வருகதில் லம்மவெஞ் சேரி சேர" என்பது வந்தால் ஒன்று செய்வலென்னுஞ்சொல் ஒழிந்துநிற்றலின் ஒழி யிசை. (கஉ)

## மன்னேன்னும் இடைச்சொல்.

சஉஉ. மன்னே யசைநிலை யொழியிசை யாக்கம்
கழிவு மிகுதி நிலைபே றாகும்.

எ - ன், மன்னென்னும் இடைச்சொல்லிலக்கண முணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) இவ்வாறு பொருளையுந்தரும், மன்னெனுமிடைச்சொல். எ-று.

(வ - று.) "அதுமற் கொண்கன் றேரே" என்பது அசைநிலை. "கூரிய தோர் வாண்மன்" என்புழி அசனைக் காந்தாது அறத் துணித்ததென்னுஞ் சொல் ஒழியநின்றமையின் ஒழியிசை. பெரியன் மன் என்புழி அவனேவலியனுமாயினு னெனப்பொருடருதலின் ஆக்கம். ‡ "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே" என் புழி இப்பொழுது அவனிறத்தலின் எமக்கீதல்கழிந்ததெனப் பொருள்தருதலிற் கழிவு. "எந்தைபெரும்கருணையமன்" என்புழி மிகுதியும் அருளுமெனப்பொருள் தருதலின் மிகுதி. § "மன்னுலகத்து மன்னிய புரைமே" என்புழி இவ்வி டைச் சொல்லசையாகப்பிறந்தவினையுள் மன்னென்பது நிலையினையுணர்த்தினமை யின் நிலைபேறு. (கங)

---

* குறுந். கச. † அகநா. உஎகூ. ‡ புறநா. உகரு. § கலி. ருசு.

## மற்றென்னு மிடைச்சொல்.

சரு௩. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.

எ - ன், மற்றென்னு மிடைச்சொல்லிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இம்மூன்று பொருளையுந் தரும், மற்றென்னு மிடைச்சொல். எ-று.

(வ - று.) * "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது" என்பது விரைந்தறிவா மென்னும் வினையை யொழித்து விரையாதறிவா மென்னும் வினையைத் தந்து நின்றமையின் வினைமாற்று. † "மற்றமகள் கண்டருளிச செய்யமால ரடிக்கீழ்" என்பது அசைநிலை. ‡ "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" என்பது ஊழல்லதொன்றென்னும் பொருள் தந்தமையிற் பிறிது. (கச)

சரு௪. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

எ - ன், மேலதற்கு ஒருபுறனடையுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மற்றென்னு மிடைச்சொற்பொருள் மூன்றனுள் மற்றைய தென்னும் பொருளவாகிய வினைமாற்றும் பிறிதும் முன்னனைக்கருதியதற்கினமாகிய வினைமாற்றும் இனமாகியபிறிதுமாமன்றி வேறுவினைமாற்றும் வேறுபிறிதும் அல்லவாம். எ - று.

மேற்காட்டிய உதாரணத்துள் நல்வினையை விரைந்தறிவாமெனக்கருதிய தற்கு விரையாதறிவாமெனவும், ஊழொன்றெனக் கருதியதற்கு ஊழல்லதொன்றெனவும் இனம்வந்தவாறு காண்க.

வேறுபிறிதாவதென்னையெனின் இரண்டுமணியுளவழி ஒன்றுகண்டான் மற்றொன்று காணவேண்டுமென்றுழியின் மற்றொன்றென்பதற்கு அதற்கினமாகியதொருமணியென்றே பொருள்கொள்ளாது ஆடையணியென்றபொருள்கோடலென்க. வினைமாற்றும் இவ்வாறேகாண்க. மேலைச்சூத்திரத்துள் வினைமாற்றெனவும் பிறிதெனவும் பொதுப்படக்கூறினமையின் இச்சூத்திரத்தார் புறனடைகொடுத்துக்காத்தாரென்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி மற்றையதென்பதனை ஓர்இடைச்சொல்லாகவைத்து அச்சொல் அன்னனைக்கருதிய பொருட்கு இனமாகிய பொருளைத் தருமெனப்பொருள்கூறுவாருமுளர். மற்றையதென்பது இடைச்சொல்லடியாகப்பிறந்தபெயருஞ் சினைக்குறிப்புமாமாதலானும், விகுதியொடுகூடினரேனும் பகுதிப்பட்ட மற்றையென்னும் ஐகாரவீற்றிடைச்சொற்பொருள் கூறினரேனின் மன்ன மன்னே, சொன் சொன்னை யெனநின்றாற்போல மற்று மற்றை யென இறுதிவிகாரமாய் நின்றதன்றி இதற்கென வேறுபொருளின்மையானும்; அதனேறி இதற்கு வேற்றுமை இனத்தைப்போதாதலெனப் பொருள்கொள்ளின் மற்றென்பது இனத்தையும் இனமல்லதையுந்தருமெனப் பொருள்படுமாதலானும் எல்லாவற்றுக்கும் இனமாயுள்ளதே வினைமாற்றும்பிறிதுமாய்வருமன்றி இனமல்லது ஒருவாற்றானும்வாராமையானும் அது பொருந்தாதென்க. (கரு)

* நாலடி. கக. † சீவக. கஅஎரு. ‡ திருக்குறள், ருஅ0.

## கொல்லென்னும் இடைச்சொல்.

*சஙடு. கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.*

எ - ன், கொல்லென்னுமிடைச்சொல்லிலக்கணம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) கொல்லென்பது இவ்விரண்டுபொருளையுந்தருஞ்சொல்லாம். எ - று.

(வ - று.) இவ்வுருக் குற்றிகொல், மகன்கொல் என்பது குற்றியோ மகனோவென்னும் பொருள்பட வருதலின் ஐயம். * "பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர், வருவர்கொல் வயங்கிழாஅய்" என்பது அசைநிலை. (கசு)

## ஓடு, தெய்யவென்னு மிடைச்சொற்கள்.

*சஙசு. ஓடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.*

எ-ன், ஓடுவெனவும் தெய்யவெனவும் வருமிடைச்சொல்லிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டும் இசைநிறைத்தற்பொருளைத்தருஞ்சொற்களாம். எ - று.

(வ - று.) † "முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர், விதைக்குறு வட்டி போதொடு பொதுள" எ - ம், "சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்த்தே" எ - ம் வரும். (கஎ)

## அந்தில், ஆங்குஎன்னு மிடைச்சொற்கள்.

*சஙஎ. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.*

எ - ன், அந்திலெனவும் ஆங்கெனவும் வருமிடைச்சொல்லி லக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இவ்விரண்டிடைச்சொல்லும் அசைநிலைப்பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும். எ - று.

(வ-று.) ‡ "அந்திற் கழலினன் கச்சினன்" என்பது அசைநிலை. § "வருமே சேயிழை யந்திற் கொழுநற் காணிய" என்பது அவ்விடத்தென்னும் பொருடருதலின் இடம். ‖ "ஆங்கத் திறனல்ல யாங்கழற" என்பது அசைநிலை. இதனுள் ஆங்கென்னுமசைநிலை ஆங்கவென இறுதிவிகாரமாய்நின்றது. ¶ "ஆங்காங் காயினுமாக" என்பது இடம். (கஅ)

## அம்மஎன்னு மிடைச்சொல்.

*சஙஅ. அம்ம வுரையசை கேண்மினென் றாகும்.*

எ - ன், அம்மவென்னுமிடைச்சொல்லிலக்கணமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அம்மவென்பது உரையசைப்பொருளதாயும், ஒன்றுசொல்வன் கேண்மினென்னும் ஏவற்பொருளதாயும்வரும். எ - று.

---

* கலி. கக. † குறுந். கடுரு. ‡ அகநா. எசு.
§ குறுந். உகு௬. ‖ கலி. அசு. ¶ புறநா. உரு௦; பி-ம்.

(வ - று.) "அதுமற்றம்ம" என்பது உரையசை. இது செய்யுட்கண்வரினும் அச்செய்யுளின் பொருட்டன்றித் தானடைந்த சொல்லின்பொருட்டுவருதலின் உரையசையாயிற்று. * "அம்ம வாழி தோழி" என்பது ஒன்றுசொல்லுவன்கேளென்னும் ஏவற்பொருள்தந்தது. (௧௯)

## மாவென்னு மிடைச்சொல்.

௪௩௯. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

எ - ன், மாவென்னுமிடைச்சொல்லிலக்கணமுணர்த்துதலுதலிற்று.

(இ - ள்.) மாவென்னுஞ்சொல் வியங்கோளின்கண்வரும் அசைச்சொல்லாம். எ - று.

(வ - று.) "மாயக் கடவுட் குயர்கமா வலனே", "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கையோனே" எனவரும். (௨௦)

## முன்னிலை யசைச்சொற்கள்.

௪௪௦. மியாயிக மோமதி யத்தை யித்தை
வாழிய மாளவீ யாழமுன் னிலையசை.

எ - ன், மியாமுதலிய இடைச்சொற்களின் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனங்கூறிய பத்திடைச்சொற்களும் முன்னிலைக்கண் வரும் அசைநிலைகளாம். எ - று.

(வ - று.) "சிலையயன் செழுந்தழையன் சென்மியா வென்று மலையகலான் வாடி வரும்" எ-ம், "தண்டுறை யூரயாங் காணிக வெனவே" எ-ம், †"காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" எ - ம், "சென்மதி பெரும" எ - ம், ‡"மெல்லியற் குறுமக ளுள்ளிச்செல் வத்தை" எ - ம், § "வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை" எ - ம், "காணியவா வாழிய மலைச்சாரல்" எ - ம், "சிறிதுதவிர்ந் தீக மாளநின் பரிசில ருய்ம்மார்" ‖ "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே" எ - ம், ¶"நீயே செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழ" எ - ம் முறையேகாண்க. (௨௧)

## எல்லாவிடத்தும் வரும் அசைச்சொற்கள்.

௪௪௧. யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்
சின்குரை யோரும் போலு மிருந்திட்
டன்றாந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.

எ - ன், யாமுதலிய இடைச்சொற்களி னிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருபதிடைச்சொல்லும் முன்னிலையபோலாது எல்லாவிடத்திலும் எல்லாச்சொற்களினும்வரும் அசைச்சொல்லாம். எ - று.

விதவாமையின் எல்லாவிடத்திலும் எல்லாச்சொல்லினும் வருமென்பது பெற்றாம்.

* நற். ௧௫௪. † குறுந். ௨. ‡ புறநா. ௧௯௬.
§ கலி. ௪௦. ‖ அகநா. ௪௬. ¶ கலி. எ.

ஐந்தாவது

# உ ரி யி ய ல்.

## உரிச்சொல்லின் பொதுவிலக்கணம்.

சசஉ. பலவகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல்.

எ - ன், நிறுத்தமுறையானே உரிச்சொல்லிலக்கணம் இவ்வியலானுணர்த்துவான் றொடங்கி அவற்றின் பொதுவிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குணப்பண்பும் தொழிற்பண்புமாகிய இரண்டனுளடங்கும் பலவேறுவகைப்பட்ட பண்புகளையுமுணர்த்தும் பெயராகி அங்ஙனமுணர்த்துழி ஒருசொல் ஒருகுணத்தையுணர்த்துவனவும் பலகுணத்தையுணர்த்துவனவுமாய் வினைப்பெயர்களைவிட்டு நீங்காவாய்ச் செய்யுட்குரியனவாய்ப் பொருட்குஉரிமை பூண்டுவருவன உரிச்சொல்லாம். எ - று.

இவ்வாறுவருதல் மேற்காட்டுமுதாரணங்களுட்காண்க.

இவையும் பண்புப்பெயராயினும் ஏனைப்பெயர்வினைகளை விட்டுநீங்காமையின் வேறோதப்பட்டனவென்பதூஉம், செய்யுட்குரியனவாதலின் இவற்றிற்கு உரிச்சொல்லெனக் காரணக்குறிபோந்ததென்பதூஉம் இவற்றினிலக்கணங்கூறியமுகத்தானுணர்த்தியவாறுகாண்க. (க)

## ப ண் பு இ ஃ தெ ன் ப து.

சசந. உயிருயி ரில்லதாம் பொருட்குணம் பண்பே.

எ - ன், மேற்பண்பென்றார் அஃது இஃதென்பதுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிராகியபொருளும் உயிரில்லாதபொருளுமென இருவகையுளடங்கும் உலகத்துப்பொருள்களின் குணங்கள் பண்பாம். எ - று.

கடவுட்பொருளை யொழித்தார், அதற்கு ஒரு குணமுமின்மையானும் உண்டேற் சுட்டப்பட்டு உலகப்பொருளாமாதலானுமென்க. (உ)

## உ யி ர் ப் பொ ரு ள்.

சசச. மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்
ஓரறி வாதியா வுயிரைந் தாகும்.

எ - ன், மேல் உயிராகியபொருளென்றார், அவையிவையெனத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இங்ஙனம் மெய்ம்முதலாகவுடைய ஐம்பொறிகளானும் பரிசம் இரதம் கந்தம் உருவம் சத்தமென்னும் ஐம்புலன்களையுமுணருங்கால் மெய்யாற் பரிசத்தையுணருமுணர்ச்சியாகிய முதலாகக் கீழ்ப்போன உணர்ச்சியுங் கா

ண்டு மேல்வரும்புலன்களை ஒவ்வொன்றாகவுணர்தலின் ஓரறிவுயிர்முதலாக ஐந்தாம், அவ்வுயிர். எ - று. (௩)

## ஓரறிவுயிர்.

சசரு. புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்.

எ - ன், மேற்கூறிய உயிர்களுள் ஓரறிவுயிர் இவையெனவுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) புல்லும் மரமுமுதலியன மெய்யாற் பரிசத்தையறியும் ஓரறிவுயிர்களாம். எ - று (௪)

## ஈரறிவுயிர்.

சசசு. முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்.

எ - ன், ஈரறிவுயிர் இவையெனவுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பியும் சங்குமுதலியன கீழ்ப்போன மெய்யறிவேயன்றி நாவால் இரதத்தையுமறியுமறிவோடு ஈரறிவுயிர்களாம். எ - று. (ரு)

## மூவறிவுயிர்.

சசஎ. சிதலெறும்பு மாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.

எ - ன், மூவறிவுயிரிவையெனவுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கறையானும் எறும்புமுதலியன கீழ்ப்போன இரண்டறிவுகளேயன்றி மூக்காற் கந்தத்தையுமறியுமறிவினொடு மூவறிவுயிர்களாம். எ-று.
மேலொடுவை ஈண்டும் வருவித்துக்கொள்க. (சு)

## நாலறிவுயிர்.

சசஅ. தும்பிவண் டாதிகண் ணறிவினா லறிவுயிர்.

எ - ன், நாலறிவுயிரிவையெனவுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தும்பியும் வண்டுமுதலிய கீழ்ப்போனமூன்றறிவேயன்றிக் கண்ணால் உருவத்தையுமறியுமறிவினொடு நாலறிவுயிர்களாம். எ - று. (எ)

## ஐயறிவுயிர்.

சசகூ. வானவர் மக்க ணரகர் விலங்குபுள்
ஆதி செவியறிவொ டையறி வுயிரே.

எ - ன், ஐயறிவுயிர் இவையெனவுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வானவரும் மக்களும் நரகரும் விலங்கும் புள்ளுமுதலியன கீழ்ப்போன நாலறிவேயன்றிச் செவியாற் சத்தத்தையுமறியுமறிவினோடு ஐயறிவுயிர்களாம். எ - று.

சித்துப்பொருள் சடப்பொருளென்பார் உயிருயிரில்லதாம் பொருளெனக் கூறியவாறும் சித்தாகிய உயிரறிவு சடமாகிய உடலொடுகூடியவழியன்றி நிகழாமையாலும் அந்நிகழ்ச்சியைக் கண்டல்லது உயிருண்டென்பதூஉம் அதனறிவுண்டென்பதூஉந்தோன்றாமையாலும் உயிரைப் பிரித்தோதாது உடலொடு கூட்டிப், "புன்மரமுதல" என முறையேகூறியவாறும், அவ்வுயிரறிவு உடலொடுகூடியவழி ஐம்பொறியானும் ஐம்புலனிகழ்தலின் ஐயறிவெனக்கூறியவா

றும், பொறியும்எல்லாவுடற்கண்ணும் ஒருங்குநில்லாது இங்ஙனங்கூறியமுறை யே நின்றுஅறிவைநிகழ்த்தலின் உயிர்கள்பலவாயினும் அறியும்வகையான் உயிர் ஐந்தெனக்கூறியவாறுங்காண்க. (அ)

உயிரில்லாதபொருள்.

சஙு0. உணர்விய லாமுயி ரொன்று மொழித்த
உடன்முத லனைத்து முயிரில் பொருளே.

எ - ன், உயிரில்பொருளாவன இவையென உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவுமயமாம் உயிரொன்றுமேயன்றி அவ்வுடம்புமுதலிய உலகத்துப்பொருள்களெல்லாம் உயிரில்லாதபொருள்களாம். எ - று.

முன்னர் உயிர்மாத்திரையேகூறலார் உடம்பொடுகூட்டிக்கூறினரன்றி உடம்பையும்உளப்படுத்தி உயிர்ப்பொருளென்றாரல்லரென்பது இதனானுணர்க.

புறனடை.

சஙுக. ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர்.

எ - ன், மேலதற்கு ஒருபுறனடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பசுவுடம்பெடுத்துழித் தன்கன்றினுக்கிரங்கி நன்கிழைத்தஉயிர் அவ்வுடம்புநீங்கிப் புலியுடம்பெடுத்துழி இரங்காது அக்கன்றினுக்கேதீங்கிழைக்குமாதலின் எவ்வுயிர் எவ்வுடம்பெடுத்ததோ அவ்வுடம்பின் மயமாய்நிற்கும் ஒற்றுமைநயங்கருதியவழி ஒன்றுபோற்றோன்றுமாயினும் உயிர் சித்தாயும் உடம்புசடமாயுநிற்கும் வேற்றுமைநயமாகிய உண்மைகருதியவழி அவ்விரண்டும் தம்முள் வேறுமாதலின் உயிரொடுநின்றகாலத்தும் அவ்வுடம்பு உயிரில்பொருளென்றறிக. எ - று. (க0)

உயிர்ப்பொருள்களின் குணப்பண்பு.

சஙுஉ. அறிவரு ளாசை யச்ச மான
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்.

எ - ன், உயிரின்குணமென்றார், அவை இவையெனவுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவுமுதலிய முப்பத்திரண்டும் இவைபோல்வனபிறவும் உடலொடுகூடிய உயிர்க்குணமாம். எ - று.

உடலொடுகூடாவழி உயிர்க்குணம்சார்ந்தோன்றுமென்பார் உடல்கொளுயிர்க்குணமென்றார். பின்வருவதுமது. (கக)

## உயிர்ப்பொருள்களின் தொழிற்பண்பு.

சஙரு. துய்த்த றுஞ்ச றொழுத லணிதல்
உய்த்த லாதி யுடலுயிர்த் தொழிற்குணம்.

எ - ன், உயிரின்தொழிற்குணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐம்புலனையுநுகர்தன்முதலிய இவ்வைந்தும் இவைபோல்வன பிறவும் உடலொடுகூடிய உயிரின்றொழிற்குணங்களாம். எ - று. (கஉ)

## உயிரில்பொருளின் குணப்பண்பு.

சருச. பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட் டுயிரில் பொருட்குணம்.

எ - ன், உயிரில்லாதபொருளின்குணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வட்டம் இருகோணம் முக்கோணம் சதுரமுதலிய பலவகை வடிவும், நற்கந்தம் துர்க்கந்தமென்னும் இருநாற்றமும், வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமையென்னும் ஐந்துவண்ணமும், கைப்புப் புளிப்புத் துவர்ப்பு உவர்ப்புக் கார்ப்பு இனிப்பென்னும்ஆறிரதமும், வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்மை சீர்மை இழுமெனல் சருச்சரையென்னும் எட்டு ஊறும் உயிரில்லாதபொருள்களின் குணங்களாம். எ - று. (கரு)

## இருபொருளுக்கும்பொதுவான தொழிற்பண்பு.

சருரு. தோன்றன் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்க லடைத னடுங்க லிசைத்தல்
ஈத லின்னன விருபொருட் டொழிற்குணம்.

எ - ன், உயிரில்பொருட்கேயுரிய தொழிற்குணம்அருகிக்கிடத்தலின் அதனையொழித்துஅவ்விருபொருட்கும் பொதுவான தொழிற்குணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தோன்றன்முதலிய ஒன்பதும் இவைபோல்வன பிறவும் உயிர்ப்பொருள் உயிரில்பொருளென்னுமிரண்டற்கும் பொதுவான தொழிற்குணங்களாம். எ - று.

(வ - று.) உயிர்தோன்றிமறைந்தது, உடல்தோன்றிமறைந்தது, நெருப்புத்தோன்றிமறைந்ததென இத்தொடக்கத்தனவெல்லாம் இருபொருட்கும் பொதுவாகிய தொழிற்குணமாதல்காண்க. (கச)

## ஒருகுணந்தழுவிய உரிச்சொல்.

சருசா. சால வுறுதவ நனிகூர் கழிமிகல்.

எ - ன், பலவகைப்பண்பென்றார், அவை இவையென இதுகாறுமுணர்த்தி அப்பண்புகளுள் ஒருகுணம் பலகுணந்தழுவிவருமென்னுமுரிச்சொற்கள் இவையெனவுணர்த்துவான் தொடங்கி அவற்றுள் ஒருகுணந்தழுவிய உரிச்சொல்லுட் சில உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) சாலவென்பதுமுதலாகக் கழியென்பதீறாகக்கூறியஉரிச்சொல் மிகுதியாகிய ஒருகுணத்தையுணர்த்துஞ் சொற்களாம், எ - று.

(வ - று.) "பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி", * "உறுவளி தூக்கு முயர்சினை மாவின்", † "தவச்சேய் நாட்டா ராயினும்", ‡ "கனிபே தையே நயனில் கூற்றம்", § "பொறைதில்லா நோய்கூரப் புல்லென்ற நுதலிவள்", ‖ "சினனே காமங் கழிகண் ணோட்டம்" என முறையே காண்க. இவற்றுட் சாலவென்பது சாலென்னுமுரிச்சொல் யாமடியாகப்பிறந்த வினையெச்சக் குறிப்பு. சாலப்பலவாமெனா ஆமென்னும் வினைப்பயனிலை தொக்குநின்றது.

இப்பண்படிகளைநோக்கிப் பல்வகைப்பண்புப்பகர்பெயராகி யென்றார்.

சாலெனப் பண்படியாகச்சூத்திரஞ்செய்யாது சாலவென வினையெச்சக் குறிப்பாகச்செய்தல் அவ்வுரிப்பெயரடியாக வினைவிகற்பங்களெல்லாம்பிறக்குமென்பதுதோன்ற உடம்படுபுணர்த்தலாமென்க. அவையெல்லாம் வந்தவழிக் காண்க. (கரு)

## பலகுணந்தழுவிய உரிச்சொல்.

சருஎ. கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்க மச்சஞ் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை யார்த்தல்
வரைவே மன்றல் கரிப்பி னாகும்.

எ - ன், பலகுணந்தழுவிய உரிச்சொல்லுள் ஒன்றுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கடியென்னுமுரிச்சொல் காப்புமுதலிய பதின்மூன்றுகுணத்தையும் உணர்த்தும். எ - று.

(வ - று.) ¶ "ஒண்சுடர் நல்லி லருங்கடி நீவி" என்பது காப்பு. "கடி நுனைப் பகழி" என்பது கூர்மை. $ "கடி மாலை சூடி" என்பது நாற்றம். ** "கண்ணாடி யன்ன கடிமார்பன்" என்பது விளக்கம். "கடியர மகளிர்க்கே கைவிளக்காகி" என்பது அச்சம். "கடிமலர் பிசைபூத்துக் கம்புளோ டன்ன மார்க்கும்" என்பது சிறப்பு. †† "எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சாமின்" என்பது விரைவு. ‡‡ "கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்" என்பது மிகுதி. இது புதிதுண்கடவுளென்றுமாம். "கடிமுரசு" என்பது ஆர்த்தல். §§ "கடித்துக் கரும்பினைக் கண்டகர" என்பது வரைவு. "கடிவினை முடிகென" என்பது மன்றல். "கடிமிளகுதின்ற கல்லா மந்தி" என்பது கரிப்பு. (கசு)

## ஒருகுணந்தழுவிய உரிச்சொல்.

சருஅ. மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப் புகறன்மொழி கிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே.

எ - ன், இதுவும் ஒருகுணந்தழுவியவுரிச்சொல்லுட் சிலவுணர்த்துதல் நுதலிற்று.

சாலவுறுதவவென்பதனைச் சாரவையாது ஈண்டுக்கூறியது, இவைஒலிப் பண்பையுணர்த்தி ஏனைப்பெயர்வினைகளை ஒருவாதுநடத்தலின் அத்துணைச் சிறப்பினவன்றி ஓரோவழி வருவிடைக்குமென்பது தோன்றற்கென்க.

---

* கலி. அச. † நற். ககரு. ‡ புறநா. உஉஎ. § கலி. ந.
‖ பதிற். உஉ. ¶ அகநா. எ. $ சீவக. கருஎச. ** சீவக. உநஉஎ.
†† புறநா. கூ. ‡‡ குறுந். கயரு. §§ நாலடி. கருகூ.

(இ - ள்.) மாற்றமுதல் இயம்பலீறாகக்கூறிய பதினாறும் சொல்லென்னும் ஒருகுணத்தையுணர்த்துமுரிச்சொற்களாம். எ - று.

(வ - று.) * "கோதைவர்வாய் மாற்ற முணர்ந்து", † "இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல", ‡ "தொகுஞ்சொலாமை செப்ப லரிதேன்", § "உரைப்பா ருரைப்பவை யெல்லாம்", || "அளபெடை நாலி னுள்ளறை மூற்றிய", ¶ "அஞ்சொற்பெரும்பணைத்தோ ளாயிழையா டன்மொழியும்", $ "நசையுநர்க் கடையா நன்பெரு வாயில்,இசை யேமக்குத்", "உற்றது காங்கசர் கூற வுணர்ந்தனே", "புகன்றவ னறியும் புறமிசைகளரு ம", ** "சாமந் செப்பாது கண்டது மொழிமோ", "இளக்குங் கிளவி பாண கேளினி", †† "மெய்ம்மை யாரெனை விளம்பினர் புலவர்", "அறிவன தடிதொழுதறைகுவ னென்னே", ‡‡ "ஒருவன்,செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென, வறம்பா டின்றே", "வார்த்தை பகர்குற்றேன்", §§ "இடிபோல வியம்பி னானே" என முறையேகாண்க. (கஎ)

சஙுகூ. முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை
இரக்கழுங் கியம்ப லிமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கவ்வை கம்பலை
அரவ மார்ப்போ டின்னன வோசை.

எ - ன், இதுவுமது.

(இ - ள்.) முழக்குமுதலிய இருபத்திரண்டும் இவைபோல்வன பிறவும் ஓசையென்னும் ஒருகுணத்தையுணர்த்தும் உரிச்சொற்களாம். எ - று.

(வ - று.) ||| "முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇ", ¶¶ "குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை", $$ "ஒல்லென வொலிக்கு மொலிபுன லூரற்கு", *** "கலிகெழு மூதூர்", ††† "டமையிசை யருவி", ‡‡‡ "தோறுவைத்து", §§§ "பிளிறுவார் முரசம்", |||| "இரைக்கு மஞ்சிறைப் பறவைகள்", ¶¶¶ "இரங்கு முரசின்", $$$ "இரும்பிழி மாரி யழுங்கல் மூதூர்", **** "காலை முரசங் கனைகுர லியம்பும்", †††† "இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கை", ‡‡‡‡ "குளிறு முரசங் குணில்பாய", §§§§ "ளிறுங் களித்ததிருங் கார்", ||||| "குரைபுனற் கன்னி", ¶¶¶¶ "கனைகடற் சேர்ப்ப", $$$$ "சிலைத்தார் முரசங் கறங்க", ***** "தள்ளாத சும்மை மிகுதக்கன நாடுநண்ணி", ††††† "கவ்வைநீர் வேலி", "விளைகழப்பல கணைசிலம்பவும்", ‡‡‡‡‡ "அலைகட லரவத் தானை", §§§§§ "ஆர்த்தபல் லியக்குமாம்" என முறையேகாண்க.()

* சீவக. சஙஉ. † புறநா. கஅ௨. ‡ சீவக. ௬. § திருக்குறள், உஙஉ.
|| தொல். பாயிரம். ¶ பு. வெ. ஙஙரு. $ பொருந. சுசு - எ.
** குறுந். ௨. †† நன். ரு. சங. ‡‡ புறநா. ஙச. §§ சீவக. சஙஉ.
||| புறநா. கஅ. ¶¶ ................ $$ ஐந். ஐம். உஅ.
*** புறநா. ருஉ. ††† புறநா. கஉங. ‡‡‡ புறநா. ச. §§§ சீவக. சஙo.
||||| சூளா. கல்யாண. ருக. ¶¶¶ புறநா. சஙஎ. $$$ அகநா. கஉஉ.
**** சிலப். ஆய்ச்சியர். †††† புறநா. கo. ‡‡‡‡ பு. வெ சஅ.
§§§§ பு. வெ. ஙஎ. |||||| சீவக. ஙகூ. ¶¶¶¶ நாலடி. கஙஅ.
$$$$ புறநா. ஙகூ. ***** சீவக. உo. ††††† பு. வெ. அங.
‡‡‡‡‡ சூளா. சீயவதை. கoஅ. §§§§§ சூளா. அது. சரு.

## புறனடை.

சசுo. இன்ன தின்னுழி யின்னண மியலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே.

எ - ன், இவ்வியலுக்கு ஒருபுறனடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்வினையிடையுரியென்னு நான்வகைச்சொல்லுள் இன்ன சொல் தன்மைமுன்னிலை படர்க்கையென்னு மூன்றிடத்தினும் வழக்குச் செய்யுளென்னும் இரண்டிடத்தினும் இவ்விடத்து இவ்விலக்கணத்ததாய் நடக்குமென்று சொல்லப்படுதாகிய இந்நூலுள் அவ்விலக்கணங்காட்டுதற்கு வேண்டியமாத்திரையே கூறுவதன்றி உரிச்சொலாகிய குணப்பெயரையும் ஏனைக்குணிப் பெயரையும் நிகண்டினிற்கூறுவதைப்போல விரித்துக்கூறக்கடவ தல்லலம்; விரிக்கின், மற்றொன்றுவிரித்தலென்னும் குற்றம் வருமாதலின், அவற்றினைக் கண்டறிய வேண்டினோர் இவ்விலக்கணமறிதற்குமுன்னர் ஏனைப்புலவராற் கூறப்பட்ட பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலியநூல்களுள் வகுக்கும் உரிச்சொற்றொகுதியுள் விரும்பிக்கொள்க. எ - று.

இவ்விலக்கணமறிதற்குமுன்னரே நிகண்டறிகவென்றும், அறியுமுறை அதுவாதலான்.

இவ்வியலிலுள்ள, சால்லென்பதுமுதல் ஆர்வென்பதீறாக நாற்பத்தைந் துரிச்சொல் லெடுத்துச் சுருக்கச்சொல்லுதல், சொல்லியலுணர்த்துநூலுட் சொற்றொகுதிகளை விரிக்கின் மற்றொன்றுவிரித்தலாமெனவுணரார் குன்றக் கூறலாமென்பராதலின் அது பரிகரித்தற்கு இச்சூத்திரத்தாற புறனடைகூறினார். இங்ஙனங்கூறவே பெயரியலுட் பெயர்த்தொகுதியினையும், வினையியலுள் வினைத்தொகுதியினையும், இடையியலுள் இடைத்தொகுதியினையும் விரியாது அவ்விலக்கணங்காட்டுதற்கு வேண்டியமாத்திரையே கூறுதற்கும் இதுவே புறனடையாமென்க.

பெயரியலென்பது பெயரிலக்கணம்; பெயர்த்தொகுதியென்பது பெயர்க் கூட்டம். ஏனையுமன்ன. கூட்டமெனினும் நிகண்டெனினுமொக்கும். இலக்கணங்கூறும் நூலுள் நிகண்டினையும் உடன்கூறாது அதனை வேறொருநூலாகக் கூறுதல், தமிழுளேயன்றி ஆரியமுதலியவற்றுள்ளுங்காண்க. (சுசு)

## சொல்லதிகாரத்துக்குப் புறனடை.

சசுக. சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்து
முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்
தெற்றென வுணர்த றெளிவோர் திறனே.

எ - ன், இவ்வதிகாரத்திற்கு ஒருபுறனடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொற்றொறும் இத்தன்மைத்து இதனிலக்கணமென்று முற்ற மொழியப்புகின் வரம்பிலவாமாதலின் எடுத்துக்கூறிய சொற்களினிலக்கணங்களைக்கொண்டு சொல்லாதனவற்றினிலக்கணங்களையும் ஒப்புமைகருதி இதுவும் அதுவென முற்றவிளங்கவுணர்தல் நூலோதித்தெளிதற்குரிய மாணாக்கர் திறனும். எ - று.

இவற்றிற்கு உதாரணம் முன்னரே வந்துழிவந்துழிக்காட்டினும்; ஆங்காங் குணர்க. (உ0)

## நூலிற்குப் புறனடை.

சசுஉ. பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

எ - ன், இந்நூலிற்கு ஒருபுறனடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்காலத்துள்ள இலக்கணங்களுட் சில பிற்காலத்து இறத்தலும் முற்காலத்தில்லன சில பிற்காலத்து இலக்கணமாய்வருதலும் குற்றமல்லவாம்; காலவேற்றுமை அதுவாகலான். எ - று.

இவற்றிற்குமுதாரணம் முன்னர் வந்துழிவந்துழிக்காட்டினும்; ஆங்காங் குணர்க. (உக)

ஐந்தாவது உரிச்சொல்லியல் முற்றியது.

---

இரண்டாவது சொல்லதிகாரம் முற்றும்.

---

## நன்னூற் சங்கர நமச்சிவாயருரை முற்றுப்பெற்றது.

---

### கட்டளைக்கலித்துறை.

அடையெண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றீரைந் தெழுத்து மிருபதமும்
படுபுணர் மூன்றி னியல்பும் விகாரமுஞ் சாரியையும்
உடனுணர் வாரை யெழுத்தறி வாரென்ப ருத்தமரே.

### வெண்பா.

ஏழுபா னிரண்டெழுத்தி னேற்றபதத் தைஞ்ஞான்
கொடுமூன் றுயிரீறைம் பான்மூன் - றருமெய்யீ
றாறு றுருபியன்மூ வாறு மெழுத்துரைநூற்
பாவிருநூற் றேரிரண்டாப் பார்.

### கட்டளைக்கலித்துறை.

இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகையே
ழுருவழு வெட்டுரு பொன்பான் றொகாநிலை யாய்ந்தவெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரிட மோரியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை வருந்திருவே.

### வெண்பா.

பேராறு பத்திரண்டு பின்வினையெண் ணான்குபொது
வோராறுபத் தெட்டிடை மூவேழின் - மேலொன்
றுரியிருபத் தொன்றுகச் சொற்கூத் திரத்தின்
விரியிருநூற் றேரைந்தா வேண்டு.

---

# சூத்திர முதற்குறிப்பகராதி.

[எண்—பக்களண்].

உ

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

—❧✱✱❧—

[எண் - பக்கஎண்.]

---

உ

# விளங்கா மேற்கோள் அகராதி

[எண்—பக்கஎண்.]

யிர வுரையில் இங்ஙனமே கூறினர்; இராமாநுசகவிராயர், இங்குக் கேட்போன் சீயகங்கன் என்றனர்.

"யாவருமுணர" என்றதைப் பயனென்றவர்கள், மயிலைநாதரும், இலக்கணவிளக்கவுரைகாரரும். களவியலுரைகாரர் வீடுபேற்றைப் பயனாகக் கூறுவர் (சூ. க. உரை.) இராமாநுச கவிராயர் அறம்பொருளின்பம் வீடு பெறுதலே பயனென்றார்.

நால்வகையாப்பாவன தொகுத்தல் யாப்பு முதலியன; இந்நூல் ருO-ஆம் சூத்திரத்தால் விளங்கும்; "தொகுத்தல் விரித்தலிருகைவிரிமொழிபெயர்ப்பதர்ப்பட யாத்தலோ டனைமர பினவே" (தொல். மரபு. கள) என்பதனாலும், களவியல் முதற் சூத்திரவுரையாலும் இஃது அறியலாகும்.

பக் - ச.

பராரை-பருத்த மரஅடி; "வன்கட்பராரை முருக்கின்" (நற். உOஉ.)

'இந்நூலுட்கூறியபொருள் யாப்பு, அணியென்னும் மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளனபோலும்' என்றது மயிலைநாதருரைப் பதிப்பின் முகவுரையினால் (பக். XIII) அறியலாகும்.

பகல்செய்வான் - சூரியன்.

நூற்கும் - நூலைச்செய்த. நூற்றல்-நூலைஇயற்றல்; "நொய்தினெய்யசொன்னூற்கலுற்றேன்" கம்ப: அவை.

பக் - ரு.

நூல்நுதலியபொருளல்லன, நுவல்வோன் திறன் முதலியனவென்றும் நூற்குள்ள நுதலியபொருளல்லன,மத முதலியவைகளென்றும் கூறப்படும்.

பக் - சு.

"ஈவோன்...தொகையே" என்பார், இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இலக்கண விளக்க வுரைகாரரும்; தொல். சிறப்பு: உரை; இ. வி. பொதுப்பாயிரம்.

'ஓரிருபாயிரத்திற்கு வகைபோந்து கிடந்தமை': இந்நூல் உ - ஆம் சூத்திரத்தால் அறியலாகும்.

பக் - எ.

"பழையனகழிதலும்,....வழுவல" நன்: சூ. சகஉ.

"ஒருவற்குமைந்தனயினன் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல" என்னும் உவமை, இந்நூல் கஙகூ - ஆம் சூத்திர வுரையினும் வந்துளது.

மருமான்-சகோதரியின் புதல்வன்; மருமகனுமாம்.

பக் - கக.

"ஒருநெறி...மாகும்": இச்சூத்திரம்,தொல். செய்.கசுஙு. இதற்குஇளம்பூரணர் எழுதியுள்ள உரை வருமாறு:— "ஓரினமாகிய நெறியினதிப் பலவேறுபொருளானே பொதுமொழியால் தொடரப்படின், அது படலமென்று பெயராமென்றவாறு ; அது, கிளவியாக்க முதலாக எச்சவியலீறாகக் கிடந்த ஒன்பதோத்தினும் வேறுபாடுடையவாயினும் சொல்லிலக்கண முணர்த்தினமையாற்சொல்லதிகாரமெனப் பெயர்பெறும். அதிகாரமெனினும் படலமெனினு மொக்கும்."

"சில்வகை...சூத்திரம்": தொல். மரபு: சூ. கOO - பார்க்க.சூத்திரவிலக்கணங் கூறப்பட்டவழிக் கண்ணடியுவமை வடமொழியில் இல்லையென்பர்.

பக் - கச.

'பதினன்கு உறுப்புங்கொண்டது விருத்தியுரை' என்பதை மறுத்து, 'ஐங்காண்டிகை யுறுப்பிற்குமேற்பட்டு வருவன வெல்லாம் விருத்தியுரையென்பதே இதன் கருத்தெனக் காண்க' என்பர் இராமாநுசகவிராயர்.

பஞ்சி: பஞ்சுக்குப் பஞ்சியென்னும் பெயருமுண்டு. இதனை, "பஞ்சிநுண்டுகிலன்னமைங் கழற்சேவடி யுடையார்" (தே. வாள்கொளிபுத்தூர்), "பஞ்சியடிப்பவளத் துவர் வாயவள்" (சீவக. உகக), "இடையும் பூணையுங் கிழியும் பஞ்சியும்", "கேள்விச் செவியிற் கிழித்துகிற் பஞ்சி" (பெருங். க.சகூ:கஅசு; க. சஅ: கஙகூ) என்பவற்றாலறிக.

கதிர்: இது, மிகக் கூரியதோரிருப்புக் கருவி; நூல்நூற்றற்குரியது; "கதிர் மூக் காரல்" (புறநா. உசுகூ); "காம்புங்கதிருங் கூம்புமணிக் குமுதமும்" (பெருங். உ. சு: அஎ.)

பக் - கரு.

நிறைகோலென்பதற்குக் கழச்சுக்கோல், கயிற்றுக்கோல், துலாக்கோலென்று பொருள்செய்வாரு முளர்.

பக் - கசு.

பண்டைக்காலத்திற் கழற்சிக்காயினால் அலகிடுவதுண்டென்று, "பரந்தாடு கழங்கழி மன்மருங்கு", "எல்லா மெண்ணி னிடுகழங்குதபுந" (பதிற்: சரு, கூஉ) என்பவற்றால் தெரிதலின், "கழற்பெய்குடம்' என்றதற்கு, 'அலகிடுதற்குரிய கழற்சிக்காயைப்பெய்யுங் குடம்' என்று பொருள்கொள்வது பொருந்தும்.

பக் - கஎ.

நெய்யரி: நெய் - தேன். அதனை வடிக்கட்டுதற்குக் கருவியாயிருத்தலின், பன்னாடை 'நெய்யரி' என்று பெயர்பெற்றது; இக்காலத்துப் புத்துருக்கு நெய்யும் அதனால் வடிக்கட்டப்படுகின்றது; "நல்லவை யகத்திட்டு நவைபுறத் திடுவது, நெய்யரிமாண்பென நினைதல் வேண்டும்" என்பதனைக் காட்டி, நெய்யரியைமுதன்மாணாக்கருக்கு உவமை கூறுவர், நச்சினார்க்கினியரும், இ. வி. உரையாசிரியரும்.

பக் - ககூ.

"அழலி னீங்கா னணுகான்" என்பதும், "அகலா தணுகாது தீக்காய்வார்போல்க" (திருக். சுகூக) என்பதும், "அழலிற் சாரா தகலாதொழுக" (சீவக. கசுசஅ) என்பதும் ஒப்புநோக்கற்பாலன. "நிழலினீங்கான்" என்பது, "நிழலி னீங்கார்" (சீவக. கசுசஅ) என்பதை நினைப்பிக்கின்றது.

பக் - உக.

"மாடக்கு...கோபுரமும்" என்பதனை, "எயினலம்புனை கோபுரமாபுரத்தெழுதுமா ளிகைதோறும்" (வில்லி. சம்பவ: ககசு) என்பது தழுவியது.

பக் - உஉ.

எழுத்தென்றது காரியவாகுபெயர். இப்புத்தகம் கசச-ஆம்பக்கம்பார்க்க.

பக் - உங.

முற்கு வீளை இலதையென்பன, அடிநாவடியிற் காட்டப்படுவதோரொலிக்குறிப்பென்பர், இராமாநுச கவிராயர்; நன். சூ. ருஅ.

ஐந்து அணுவாவன: சுவை, ஒளி ஊறு ஓசை நாற்றமென்ற ஐந்தின் நுட்பங்கள்.

மாயையை அநாதிகாரணமென்பது, வைசிகமதத்தார்கொள்கை: "பதினெண்,டேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சிதான் றாய.மாயகாரிய வொலியன்றி" (திருவிளை. நகர. கஎ.)

பக் - உச.

'பிறப்பதிகாரம்' என்றது, "நிறையுயிர் முயற்சியின்" என்னும் இந்நூலின் எச - ஆம் சூத்திரமுதலியவையுள்ள பகுதியை.

பக் - உஎ.

'நாதமாத்திரையாய் எல்லா வெழுத்திற்கும் காரணமாய் முன்னிற்றலின் அம்முதல்' என்பதை, 'அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலான்' (திருக்.க,பரி) என்பதும், 'இறைவன் இயங்குதிணைக் கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்பமுடிந்தாற்போல அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க்கண்ணுங் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமென்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்பமுடிந்தது' (தொல். மொழி. சூ. கங.ந உரை) என்பதும், 'அகாரம் சகல சப்தத்திற்கும் காரணமாய் நாராயண பதத்திற்குச் சங்கிரகமாயிருக்கையாலே' ([illegible] டாநுசு ரகசியம், திருமந்திரப்ரகரணம்) என்பதும், 'மொழிக்காரணமாகா தகாரிய

வொலியெழுத்து'' (இ.வி.சூ. ௩)என்பதும் ஒத்துள்ளன.

பக் - உ௯.

௮உ-ஆம் சூத்திரம், தொல்காப்பியத்திற்கு வேறுபட்டுளது; தொல். பிறப்பு. ௧எ-ஆம் சூத்திரம்பார்க்க.

சூ. ௮௫ - உரை: 'மேற்பல்லைக் கீழிதழ்பொருந்த' என்பர், இராமாநுசகவிராயர்.

சூ. ௮எ: ஆய்தத்துக்கிடம் நெஞ்சென்பர், நச்சினார்க்கினியரும் (தொல். பிறப்பு. ௧௯. உரை), இ.வி. நூலுடையாரும் (சூ. ௧௩.)

ஏன - மற்ற; "முதலா வேன தம் பெயர் முதலும்'' (தொல். மொழி. சூ. ௩௩.)

பக் - ௩௦.

எடுத்தல்முதலிய மூன்றொலியோடு விலங்கலோசையென்று ஒன்றுண்டென்றும், அகணையுடையது ஹகாரமென்றும், வல்லினம் தலைவளியுடையது, மெல்லினம் மூக்குவளியுடையது, இடையினம் மிடற்றுவளி யுடையதென்றும் கூறுவர்; தொல். பிறப்பு. சூ. ௬ - ௭. உரை.

பக் - ௩௪.

நுந்தை-உன்தந்தை; "கண்டிசின் வாழியோ குடமக னுந்தை (அகநா. ௬௬), "நுந்தை தாணிழ லிருந்தோய்'' (சிலப். ௩௦: ௧எ௪.)

ஆனைமுகக்கடவுளை மும்மதத்தனென்றது பொருந்துமெனில், "யானையுறுப்புக் கழுத்திற்கு மேலன்றியின்மையான் மும்மதத்தனுதல் யாங்ஙனமென்பார்க்கு மும்மதம் யானைக்கு அடையென்பாரும் ஒருகோட்டன்முதலியன போல மும்மதத்தனென்ன விநாயகப்பிரானுக்கே அடையாய்நிற்றலின் யானைக்கு அடையாமாறு யாங்ஙனமென மறுத்து இச்சாஞானக்கிரியையாகவாண்டு மும்மதமென உருவகஞ் செய்யப்பட்டனவென்றுரைப்பாரும, ஒருகோடுமுதலிய ஏனை அடையெல்லாம் உறுப்பினை யுணர்த்திநிற்றலின், இதுமாத்திரம் இனம்பற்றாது உருவகமாதல் செல்லாமையானும் உருவகஞ்செய்தற்குரியதோர் இயைபுவிசேடம் இன்மையானும் கர்த்தா முதலியோரையும் அக்கருத்துப்பற்றி மும்மதத்தனெனல் யாண்டுமின்மையானும் அதுவும் உரையன்றெனமறுத்துப் பஞ்சாக்கரத்தின் பேதமாகிய எட்டெழுத்து ஆறெழுத்து நாலெழுத்துமுதலியனவும் பஞ்சாக்கரமென வழங்கப்படுமாறுபோல மும்மதத்தின்வகையாகியஒருமதமும் இருமதங்களும் மும்மதமென வழங்கப்படுமாகலின், அதுபற்றி ஆசங்கை என்னையென்றொழிவாருமுளர்'' சிவஞானசித். காப்பு, சிவஞான. உரை.

சூ. ௬௫ - உரை: 'இனி...பொருள் கூறுவாருமுளர்': இங்ஙனம் பொருள் கூறுபவர், மயிலைநாதர்.

பக் - ௩௫.

இவ்வாய்தம் குறுகாதெனக்காண்டல் விரோதங் கூறுபவர், இ. வி. உரைகாரர்; சூ. ௫-உரை.

பக் - ௩௬.

'மேல் உயிரளபா யென்றுரைத்தலின்': மேலென்றது, "புள்ளிவிட் டவ்வொடு'' என்னும் இந்நூலின் ௮௯-ஆம் சூத்திரத்தை.

பக் - ௩எ.

ஏடு: இம்மொழிக்கு உடம்பென்றும் பொருளுமுண்டு; "ஏடு நிலத்திலிடுவதன் முன்னம்'' (திவ். பல்லாண்டு, ௪.) பெரியவாச்சான்பிள்ளை யுரையைப்பார்க்க.

யவனர்: இச்சாதியார் பலவகைச் சிற்பத்தொழில்களிலும் அரசர் முதலியோரிடத்துச் செய்யும் பலவகைப் பணிகளிலும் பெயர்பெற்று முன்பு விளங்கினார்களென்று பெருங்கதை முதலியவற்றால நன்குதெரிகின்றது.

பக் - ௩அ.

அநந்தாபத்தி: பிரமாணங்களுளொன்று; அதாவது, 'பகலுண்ணான் பருத்திருப்பான்' என்றால், உண்ணாதவன் பருத்திருத்தல் கூடாமையின்

'இரவிலுண்பான்' என்று கொள்ளுதல்.

குரீ-குருவி; இப்பெயர் குரீஇயென வும் பழைய நூல்களில் வழங்கும்.

கடு - ஒருமரம். இதனோடு 'காய்' என்பதனைக் கூட்டிக் கடுக்காய் மரம் என்று வழங்குவதும் உண்டு; "ஆய் தருங் கடுக்காய் வனத்திடை" (மாயூர புராணம், காமன்பூசை. ௩.)

சே-ஒருமரம்; "சேவென் மரப்பெயரோடுமர வியற்றே" (தொல். உயிர் மயங்கு. எசு); "சேவுங் குரவுஞ் சினை பிளந் தளைந்து"(பெருங். க.ருக:சசு); "பால்சுரந்து, பொங்கு நீடுசே வினங் களு மவண" (காஞ்சி. நாடு. சசு); "புன்னை கூவிள நாகம் பூவை பிடா நமை சேவாண்" (திருவானை. சம்பு. க); "சேவின் மேலொரு சம்புயர்ந் தலங்கிடுஞ் சிறந்த, சேவின் மேலொரு சம்புயர்ந் தலங்குதல் செயுமே" (திருநாகைக்காரோணப்புராணம், நைமிச. கச.)

பக் - ௩௯.

எஞ்சியசொல்லி னெய்தக்கூறலென்னு முத்தியை அருத்தாபத்தியென்பர் இராமாநுச கவிராயர்.

பக் - ௪௦.

சிங்கநோக்கம் : இது சூத்திரநிலைகளுளொன்று; நன். சூ. கக-பார்க்க. இதனை வடநூலார் 'ஸிம்ஹாவலோகனம்' என்பர்; "பணிவருஞ் சிங்க நோக்கிற் பணையெருத் துறழநோக்கி" (சீவக. கருசுகூ.)

'அப்பொடு பெய்தஉப்பு, தன்னளவு தோன்றாது ஒன்றாய் நிற்கும்' என்பது, "நாழியப்பு நாழியுப்பு நாழியாய வாறு போல்" (சிவவாக்கியம்,ருச), "நசித்து மலம், அப்பணைந்த வுப்பினுளமழிந்து" (சிவஞானபோதம், சூ. கக-உதா. வெண். ரு) என்பவற்றை நினைப்பிக்கின்றது.

பக் - ௪க.

இடைநிலையை (மயக்கத்தை) ஒருமொழிக்கே யெனக்கொள்பவர் நச்சினார்க்கினியர்; தொல். நூன்.சூ. உஎ.

உயிர்மெய்முன் உயிர்மெய் மயங்குதல் உளதென்று கூறுபவர்கள் மயிலைநாதரும்(பக்-சஎ), நச்சினார்க்கினியரும் (தொல். நூன். உஉ-உரை), இ-வி உரைகாரரும் (இ.வி. சூ. ௩க-உரை.)

கற்க: "கற்க கசடறக் கற்பவை" (திருக். ௩௯க.)

புன்றலை - சிவந்த தலை; "புன்றலை மகாஅர்" (மலைபடு. உருரு); இனி, புல்லிய இடமுமாம்; "புன்றலைப் புனங்காப் புடைபோதர" (கம்ப. நாடு. ௩ச.)

புன்கண் - துன்பம்; "புன்கண்கூர் யாமத்துப் பூழிமேற் றுன்படுத்து" (நள. கலிதொடர். கூஎ.)

பக் - சஉ.

கம்பன்: பண்டைக் காலத்திற் காளிமுதலிய தெய்வங்களைப் பூசிக்கும் சாதியாருக்குக் கம்பரென்றுபெயருண்டென்று தெரிகின்றது. இச்சாதியார், உவச்சர் என்றும் பாரசவர் என்றும் வழங்கப்படுவர்; திருவிளையாடற் பயகரமாலையை இயற்றிய ஆசிரியரின்பெயர் ஓரேட்டுச் சுவடியில் 'வீரபத்திரக்கம்பர்' என்று எழுதப்பட்டிருந்தது.

வேய்ங்குழல் - புல்லாங் குழல்; "வேய்ங்குழ லோசையும் விடைமணிக் குரலும்" (திவ். திருப்பள்ளி. ச.)

அற்றம்-மறைத்தற் குரியது; "அற்றமறைத்தலோ புல்லறிவு" (திருக். அசசு); "அற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகில்" (மணி. ௩ : ௩கூ௦.)

அல்லி-அகவிதழ்; "அல்லிசேரணங்கிற் கணங்கன்னவள்" (சீவக. கசுஉ); "அவ்வல்லி மலர் புல்லும், மங்கையிவளாமென" (கம்ப.கோலங்காண்.௩உ.)

அக்கு - உருத்திராக்கம்; "அக்குமாலைகொ டங்கையி லெண்ணுவார்" (தே. பொது); "அக்கும் புலியி னதளுமுடையாரவர்" (திவ். பெரியதிரு.கூ. சு : க.)

பக் - சங.

அனுவதித்தல் 'வழி மொழிதல்' என்று தமிழில் வழங்கப்படும்; "கூறின பின்னுங் கூறின சிலவவை, அநுவாத மென்றே யறிந்தே யடக்குக" (இ - கோ. சூ. எ.)

பக் - சச.

அகன் - அகம், மனம். முகன் - முகம்.

பயின் - பிசின்; "சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய, கற்போற் பிரிய லம்" (அகநா. க.)

வயின் - இடம்; "வயின்வயி னெயிற்றிமாதர் வயிறலைத் தோடவோடி" (கம்ப. பால. ஆற்று. கச.)

பந்தல்: இப்பெயர் தமிழ்நாட்டினுட் சிலவிடங்களில் அசுபகாரியங்களுக்கு இடப்படுவதற்கே வழங்குகின்றதென்றும் சுபத்திற்காக இடப்படுவதற்குக் காவண மென்பது வழங்குகின்றதென்றும் தெரிகின்றது. சுபத்திற்காக இடப்படுவதற்குப் பந்தரென்னும் பெயர் இருவகை வழக்கிலும் காணப்படுகின்றது; "மாலை தொடர்ந்த மங்கலப் பந்தர்" (பெருங். க. ங௪: உஉ); "பந்தரி னிழல்வீசப் படர்வெயில் கடிவாரும்" (கம்ப. கடிமண. உசு.)

பக் - சரு.

"இம்மூன்று ... கூறிய": மூன்று சூத்திரங்கள்: கஉஉ, கஉங, கஉச. அவற்றை இடைநிலையின்பாற்படுத்திப் பொருள்கூறியவர் மயிலைநாதர்.

பக் - சசு.

'எழுத்துச் சுண்ணத்தின்கண் அரிசனமுதலியபோலாது மாலையின்கண் மலர்போல அவற்றில் நிற்றலின்': இவ்வுவமையை வேறுவகையாக இவ்வுரையாசிரியர் காட்டியுள்ளார்; நன். சூ. கசுஅ - உரை.

'அனைத்து' என்னும் சொல் எல்லாமென்னும் பொருளையுடையதெனக் கொள்வர் மயிலைநாதர்; சூ. ஙசுக - உரை.

பக் - சஅ.

அம்பலவன், "அம்பலவன் மலயத்து" (திருச்சிற். கரு.)

உத்தரட்டாதியான்: "ஊனத்திற் றீர்ந்தசீர்த்தி யுத்தரட்டாதி யானே" (சீவக. ஙஅஎ.)

பக் - சகூ.

அவன் முதலியவற்றைப் பகாப்பதமென்றவர் மயிலைநாதர்; நன். சூ. கஙo - உரை.

பக் - ருo.

வின்மை - வில்லினது தன்மையுமாம்; "வின்மையி னீண்டமேரு" (பெரிய. மூர்த்தி. கங.)

பக் - ருக.

'முதனிலைப் பெயர்வினை' என்றதற்கு முதனிலைப் பெயரெனவும் முதனிலைவினையெனவும் பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க.

பக் - ருஉ.

நெட்டணை - நெடுமையான பஞ்சுமெத்தை; "நெட்டணை யருகாக் கொட்டைகள் பரப்பி" (கக-ஆம் திருமுறை, திருவிடை. மும்மணி. கக.)

சேதாம்பல்: "சேதாம்பற் போதனைய செங்கனிவாய்" (கம்ப. நகர் நீங்கு. கoக.)

'செம்மை ... பொதுவிதியானும்': பொதுவிதி என்றது, இந்நூல், கருஅ, கசுஉ, கசுரு-ஆம் சூத்திரங்களை.

பக் - ருங.

'மேற்கூறிய அகரவகரப்போலி' என்றதில், 'மேல்' என்றது "அம்முனிகரம்" என்னும் கஉரு-ஆம்சூத்திரத்தை.

பக் - ருச.

'விதந்த...மேற்கூறலின்': மேலென்றது "டவாமடிசீ" என்னும் கஙஎ-ஆம் சூத்திரத்தை.

பக் - ருரு.

'இச்சூத்திரத்திற்கு...பொருளாகக் கூறுவாருமுளர்': இங்ஙனம் பொருள் கூறுபவர் மயிலைநாதர்; இ.வி.உரையாசிரியர் கொள்கையும் இதுவே (இ. வி. சூ. சரு - உரை.)

மூன்று சந்தி: தோன்றல் திரிதல் கெடுதல் என்பன.

பக் - ௫௬.

வில்லி, வாளி: "கண்டகர் வாளிகள் வில்லிகள் புறங்காக்குஞ்சீர்" (தே. திருக்குன்றம்.)

சூ. ௧௪௨. வினைப் பகுபதத்தைத் தொழிலென்றது ஒருவகைக்குறிப்பு; பின்வரும் வினையென்பனவும் அன்ன.

பக் - ௫௭.

'மேலைச் சூத்திரத்தில் வருவதூஉ மது': மேலைச்சூத்திரம், ௧௪௪. அச்சூத்திரத்தில் வருவது "இசைவினை" என்பது.

பக் - ௫௮.

'எதிர்காலங்காட்டுமென மேல்விதத்தலின்': மேலென்றது "செய்த செய்கின்ற செய்யும்" (௩௪௦) என்னும் சூத்திரத்தை.

பக் - ௫௯.

என்மனார்: "என்மனார் என்பது என்பஎன்னு முற்றுச்சொல்லை, 'குறைக்கும் வழிக் குறைத்தல்' என்பதனால் பகரங்குறைத்து, 'விரிக்கும்வழிவிரித்தல்' என்பதனால் மன்னும் ஆரும் என்பன இரண்டிடைச் சொற் பெய்து விரித்தார்" என்பது இளம்பூரணம் (தொல். கிளவி. சூ. ௧); "என்மனார் என்பது செய்யுள் முடிபெய்தி நின்றதோர் ஆரீற்றெதிர்காலமுற்றுச்சொல்" என்பது சேனாவரையம் (ஷை ஷை); "என்மனாரென்பது ஓர் ஆரீற்று நிகழ்கால முற்றுவினைத் திரிசொல்" என்பது நச்சினார்க்கினியம் (ஷை ஷை ஷை.)

என்றிசினோர்: 'என்றிசினோர், கண்டிசினோரென்பன அவ்வாறுவந்த இறந்தகால முற்றுச்சொல்' என்பது சேனாவரையம் (தொல். கிளவி. சூ. ௧); 'என்றிசினோரென்பது அவ்வாறுவந்த இறந்தகால முற்றுவினைத் திரிசொல்' என்பது நச்சினார்க்கினியம் (ஷை ஷை ஷை.)

பக் - ௬௦.

'நடவாவென்னும்': "ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்": நன். சூ. ௩௨௯.

பக் - ௬௨.

சருச்சரை - சுரசுரப்பு; எண்வகைப் பரிசத்துள் ஒன்று; நன். சூ. ௪௫௪ - உரையைப்பார்க்க. வடநூலார் இம்மொழிக்கு வேறு பொருள்கூறுவர்.

தக்கணம் - தெற்கு; "தருமயாத் திரையெனத் தக்கணம் போந்துழி" (பெருங். ௧. ௩௬: ௨௩௮.)

பக் - ௬௩.

கட்சி (கக்ஷி) - கூடு.

அநத்தம் - கேடு.

பக் - ௬௫.

சூ. ௧௫௨: வினைத்தொகையைத் தொழிலென்றது ஒருவகைக்குறிப்பு.

பக் - ௬௬.

வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகைகளை ஒருமொழியென்றுகூறுபவர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் (தொல் புணர். சூ. ௮.) இ-வி. உரைகாரரும் பெரும்பாலும் இக்கொள்கையினரென்று தெரிகின்றது (சூ. ௩௩௯. உரை.)

பக் - ௬௭.

பஃறலை: "படங்கிளர்பஃறலைப்பாந்தளேந்துபார்" (கம்ப. திருவவ. ௧௦௭.)

உரி - நாழியிற்பாதி; அஃதாவது சின்னப்படியிற்பாதி.

பக் - ௬௮.

"விகாரத்தியைவது புணர்ப்பே": நன். சூ. ௧௫௧.

பக் - ௬௯.

விளைவநாட்டினன், மண்ணைவைத் தானென்னும் உதாரணங்கள் இன்னவிதிக்குக் காட்டப்பட்டவையென்று புலப்படவில்லை; கையெழுத்துப் பிரதிகளிலெல்லாம் இவ்வாறேயுள்ளன.

'அச்சூத்திரத்திற்கு...வேறுரை செய்வாருமுளர்' என்றது இளம்பூரணரையும், நச்சினார்க்கினியரையும் (தொல். தொகை. சூ. ௩-உரை.)

விட்டிசை - வருமொழியோடு தொடர்தலின்றி வேறுபட்டு ஒலித்தலையுடையது; "விட்டிசைத் தல்லான் முதற்கட் டனிக்குறி னேரசையென்,றெட்டப் படாது" (யா. கா. ஒழிபு. உ.)

பக் - ஏ0.

நம்பி - ஆடவர்களிற் சிறந்தவன்; "நம்பியைக்காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும்" (கம்ப. கார்முகப். சங); இச்சொல்லுக்குக் குணபூர்ணனென்று பொருளெழுதுவர் பெரியவாச்சான்பிள்ளை.

விடலை-பாலைநிலத்தலைவன்; "கன்னி விடலை' (நம்பி. அகத்.உக); "விடலையுற் றுரில்லை" (திருச்சிற். உகஅ.)

குமரகோட்டம்; "கச்சியிற் குமர கோட்டங் காதலித் துறையுங் கந்தன்" (கந்த. திருநகர. க0ஏ.)

பக் - ஏக.

நம்பீ: "என்னுடைப்பந்துங் கழங்குந் தந்துபோகுநம்பீ" (திவ். திருவாய். ௬. உ: க.)

பக் - ஏஉ.

மெய்யீற்றின்முன் உயிர்வரின் உடம்படுமெய் பெறுமென்றவர் நச்சினார்க்கினியர்; தொல், புணர். சூ. ௩அ-உரை; ஷை. புள்ளி. சூ. க0 - உரை.

பக் - ஏச.

'இரண்டுயிரும்..சாதிப்பாருமுளர்': சாதிப்பவர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்; தொல். புணர். ௩, ௩௬ - உரை.

சூ. க௬ரு-உரை. விதந்துசொல்லாதன - எடுத்துச் சொல்லப்படாதன; "விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்" (யா. கா. க - உரையின் மேற்கோள்.)

தாரா - ஒருவகைப்பறவை; "தாரா வாரும் வயல்சூழ்ந்த சாளக் கிராமத்து" (திவ். பெரியதிரு. க. ரு:க0.)

தாழக்கோல்: "வன்னிலைக் கதவ நூக்கித் தாழக்கோல் வலித்து" (திருவிளை. அங்கம். அ.)

எட்டிப்பூ - வணிகர்பெறுதற்குரிய எட்டிப்பட்டத்திற்கு அறிகுறியாக அரசனாற் கொடுக்கப்படும் பொற்பூ.

காவிதிப்பூ: காவிதிப்பட்டத்திற்குரிய பொற்பூ; 'எட்டி காவிதி யென்பன தேயவழக்காகிய சிறப்புப் பெயர்' (தொல். தொகை. சூ. கஉ. ந. உரை); "எட்டி காவிதிப் பட்டந் தாங்கி" (பெருங்.உ. ௩: சசச.)

கடிக்கமலம்: "கடிக்கமல முகங் காட்டக்......கருநெய்தல் கண்காட்டும்" (தே. பிரமபுரம்.)

பக் - ஏரு.

"ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே": நன். சூ. க௬க.

களங்கனி: "களங்கனி யென்றுமை கைக்கிளி பார்க்குங்கறைக்கண்டனே" (காசிக்கலம். ௬க.)

பக் - ஏ௬.

சித்திரித்த: "சித்திரித்தியற்றிய" (பெருங். ச, கஏ: ஏ௬.)

பக் - ஏஏ.

பன்னாள்: "பன்னாளுஞ் சென்றக் கால்" (நாலடி. கருக.)

பக் - ஏ௯.

தாரா: "வெண்கலந் தாராமுதல்" (திருவிளை. இரத. உ௩); "தரும்பித் தளையுந் தாராவும் பொன் னாக்கித்தருவெம்" (திருவரங்கக்.ச௩); "பூணுவார் தாராப்பூண் டாலும் பொருந்திய தங்க மென்பார்" (தனிப்பாடல்.)

மிடா: "தீம்பய றியன்ற சோறு செப்பினுயி ரம்மிடா" (சீவக.௬௯உ.)

உடம்பொடு புணர்த்தல்: இஃது உடம்படு புணர்த்த லென்று பல ஏட்டுப் பிரதிகளிற் காணப்படுகின்றமையின் அது சரியான உருவமென்றும், உடம்ப்டுபு உணர்த்தலென்று பிரித்துப் பொருள்கொள்வது நேரென்றும் தோற்றுகிறது.

நாடுரி: தென்பாண்டிநாட்டில் 'நாவுரி' என்று வழங்குகின்றது.

பக் - அ0.

புளிங்கறி: இதனை "அண்டனீ ரூறமிர்தம்" என்பர்; (சீவக. ௯உஅ.)

இப்பெயர் புளிக்கறி, நெகிழ்கறி யமு தெனவும் வழங்கப்படும்.

பக் - அக.

மீக்கூற்று: இது மீக்கூற்றமெனவும் வழங்கும்; "இல்ல மிளமை யெழில் வனப்பு மீக்கூற்றம்" (நாலடி. ருங); "பெருமீக் கூற்றமும் பேணுன்" (பெருங். ங. உரு: அங.)

பக் - அஉ.

உதுக்காண்: "விடுத்தேன் வாழி யர் குருசி லுதுக்காண்" (புறநா. உகo.)

பக் - அங.

தெள்கு: "சிறிய தெள்கு துள்ளிக், கருடனூர்க்குப் பறவை கற்பிப்ப தென" (அரிச்சந்திர. அவை.)

முயிறு: "பழனப் பாகன் முயிறு மூசு குடம்பை" (நற். கஅo; ஐங் குறு. கூகூ); இப்பெயர் முசிறென வழங்கும்.

பக் - அச.

சுருப்புநாண் கருப்புவில்: "சுரு ப்புநாண் கருப்புவில் லருப்புக்கணை தூவ" (மணி. கஅ - கoரு); "கருப்பு வில்லிறுத் தாட்கொண்டு காவென் ருள்" (கம்ப. பால. உலா. உஉ.)

கற்று: "கற்று வின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவா. சிவானந்த. ங); "கற்றுதரல்போல்" (நல்வழி, உகூ.)

எதிர்மறைமுகம்: இதனை வ்யதி ரேகமென்பர் வடநூலார்.

அற்புத்தளை: "அற்புத்தளைக் கிளவி பற்பல பயிற்றி" (பெருங். ங. உச: கூ.)

இற்றைநாள்: "இற்றைநாளளவு மன்னுய்" (கம்ப. சுந்தர. உருக்காட்டு. ஙரு.)

பக் - அரு.

ஒற்றை: "உடங்கொருவர் கைநிமிர்த் தாங் கொற்றைமே லூக்க" (சிலப். உகூ. ஊசல் வரி); "ஒற்றைத் தனியா ழித் தேரென்ன வோடுவது" (நள. கலிநீங்கு. சங); "ஒற்றை யாழியந் தேரவன்" (நைட. நகர. ங.)

இரட்டை: "சாமரை யிரட்டையுந் தமனியக் குடையும்" (பெருங். க. ஙசு: உக.)

வேட்டை: "வேட்டையாடி வருவா னை விருந்தா வனத்தே கண்டோமே" (திவ். நாச்சியார். கச: கூ.)

"வடவேங்கடந் தென்குமரி" (தொ ல். பாயிரம்); "தென்குமரி வடபெருங் கல்" (புறநா. கஎ.)

தென்மலை - பொதியின்மலை: "தென் மலைப் பிறந்த சந்தன மறுக", "தென் மலைச் சந்து" (சிலப். சு: ஙஅ; அ: கக.)

கிழ்மேற்றென்வடல் - கிழக்கு மேற் குத் தெற்கு வடக்கு; கிரய சாசனங் களில் எல்லையைக்குறிக்குமிடத்து இவ் வாக்கியம் இக்காலத்தும் எழுதப்படு கின்றது.

தெற்கூர்: இப்பெயருள்ள ஊர்கள் தமிழ்நாட்டிற் பல உள்ளன.

பக் - அசு.

கழஞ்சு: இஃது இருபது மஞ்சாடி எடை கொண்டது.

ஏழுகடல்: "ஏழுகடற்கு மப்புறத்த தாகா திருந்த திறியன்ரே" (கம்ப. சுந்தர. உருக்காட்டு. கசo.)

ஓராயிரம்: "உண்ணிறை யுடைய வல்ல வோராயிர மனத்த வாகும்" (சீவக. கருகூஎ.)

"முற்றுமற் றொரோவழி": நன். சூ. கசுச.

பக் - அஎ.

எடை - எடுத்தலளவைப்பெயர். இஃது இடை யெனவும் இலக்கியங் களில் வழங்கும்; "நெய்யிடை நல்ல தோர் சோறும்" (திவ். பல்லாண்டு, அ.)

நாழு: "நாழிமுகவாது நானுழி" (மூதுரை. கக.)

நாற்கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தார மென்பன; "நாற்கவிக்கும் படிச்சந்தம்" (சடகோப. கூ.)

மஞ்சாடி: பெருங்குன்றிமணி மரம்; இதன்முத்து இரண்டுகுன்றிமணி யின் எடையுள்ளது. இம்மரத்தின் பெயர் திலகம்.

ஐம்பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவி; "ஒருமைம் பொறியு மோம்பி" (சீவக. ஙஎஎ.)

"எண்குணத்தான் றாளை வணங்காத் தலை": திருக்குறள், கூ.

பக் - அஅ.

'இச்சூத்திரத்து...உளர்': இங்ஙனம் பொருள்கொள்பவர் மயிலைநாதர்.

பக் - கூஉ.

வழுதுணங்காய் - ஒருவகைக் கத்திரிக்காய்; "வழுதுணங்காய்வாட்டும்" (தனிப்பாடல், ஔவையார்.)

பனைக்கொடி: "அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடியோனும்" (புறநா. ருசு.)

பனஞ்செறும்பு: "பனஞ்செறும் பன்ன பன்மயிர் முன்கை" (பெருங். உ. அ: கoஎ.)

பக் - கூங.

மண்ணகம்: "மண்ணக மடந்தை மயக்கொழிப் பனள்போல்" (சிலப். கசு: சo); "மண்ணகம் வளருந் தோளான் மறுத்துநீ மொழிய லென்றான்" (சீவக. உoஉ); "மண்ணகந் துயர் நீங்க" (திருவரங்கக். க.)

பக் - கூச.

'எதிர்மறை..பொதுச்சூத்திரத்தான் இயல்பாமென்பார்': பொதுச்சூத்திரம் நன். சூ. சருஅ.

ஏவற்குறு வெனப் பாடமோதுபவர் மயிலைநாதர்.

பக் - கூசு.

கவண்கால் - கவணின் இரண்டுபக்கத்துக் கயிறு.

பக் - கூஎ.

தேங்கமழ்சோலை: "தேங்கமழ் சோலை தோறுஞ் சிறைவிரித் தாடு மாதோ" (நைட. நாடு. கசு.)

பக் - கூஅ.

மான்குளம்பு: "சொல்லத்தகுமான் குளம்பென்றே" (உவமானசங்கிரகம், சு.)

பக் - கூகூ.

வட்டநேமி: "வட்டநேமிவலவா" (திருவரங்கத். சுo.)

மரவடி: "மரவடியைத் தம்பிக்கு வான்பணயம்வைத்துப்போய்வானோர் வாழ" (திவ். பெரியாழ்வார். ச. கூ: க); மரத்தின் அடியையும் 'மரவடி' என்று வழங்குவர்.

ஞாண்: "பின்னுறு பொன்ஞாண்" (பெருங். க. சசு: கஎஎ.)

பக் - கoக.

மெய்க்கீர்த்தி: தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுளொன்று; ஒரு தலைவனுடைய மெய்ப்புகழை அளவடி முதலியவற்றாற் கூறுதல் முதலியவை அமைந்திருக்கப் பெறுவது; "சீர்நான் காதியிரண்டடித்தொடையாய், வேந்தன் மெய்ப்புகழெல்லாஞ் சொல்லியும், அந்தத் தவன்வர லாறு சொல்லியும், அவளுடன் வாழ்கெனச் சொல்லியு மற்றவ, னியற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத், திறப்படவுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி" (பன்னிரு. ருகக); "தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீரடியால், எழிலரசர் செய்தி யிசைப்பர்" (வச்சணந்தி, செய்யுளியல், ருச.) இதனைச் சிலாசாசனங்களிற் பரக்கக் காணலாகும்.

பக் - கoஉ.

கீழ்மையென்னும் ... பதவியலுள் முடிததுப்போந்தமை நன். கஙசு-ஆம் சூத்திரவுரையால் அறியலாகும்.

பக் - கoரு.

திரியுமுற் ... காலவழுவமைதியை இந்நூல், ருஅச - ஆம் சூத்திரத்திற் காண்க.

தாட்டுணை: "தாட்டுணைக்குடையுந்தகை சான்மணி" (கம்ப. நாட்டு. உஎ.)

விற்படை: "விற்படை பெரிதென் கோயான் வேற்படை மிகுமென் கோயான், மற்படை யுளதென் கோயான் வாட்படை வலிதென் கோயான்" (கம்ப. சுந்தர. ஊர்தேடு. சக.)

"சிலவிகாரமா முயர்திணை": நன். சூ. கருகூ.

பக் - ௧0௬.

"வேற்றுமை...மேல்விதித்தலின்": 'மேல்' என்றது நன். சூ. ௨௫0.

தெம்முனை = தெவ் + முனை-பகைப் புலம்; பு - வெ. ௨௪௪.

பக் - ௧0௭.

மழகளிறு: "வரைபுரையு மழகளிற் றின்மிசை" (புறநா. ௩௮.)

தடந்தோள்: "தடந்தோள் வீசித் தகைமாண் வீதியுள்" (பெருங். ௪. ௧௬: ௧௩௩.)

இல்முன் - முன்றில்: இதன்விதியைத் தொல். புள்ளிமயங்கு. ௬0 - ஆம் சூத்திரவிதியால் அறியலாகும். முன்றில்: "கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலில்" (கம்ப. நாடு. ௩௪.)

பொதியில்: "தென்னன் பொதியிற் செழுஞ்சந் தனக்குழம்பின்" (திவ். இயற்பா. பெரியதிருமடல், ௪0); "தென்வரைப்பொதியிலாரம்" (சீவக. ௨௧௮௭.)

குணாது, தெனாது, வடாது: "வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும், தெனாஅ துருகெழு குமரியின் றெற்கும், குணாது கரைபொரு தொடுகடற் குணக்கும்" (புறநா. ௬.)

சோணாடு: "துறக்கமுற்றார் மனமென்னத் துறைசெழுநீர்ச் சோணாடுகடந்தால்" (கம்ப. நாடவிட்ட. ௩0.)

தஞ்சாவூர்: திருவிசைப்பாப் பெற்ற தஞ்சாவூரே (இராசஇராசபுரம்); அன்றி சோழநாட்டில், 'மருகல்நாடு' என்னும் உண்ணாட்டி லும் தஞ்சாவூரென்றுஓரூர் உள்ளது. அதுவும் தஞ்சையென்று வழங்கப்படுகின்றது; "தஞ்சை மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்" (தே. திருத்தொண்டத் தொகை, ௯); "மருகல்நாட்டுத் தஞ்சாவூர்" (பெரிய. செருத்துணை. ௧.)

ஆந்தை, பூந்தை: இம்மரூஉமொழிகளின் முடிபை, "இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்", "ஆதனும் பூதனும்" (தொல். புள்ளி. சூ. ௫௨, ௫௩) என்பவற்றால் உணர்க.

பக் - ௧0௯.

"முற்றுமற் றொரோவழி": நன். சூ. ௧௬௪.

"ஆவியரமுன்", "சிலவிகாரமாமுயர்திணை": நன். சூ. ௧௫௯.

பக் - ௧௧0.

மூவகைப் புணர்ச்சியாவன: (௧) விகுதிப்புணர்ச்சி, (௨) பதப்புணர்ச்சி, (௩) உருபுபுணர்ச்சி.

ஆவை - பசுவை; "தெய்வப் பதவியந் தணரை யாவை" (கம்ப. கிட்கிந்தா. கிட்கிந்தை. ௬௨.)

தொடையல்: "தொடையலங்கோதை" (சீவக. ௪௧௬௪.)

மன்றம்: "மன்றத்துப் புன்னை போல" (தே. அரிகை. ௫௩௪. 'கம்பனே' அ.)

பக் - ௧௧௨.

"ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே": நன். சூ. ௩௮0.

ஆவுக்கு: "ஆவுக்காயினு மந்தணர்க் காயினும்" (கம்ப. ஆரணிய. அகத்தியப். ௨௧.)

பக் - ௧௧௫-௬.

"பொருள்கொள்வாருமுளர்": பொருள்கொள்பவர் மயிலைநாதர்.

"சாரியைசந்தி...எப்பதங்களும்": நன். சூ. ௧௩௩.

"பண்பிற் கியல்பே": நன். சூ. ௧௩௬.

சூ. ௨௫௫: விரவுப்பெயர் - இங்கே திணைப்பொதுப்பெயர்; "பலவயி னானு மெண்ணுத் திணைவிரவுப் பெயர்" (தொல். கிளவி. ௫௧.)

பக் - ௧௧௭.

"இனி...நின்று என்பதனை அசைநிலையாக்கி விரிந்தென ஒருபொருள் கொள்ளின்": இங்ஙனம் பொருள்கொள்பவர் மயிலைநாதர்.

பக் - ௧௧௮.

'அவ்விலக்கணங்கூறும்வழிக் காட்டுதும்': கூறுமிடம் நன். சூ. ௨௬௭ - உரை.

சட்டகம் - சரீரம்; "எற்புச்சட்டகம்" (இறை. சூ. ௬-உரை.)

பக் - ௧௧௯.

முக்குடை: சந்திராதித்யம், நித்ய விநோதம், சகலபாசனம் என்பன; இவை அருகனுக்குரியன; "திங்கண் மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்" (சிலப். ௧௧: ௧.)

பக் - ௧௨0.

கொட்டு : இதற்கு மண்வெட்டி யென்றும் பொருளுண்டு; "கொட்டினைக் கழலப் பார்ப்பர்" (திருவிளை. ௬௧: ௩௭.)

தாமரை-ஒரு நீர்ப்பூக்கொடி, தாவு இன்ற மரையென இருபொருளுண்டு. இதனைத் திருவரங்கத். ௧௬ - ஆம் செய்யுளாலறிக.

பக் - ௧௨௧.

பொத்தகம்-புத்தகம்; உகரத்துக்கு ஒகரம் போலியாகவந்தது; "நிறைநூற் பொத்தக நெடுமனையேற்றி" (பெருங். ௧. ௩௪: ௨௬); நன். மயிலை. ௧௫௫, ௨௯௬-ஆம் பக்கத்திற்காண்க.

பக் - ௧௨௨.

ஆடவர்: "ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்" (கம்ப. பால. தாடகை, ௨௪.)

பேடு: "பேடு நீக்கிப் பிறத்த லரிதே" (தனிப்பாடல், ஔவையார்.)

பக் - ௧௨௫.

உலாப்புறம்: இஃது ஒருவகைப் பிரபந்தம்; தலைமகன் புறத்தே உலாவி வருவதைக் கூறுவது; உலாவெனவும் வழங்கும். இவ்விலக்கணம் பாட்டியலிற் காணப்படும்.

மரவடி:௩0௨-ஆம் பக்கத்துக்குறிப் பைப்பார்க்க.

ஆற்றூர்: இப்பெயர்கொண்ட ஊர்கள் பல; ஆறையென்று வழங்கப்படுகின்றன.

பொற்கொல்லர்: "நங்கைக்குப்பொற் கொல்ல ராயிரவரை" (சிலப். உரை பெறுகட்டுரை.)

பக் - ௧௨௭.

பெற்றம்:"பெற்றமேய்த்துண்ணுங் குலத்திற் பிறந்து" (திவ். திருப்பாவை. ௨௯.)

பக் - ௧௨௮.

எழுத்துப்பெருக்கம்: இஃது ஒரு வகைச்சொல்லணி; எழுத்து வருத்தனமென்றும் வழங்கப்படும்; தண்டி. சொல்லணி. சூ. எ - உரையைப் பார்க்க.

சிலம்பன்: இச்சொல்லின் பெண்பால் 'சிலம்பி' என்று தெரிகின்றது; "அம்பொற்சிலம்பி" (தனிப்பாடல், கம்பர்.)

"நீத்தொழிந்த" என்னும் வெண்பாவிற் பின்னிரண்டடியாற் போந்த பொருள் புண்ணியஞ் செய்யென்பதென்று மயிலைநாதரும்,தனிச்சொல்லையுங் கூட்டி அவற்றாற்போந்தபொருள் சிவபுண்ணியஞ் செய்யென்பதென்று சங்கரநமச்சிவாயரும் எழுதியிருத்தல் அறிதற்பாலது; கூத்தனென்பதற்குச் சைனர் ஆன்மாவென்றுபொருள்கூறுவர்; "கூத்தன் புறப்பட்டக்கால்" (நாலடி. ௨௬.)

பக் - ௧௨௯.

"செய்யுட் குரியன வுரிச்சொல்": நன். சூ. ௪௪௨.

சூ. ௨௭0 - உரை: மயிலைநாதர் உரியியற் சொல்லுமுண்டென்பர்.

பக் - ௧௩0.

'பதினெண்மொழிகளுள்': ௨௯௩-ஆம் பக்கத்தில் 'மூவறுமொழி' என்பதன் குறிப்பைப்பார்க்க.

செந்தமிழ்நிலம் வையையாற்றின் வடக்கெனக் கூறுவர் மயிலைநாதர்; தொல். எச்ச. ௨ - ஆம் சூத்திரவுரையில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய இம்மூவரும் இவ்வாறே எழுதியுள்ளார்.

பக் - ௧௩௧.

விசாரித்தமட்டில் வலிமுகமென்பதற்குச் சங்கரநமச்சிவாயர் எழுதி

யுள்ளவாறு பொருளுண்டென்றுபுலப்படவில்லை.

பக் - கநஉ.

மயிலைநாதர் தமிழெழுத்திலம் பதினேழென்பர்.

அச்சன் : அத்தன் என்பதன் சிதைவு.

அருவாநாட்டார்: அருவாளர் வடகரருவாளரென்று ஒருநாட்டாரின் பெயர் காணப்படுதலால் இப்பெயர் அருவாள்நாட்டார் என்று இருக்கவேண்டுமோவென்று ஊகிக்கப்படுகின்றது.

"பொதுவெழுத் தொழிந்த நாலேழுந் திரியும்": நன். சூ. கசசு.

பக் - கநந.

சலம்-தருக்கதோடத்துளொன்று.

"உவ்வுமாம் பிற": நன். சூ. கசக.

காரிகை - அழகினையுடையாள்.

பக் - கநச.

சூ. உஎரு-உரை. மரபும்ஆக்கமும், இடுகுறிப்பெயர் காரணப்பெயர்களைச் சார்ந்தன அல்ல, வேறு என்பவர் மயிலைநாதர்.

பக் - கநரு.

ஊரன்: மருதநிலத்தலைவன்; "எழினல ழூரன் கவர" (திருச்சிற். நருச); "ஒருங்கொப்பக் கொண்டானூரன்" (நாலடி. நஅஎ.)

சேர்ப்பன்: நெய்தல் நிலத்தலைவன்; சேர்ப்பு - கடற்கரை; "இனிச்சென் றனனேயிடுமணற் சேர்ப்பன்" (குறுந். உ0ரு.)

துறைவன்: நெய்தனிலத்தலைவன்; "துறைவன் றம்மூ ரானே" (குறுந். கூஎ.)

"மற்றப்பொருளவென உதாரணங் காட்டுவாருமுளர்" : மயிலைநாதர் இக்கருத்துப்புலப்பட உதாரணங்காட்டுவர்; நன்.சூ. உஎரு-உரையைப் பார்க்க; இளம்பூரணரும், சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் இக்கொள்கையையுடையவர்களென்று தெரிகின்றது; தொல். பெயர். கூ-ஆம் சூத்திர முதலியவற்றின் உரைகளைப்பார்க்க.

பக் - கநஎ.

"எக்குழையது...உதாரணங் காட்டுவது": இக்கருத்துத்தோன்ற உதாரணங்காட்டுபவர் மயிலைநாதர்.

பக் - கநஅ.

"பொதுவு மாவனபெயரே": நன். சூ. உஎரு.

'தத்தம் வகைச்சூத்திரங்க ளுட்காண்க': சூத்திரங்களாவன: உஅந, உஅரு, உஅஎ.

பக் - கநகூ.

"மேலைச்சூத்திரத்து இரண்டென்பதனையும்" : மேலைச்சூத்திரமாவது "முதற்பெயர் நான்கும்" (உஅஉ) என்பது.

பக் - கச0.

சூ.உஅச-உரை. இடர்ப்பட்டு உரை கூறுபவர் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும்.

'யானைவந்தது, யானை வந்தன, யானைவந்தான், யானைவந்தாள்' என உதாரணங் காட்டியவர் மயிலைநாதர்; இளம்பூரணரும், சேனாவரையரும், நச்சினார்கினியரும் இவ்வாறே காட்டினர் (தொல். பெயர். சூ.உஅ-உரை.) இவ்வுதாரணங்கள் பொருந்தாவென்று இராமாநுச கவிராயர் நன்குவிளக்கி எழுதியுள்ளார்.

எல்லீர்: "எல்லீரு முறங்குதிரோ யானழைத்தல் கேளீரோ" (கம்ப. ஆரணிய. சூர்ப்பநகைப். கககூ.)

பக் - கசக.

வினையின்பெயர்களனைத்தும் படர்க்கையெனப் பொருள்கொள்பவர் மயிலைநாதர்;இ.வி.உரையாசிரியர் கொள்கையும் இதுவே (சூ. கஅஅ-உரை.)

பக் - கசந.

துலாபாரந்தூக்கல்: தானவகையுள் ஒன்று; ஒருதலைவன் தன்நிறையளவாகிய பொன்னைத் தக்கானொரு வைதிகனுக்குக்கொடுப்பது; "பெருமகன் மறையோற் பேணி......தன்னிறை, மாடல மறையோன் கொள்கென் றளித்தாங்கு" (சிலப். உஎ: களந - கூ.)

உழக்கு - காற்படி.

பக் - கசச.

இப்பட்டுச்சீனம் என்பது முதலிய வற்றை ஆகுபெயரென்பவர் மயிலைநாதர்.

ஆகுபெயர்க்கு உதாரணமாக, 'இவ்வாடை கோலிகன்' என்பதைச் சேனுவரையரும் நச்சினார்க்கினியரும் காட்டியுள்ளார்; தொல். வேற்றுமை மயங்கு. சூ. ௩௧ - உரை.

சீனம் முதலியவற்றை ஆகுபெயரெனவும் காரியவாகு பெயரைச் சொல்லாகு பெயரெனவும் கூறுபவர் மயிலைநாதர். அகத்தியம், தொல்காப்பிய மென்பவற்றை ஆகுபெயர்த்திரிபெனக்கூறுபவர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்; தொல். சூத்திரவிருத்தியைப் பார்க்க.

பக் - கசரு.

"வேற்றுமைக்கிடனாய்": நன். சூ. உஎரு.

உருபையும், உருபேற்ற பெயரையும் வேற்றுமையென்பது பிரயோக விவேக நூலுடையார்கொள்கை; காரகப். அ-உரையைப்பார்க்க. உருபையேற்றபெயரையும், உருபைமுடிக்க வந்தசொல்லையும் வேற்றுமையென்பது இலக்கணக்கொத்துடையார் கொள்கை; வேற்றுமை. கஅ - ஆம் சூத்திரத்தையும், அதனுரையையும் பார்க்க.

பக் - கசசு.

"எட்டே": நன். சூ. உகக.

பக் - கசஎ.

எழுவாய் விளிவிடைச் சொற்களைக் கொள்ளுமெனக் காட்டினவர் மயிலைநாதர்.

பக் - கருக.

மருவூர்; திருவையாற்றுக்கு வாயுமூலையில்உள்ளது; செந்தமிழ்நாட்டின் கிழக்கெல்லையாகக் கூறப்படும்(தொல் எச்ச.சூ.உ-இளம். சே. ந.உரைகள்.)

"இதனினிற்றிது": தொல். வேற்றுமை. சூ. கசு.

பக் - கருஉ.

'உடைய' என்பதைச் சொல்லுருபென்பவர் இ-கோ. உரையாசிரியர்; ஷை நூல், சூ: உரு-இன் உரையைப் பார்க்க.

பக் - கருங.

கறுப்பின்கண் அழகு: "கறுப்பிலழகனடி சிங்கி" (குற்றாலக்குறவஞ்சி.)

பக் - கருச.

கடைநாள்: "காரிரு ளின்ற கடைநாட் கங்குல்" (சிலப். கο: ங.)

இடைச்சுரம்: "இடைச்சுரத்திற் றன்னையிடையிருளி னீத்த, கொடைத் தொழிலான்" (நள. கலிநீங்கு. ருரு.)

தென்றிசை: "பன்னிரு பகலிற் சென்றுதென்றிசைப்பரவைகண்டார்" (கம்ப. சுந்தர. திருவடிதொழுத. கங.)

பக் - கருரு.

"நாலாறுமீறே": நன். சூ. கορ.

வேந்தே: "காமவேற் றடக்கை வேந்தே நாமிது தெரியினென்றான்" (சீவக. உகο.)

பக் - கருசு.

அன்னாய்: "அன்னாய் வாழிவேண்டன்னை" (ஐங்குறு. க-கο.)

தந்தாய்: "தந்தாய் தனியறத்தின் றாயே" (கம்ப. அயோத்தி. கிளை கண்டு. சுο.)

பெருமான்: "பிறந்தே யெய்த்தொழிந்தேன் பெருமான் திருமார்பா" (திவ். பெரியதிரு. சு. உ: உ.)

இறைவா: "இறைவா தடவரைத் தோட் கென்கொ லாம்புகுந் தெய்தியதே" (திருச்சிற். உο.)

மன்னா: "மன்னா வுனக்கபயம்" (நள. கலிதொடர். ங.)

ஐயாவோ: "ஐயா வோவென் றழுபவண் முன்னர்" (மணி. அ: சங.)

ஐயவோ: "ஆற்றலை னையவோ" (சீவக. கருகச.)

பக் - கருஎ.

"முன்னிலை...படர்க்கை": நன். சூ உஅரு.

ஏடா: "ஏடா வழிய லெழுந்திது

கொள்ளாய்'' (மணி.கச: கஉ); சேட னென்பது ஏடனென்றாகி விளியுரு பேற்று நின்றதெனக் கொள்வர் சிலர்.

ஏடி:''பேசுவது திருவாயான் மறை போலுங் காணேடி'' (திருவா. திருச் சாழல்,க); ''கானமருங் கல்லதர் போ ய்க் காடுறைந்தான் காணேடி'' (திவ். பெரியதிரு. கக. ரு: க.) இச்சொல் லைச் சேடியென்பதன் சிதைவென்பர்.

சூ. ஙOகூC-உரை. பொதுவிதி: நன். சூ. ஙOரு.

நாய்கீர்: ''ஏகீர் நாய்கீரென்செய் து மென்பார்''(யா. கா.செய். எ-மேற்.)

பக் - கருஅ.

சூ. ஙOகூ-உரை. பொதுவிதி: நன். சூ. ஙOரு.

தோன்றால்: ''தோன்றா லெங்கண் களிப்பவின்னமுமென்றோன்றிலையே'' (நைட. பிரிவுறு. கங.)

மடவரால்: ''கடலின் பெருமை கட வார், மடவரால்'' (நன்னெறி, உசு.)

கிளிகாள்: ''யான்வளர்த்த கிளி காள்'' (திவ். திருவாய். சு. அ: ரு.)

மக்காள்: ''மக்காணீ, ரென்மக்கள் போல்கின்றீர்'' (நள. கலிநீங்கு. ருஎ.)

பக் - கசுO.

சூ. ஙகசு - உரை. மேல்: நன். சூ. ஙகரு.

பக் - கசுங.

ஆறுவதுவினைகொள்ளுமெனப்பொ ருள்கூறுபவர் மயிலைநாதர்.

''வினைபெயர் வினக்கொள லதன் டய னிலையே'': நன். சூ. உகூரு.

பக் - கசுச.

அரசன் ஆலயஞ்செய்வித்தானென் பதை ஏவற்கருத்தாவென்பவர் மயிலை நாதர்; நச்சினார்க்கினியரும் இக்கொ ள்கையினர்(தொல்.வேற்றுமை. கஉ.)

பக் - கசுசு.

அகத்தினன், புறத்தினன்: ''அளி வரு மருளினோ டகத்தினன் புறத்தின னமைந்தே'' (திவ்.திருவாய்.க.ங:உ.)

ஆதிரையான்-பரமசிவன்; ''ஆதிரை யானை யடிபணிந் தேத்த'' (மூதுரை, காப்பு.) இச்சொல் ஆர்திரையானெனவும் வழங்கும்.

ஓணத்தான்-திருமால்; ''ஓணத்தா னுலகாளு மென்பார்களே''(திவ்.பெரியாழ்வார். முதற்பத்து, ங.)

பக் - கசுஎ.

'முயற்கோடு, ஆகாயப்பூ': ''ஒப்பி லா மலடி பெற்ற வொருமகன் முயற் கோ டேறித், தப்பிலா காயப் பூவைப் பறித்தமை சாற்றி னாரே'' (சிவஞான சித். பர. உலகாயத. சு.)

'முக்காலங்களில் ஒன்றற்குரியவும் பொதுவும்': ஒன்றற்குரியவை, இந் நூல்,கசஉ-ஆம் சூத்திரமுதலிய மூன் றனுலும், பொது, கசரு-ஆம் சூத்தி ரத்தாலும் அறியலாகும்.

சூ. ஙஉஉ-உரை: சிறப்புச்சூத்திரங் கள் ஙஉங-ஆம் சூத்திரமுதலியவை.

பக் - கசுகூ.

சூ. ஙஉஎ-உரை. பொதுவிதி: நன் சூ. ஙஉங.

''பார்தம், செலவொடு வரவும்'': நன். சூ. கசரு.

பக் - கஎO.

குரம்பை: இது குடம்பை யென வும் வழங்கப்படும். 'பொல்லாப் புழு மலிநோய்ப்புன் குரம்பை'(நல்வழி,எ.)

பக் - கஎக.

'பொதுமையி னிற்குமாறும் மேற் கூறுப': மேலென்றது ஙசக, ஙசஅ - ஆம் சூத்திரங்களை.

''ஓரிடம் பிறவிடந் தழுவலுமுள வே'': நன். சூ. ஙஅO.

பக் - கஎச.

சூ. ஙஙரு - உரை. பாலென்றது இங்கே ஒருமைப்பாலை.

பக் - கஎரு.

''புதியன புகுதலும் வழுவல'': நன். சூ. சசுஉ.

நிலீயர்: ''நிலீய ரத்தைநீ நிலமிசை யானே'' (புறநா. கசுசு.)

பக் - கஎஎ.

கலம்: 'பொங்குகதிர் மின்னு புகழ்க் கலங்கள் பலபரப்பி' (சீவக.உOஉரு.)

இன்னதற்கு இதுபயன்: "இன்னதற்குஇதுபயனுகவென்னும்" (தோல். வேற்றுமைமயங்கு. சூ. ௨௬.)

பக் - ௧௮௦.

'ஒலித்தக்காலென்புழி...பொருந்தும்' என்றது மயிலைநாதர் கொள்கையை மறுத்தபடி.

கடையென்பதைக் காலம்பற்றிய இடப்பொருளுருபென்பவர் மயிலைநாதர்.

பக் - ௧௮௧.

சூ. ௩௪௪ - உரை. இங்கேமறுக்கப்படுபவர் மயிலைநாதரும், இ. வி. உரையாசிரியரும்.

பக் - ௧௮௨.

"வினைமுதல் வினைகொள்ளும்": நன். சூ. ௩௪௪.

பக் - ௧௮௩.

"இச்சூத்திரத்திற்கு ... கூறுவாருமுளர்": கூறுபவர் மயிலைநாதர். தோல்காப்பிய வுரையாசிரியர்கள், பெரும்பாலும் இக்கொள்கையினரே; "வினையெஞ்சு கிளவிக்கு......ஆக்கமொடுவருமே" (தோல். எச்ச.) என்னும் சூத்திரவுரைகளைப் பார்க்க.

பக் - ௧௮௪.

சூ. ௩௪௬ - உரை. பொதுவினை: நன். சூ. ௩௩௦.

பக் - ௧௮௭.

தாவடி: "சுடர்க்குழைமேல் தாவடி வந்திப் படியென தாவி தளர்வித்ததே" (திருப்புகலூரந்தாதி, ௪.)

பக் - ௧௮௮.

ஆனுவறிவு: "ஆனு வறிவினவர்கட் கென்னுங்கொல்" (யா. கா. அவை.)

பக் - ௧௮௯.

சூ. ௩௫௫ - உரை. 'அடுக்கர்காவென்க': அடுக்கென்பவர் மயிலைநாதர்.

பக் - ௧௯௦.

'மருவாரையென்பது அற்றன்று' என்றது மயிலைநாதருரையைநோக்கி. பிரயோக விவேகநூலுடையாரும் இதனை, 'இடைப்பிறவரல்' என்பர் ௧௧-ஆம் கலித்துறை உரை.) இ. வி. உரைகாரரும் இவ்வாறே காட்டியுள்ளார்; சூ. ௩௨௬ - உரை.

கோசர் - ஒருவகைவீரர்; "இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்" (புறநா. ௧௬௯.)

பக் - ௧௯௧.

சூ. ௩௫௮-உரை: நால்வகைச்சொற்களையும் கொள்ளாமற் பெயர்ச்சொல் வினைச்சொற்களை மட்டும் கொள்வர் மயிலைநாதர்.

பக் - ௧௯௨.

"இவ்வாசிரியவசனத்திற்கு...வேறுபொருள் கூறுவாருமுளர்": வேறுபொருள்கூறுவார் சேனுவரையரும், நச்சினுர்க்கினியரும்; தோல். எச்ச. சூ. ௪௫.

பக் - ௧௯௪.

௩௭௦-ஆம் சூத்திரத்திற்கு அவிநயவுரையாசிரியர் இராசபவித்திரப் பல்லவ தரையரென்பார் வேறுபொருள் கூறுவதை மயிலைநாதருரையால் அறியலாகும், தோல்காப்பிய உரையாசிரியர்கள் ஈண்டுள்ளனவற்றுட் சில உதாரணங்களை வேறாகக் காட்டியுள்ளார்கள்.

பக் - ௧௯௫.

சூ. ௩௭௧ - உரை. ஒருவகையாக மறுக்கப்படுவது மயிலைநாதருரை.

பக் - ௧௯௬.

சூ. ௩௭௩-உரை. இங்கே மறுக்கப்படுவது மயிலைநாதருரை.

ஆவுரிஞ்சுதறி: தினவுள்ள பசுக்கள் தேய்த்து அத்தினவைத்தீர்த்துக் கொள்ளுதற்குப் பொதுவிடத்தில் நடப்படும் கற்றூண். இது முப்பத்திரண்டு தருமங்களுள் ஒன்று.

பக் - ௧௯௭.

தீங்கனி-இனிமையாகியகனி; "தீங்கனி நாவ லோங்குமித் தீவிடை" (மணி. ௬: ௧௭.)

கரும்புருவச் சிலை: "கரும்புருவச் சிலைகாமரம்பு" (திருச்சிற். ௩௫௨.)

பக் - ௧௯௮.

'கரியது என்னும் பண்புப்பெயர்

ஒருகூறுநிற்ப ஒருகூறு தொக்கமையிற் பண்புத்தொகையாயிற்று' என்பர், இளம்பூரணர். 'கரியன், கரியள், கரியர், கரியது, கரியன என்னும் பண் புணர்த்து மீறுகளே தொக்குநிற்பன என்று உணர்க' என்றார் நச்சினார்க்கினியர் (தொல். எச்ச. சூ. ௨0 - உரை.)

'உருபு' என்பது உருவெனவும் வழங்கப்படும்.

பக் - ௧௯௯.

புலிவிற்கெண்டை : இது தமிழ் நாட்டு முடிமன்னர்களாகிய சோழ சேர பாண்டிய அரசர்களின் கொடிகளைக் குறிக்கும்தொடர்.

முந்திரிகை-ஒருசிற்றெண்; ஒன்றில், முந்நூற்றிருபதில் ஒருபங்கு. இது முந்திரியெனவும் வழங்கப்படும்; "முந்திரிமேற் காணி மிகுவதேல்" (நாலடி. ௨௪௬.)

பக் - ௨00.

"அவற்றி னுருபிடை யொழிய" என்ற பொதுவிதி: நன். சூ. ௩௬௧.

கழலை - ஒருவகைச்சிரங்கு; "சீவார் கழலை யிரண்டையுஞ் செப்பெனச் செப்பி" (திருவேங்கடத். ௬௫.)

பக் - ௨0௧.

மலைந்துபொருள் கூறுவார் அவிநய வுரையாசிரிய ரென்பதை மயிலைநாதருரையால் அறியலாகும்.

பக் - ௨0௨.

கல்லாடமாமூலர் - கல்லாடரும் மாமூலரும்; இவ்விருவரும் சங்கப்புலவர்கள்.

பக் - ௨0௩.

"சில விகாரமா முயர்திணை": நன். சூ. ௧௫௯.

சூ. ௩௭௪-உரை. 'விரிப்பாருமுளர்': விரிப்பார் மயிலைநாதர்.

உள்ளல்-உள்ளானென்பறவை. இஃது உள்ளெனவும் வழங்கப்படும்; "உள்ளூ மூரலும் புள்ளும் புதாவும்" (சிலப். ௧0: ௧௧௭.)

'அலர்முல்லை' என்பதைக் காட்டியவர் மயிலைநாதர்.

பக் - ௨0௪.

தொடி - ஒருபலம்; "தொடிவளை யொருபலப்பேர் (சூடாமணி. ௧௧); "தொடிப்புழுதி கஃசா வுணக்கின்" (குறள். ௧0௩௭.)

இலத்தி: யானை குதிரை கழுதை இவற்றின் மலம்; "சோருமத்தி யிலைத்தி சொரிந்ததால்" (திருவாலவாய். ௨௬. ௧௮.)

பக் - ௨0௫.

'மகனன்றுகுற்றி' என உதாரணம் காட்டியவர் மயிலைநாதர். இ.வி.உரையாசிரியரும் இவ்வாறு காட்டியுள்ளார் (சூ. ௨௯௬.) இத்திறத்தில், தொல்காப்பிய உரையாசிரியர்கள் வெவ்வேறு உதாரணங்களைக் காட்டியுள்ளார்கள்.

மகனன்றென்பதை, ஐந்தாம் வேற்றுமை நீக்கப்பொருளாக விரிப்பர் இளம்பூரணரும் (தொல். கிளவி. சூ. ௨௫), மயிலைநாதரும்.

'இவ்வுரு, குற்றியன்று; மகன்' எனக்காட்டியுள்ளார் இ. வி. உரையாசிரியர்; சூ. ௨௯௬. உரை.

பக் - ௨0௭.

'இனி...உதாரணங் காட்டின்': உதாரணம் காட்டியவர் மயிலைநாதர். ௩௭௮-ஆம் சூத்திரத்திற்குக் காட்டப்பட்டுள்ள உதாரணங்களுட் சில மயிலைநாதர்கொள்கைக்கு வேறுபடுகின்றன.

பக் - ௨0௮.

௩௭௯ - ஆம் சூத்திரத்தின் உதாரணங்களுட் சில மயிலைநாதர் கொள்கைக்கு வேறுபட்டுள்ளன.

கிளியார் - கிளி; "செந்தார்ப்பசுங் கிளியார்" (சீவக. ௧0௩௬.)

பூசற்றண்ணுமை - பகைவருடன் போர்புரிதற்காக வீரரையழைத்தற்குக் கொட்டும் பறை.

பக் - ௨0௯.

வழுவமைதியாக உதாரணங்காட்டியவர் மயிலைநாதர்.

பக் - உகக.

செய்யுமென்னுமுற்றை உதாரணங் காட்டுபவர் மயிலைநாதர். "முக்நிலைக் காலமும் தோன்றும்" (தொல். வினை.) என்னும்சூத்திரவுரையில்உரையாசிரியர்களெல்லோரும் இவ்வாறே காட்டியுள்ளார்கள்; இ. வி. உரையாசிரியர் கொள்கையுமிதுவே (சூ. ௩0௩ - உரை.)

'திட்டை: "பாவா யெனப்போய்ப் படுவெண்மணற் றிட்டைசேர்ந்தான்" (சீவக. ௫௧௫.)

சூ. ௩அச-உரை. மாறிக்காட்டுவோர் மயிலைநாதர். தொல்காப்பிய வினையியலில், "மிக்கதன் மருங்கின்", "வாராக் காலத்தும்" என்னும் சூத்திரவுரைகளில் இளம்பூரணர், சேனுவரையர்,நச்சினார்க்கினியர் மூவரும் இவ்வாறே காட்டியுள்ளார்கள்; இ.வி. உரையாசிரியர் கொள்கையு மிதுவே (சூ. ௩0௪ - உரை.)

பக் - உகச.

கற்பூரம் - பச்சைக்கற்பூரம்.

பக் - உக௫.

செம்பொன் + பதின்தொடி; செம்பு + ஒன்பதின்தொடி.

நாகன் + தேவன் + போத்து ;நாகு + அன்றே + வன்போத்து.

தாமரை + கண்ணியார்; தா + மரைக்கு + அண்ணியார்.

குன்று + ஏறு + மா; குன்று + ஏறு + ஆமா.

குறுமை + பரம்பு ; குறும்பர் + அம்பு.

ஆறு + கரை; ஆற்றுக்கு + அரை.

செம்மை + பருத்தி; செம்பர் + உத்தி.

பக் - உகசா.

சூ. ௩கூ௩. சிறப்பையும், திணைமுதலியவைகளோடு ஒன்றாகக் கொண்டு ஏனாதி ஏறன் என்று உதாரணமுங் காட்டியுள்ளார் மயிலைநாதர்;தொல். கிளவி. சக-ஆம் சூத்திரமும், அதனுரைகளும் இங்கே அறிதற்பாலன.

'மேலைச்சூத்திரத்தாற் பெற்றும்': மேலைச்சூத்திரம்: நன். ௩கஉ.

பக் - உகஎ.

சேந்தன் என்பது, ஒருபகாரியின் இயற்பெயர். இவன் திவாகரஞ்செய்வித்தவனே, வேறே புலப்படவில்லை.

"பொலிக பொலிக பொலிக": திவ். திருவாய். ரு. உ: க.

பக் - உகஅ.

சூ. ௩கூஎ - உரை. வழுவென்பவர் மயிலைநாதர்.

பக் - உககூ.

'இனி...கூறுவாருமுளர்': கூறுபவர் மயிலைநாதர்.

முயற்கோடு, ஆகாயப்பூ: ௩0எ-ஆம்பக்கத்துள்ள குறிப்பைப்பார்க்க.

பக் - உஉ0.

உம்மைதொக்க தென்பாருமுளர்: மயிலைநாதர்.

'பவளக்கோடு.....உதாரணங்காட்டுவர்': காட்டுபவர் மயிலைநாதர்.

'இனி இல்லமெழுகிற்று...உதாரணங்காட்டுவாருமுளர்': காட்டுபவர் மயிலைநாதர். "செயப்படுபொருளை" (தொல். வினை.) என்னும் சூத்திரவுரையினால் இளம்பூரணரும், சேனுவரையரும், நச்சினார்க்கினியரும் இக்கொள்கையினரேயென்று தெரிகின்றது.

பக் - உஉக.

குளநெல்: "மெல்விரன் மெலியக் கொய்தகுளநெல்லும்"(சீவக.௩.௫௫.)

கார்த்திகைவிளக்கு: "கார்த்திகை விளக்கிட்டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்" (சீவக. உ௫கூ.)

செப்போத்து: "திருத்தாய் செம்போத்தே"(திவ்.பெரிய திரு. க0.க0:க)

பக் - உஉஉ.

செங்காரை: "செங்கா ரைை செல்வன காண்மின்" (பெருங். க. ச0: உ௩.)

பக் - உஉ௩.

கவிசெந்தாழி-பிணங்களை உள்ளே வைத்து அதன்மேலே கவிக்கப்படும்

ஒருவகை மண்பாத்திரம்; "தாழியிற் கவிப்போர்" (மணி. சு: சுஎ.)

'வளியுளரும்......உதாரணங்காட்டுவர்': மயிலைநாதர். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் இவ்வாறு காட்டியுள்ளார்கள்; தொல். கிளவி. கக-இ. வி. உரையாசிரியரும் இக்கொள்கையினரே; சூ. ௩கரு.

பக் - உஉச.

பக்கல்: "வினைகள்வந்துபற்றி யென் பக்கல்நின்றும், விடகிலா" (தே. திருக்கோவலூர். திருநா. எ.)

'இவ்வாறன்றி...காட்டுவாருமுளர்': காட்டுபவர் மயிலைநாதர்.

பக் - உஉரு.

குழைகொண்டு கோழியெறியும்: "உற்றவர் கோழிமே லெறிந்தவொண் குழை" (சீவக. அகூ.)

'செவியெல்லாம்...குறிப்பொன்றுமே உதாரணங் காட்டுவாருமுளர்': காட்டுபவர் மயிலைநாதர்; "முன்னத்தி னுணரும்" (தொல். எச்ச.) என்னும் சூத்திரவுரையினால் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் கொள்கையும் இதுவேயென்று தெரிகிறது. இ. வி. உரையாளர் கொள்கையுமிதுவே; சூ. ௩ருச - உரையைப் பார்க்க.

பக் - உஉசு.

சுகo - ஆஞ்சூத்திரத்திற்கு இங்கே காட்டப்பட்டுள்ள உதாரணங்கள் சிலவற்றில் மயிலைநாதர் கொள்கை வேறுபடுகின்றது.

பக் - உஉஅ.

'இதற்கு இவ்வாறன்றி......உதாரணங்காட்டுவர்': மயிலைநாதர்.

பக் - உஉகூ.

'ஆலத்துமேல' என்பதை மயிலைநாதர் கொண்டுகூட்டு என்பர்.

பக் - உ௩o.

சூ. சுகச - உரை. மயக்கசிரனிறை யென்பவர் மயிலைநாதரும், யாப்பருங்கல உரையாசிரியரும். இதனை மயிலைநாதருரையிற் காண்க.

பக் - உ௩க.

நாற்கதி: தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரககதி.

மூழ்ந்தபிணி - மூண்டநோய்.

பக் - உ௩௩.

"இடையுரியடுத்து நான்குமாம்": நன். சூ. உஎo.

பக் - உ௩ச.

'வேற்றுமை யுருபென்பதற்கு ... பொருள் கூறுவாருமுளர்': பொருள் கூறுபவர் மயிலைநாதர்.

பக் - உ௩சு.

ஒல்லென: "ஒல்லென வொலிப்ப வோடி" (சீவக. சு௩அ.)

பக் - உ௩எ.

பூசையும் புலால்தின்னாது என்பதனை இழிவுசிறப்பு என்பவர் இ. வி. உரையாசிரியர்; சூ. உருசு - உரை.

பக் - உ௩கூ.

தொகுக்கும் வழிதொகுத்தல்-தொகுத்தல்விகாரம்; தொல். எச்ச.சூ. எ.

தீபக அணி: செய்யுளில் ஒருசொல் ஓரிடத்தில் நின்று பலவிடத்து நின்ற சொற்களோடுஞ் சென்றியைவது; தண்டி. பொருளணி. சூ. கச-பார்க்க.

பக் - உசo.

வினைச்செவ்வெண் தொகைபெற்றதென்பவர் மயிலைநாதர்.

கூரியதோர் வாண்மன் என்பதில், 'மன்' என்றதற்கு மயிலைநாதர் கூறியுள்ள பொருள் வேறு.

பக் - உசக.

'இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி... கூறுவாருமுளர்' : மயிலைநாதர்.

பக் - உச௩.

சின்: இஃது, 'இசின்' என்று இருக்கவேண்டுமென்று ஊகித்தறியப் படுகின்றது.

பக் - உசரு.

'மேற்பண்பென்றார்': மேல் என்றது இவ்வியலின் முதற்சூத்திரத்தை.

'மேல்உயிராகிய பொருளென்றார்': மேல் : நன். சூ. சச௩.

பக் - உசசு.

தும்பி: வண்டுகளில் முதன்மையானதொருசாதி; சீவக.அகூரு-உரை.

பக் - உசஎ.

முன்னர் என்றது நன். சசரு-ஆம் சூத்திரமுதலிய ஐந்தினை.

பக் - உசஅ.

வண்ணம் - வர்ணம்; நிறம்.

"பல்வகைப்பண்பு":நன்.சூ.சசஉ.

பக் - உசகூ.

கரிப்பு - கரித்தல்; மிளகின்சுவை.

பக் - உருக.

பரிகரித்தல் - நீக்குதல்.

தொகுதி - கூட்டம்.

குறிப்பு.—பக். கூகூ. விளைநாட்டினன், மண்ணைவைத்தா னென்பவை, அகர உயிரீற்றுப்பெயரின் பின்னும் ணகரமெய்யீற்றுப்பெயரின் பின்னும் வந்த உருபின்பின் மெல்லெழுத்தும் இடையெழுத்தும் இயல்பானமைக்கு உதாரணங்களென்று கொள்க.

## பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 21 | திகாந்தத் | திகந்தத் |
| 16 | 22 | நல்லோர்க் | அல்லோர்க் |
| 45 | 20 | கூறுவாறுமுளர் | கூறுவாருமுளர் |
| 80 | 9 | யுணர்த்தும்பெயர் | யுணர்த்தும்புளிப்பெயர் |
| 81 | 10 | குறுகுமென்றும் | குறுகுமென்றார். |
| 101 | 23 | தமிழ்நாகன், | தமிழநாகன், |
| 104 | 25 | சொல்லென்பது, | கொல்லென்பது, |
| 106 | 35 | வேற்றுப்பொருட் | வேற்றுமைப்பொருட் |
| 110 | 5 | ஒன்றேணும் | ஒன்றேனும் |
| 121 | 26 | கூறுவாறுமுளர். | கூறுவாருமுளர். |
| 122 | 3 | ,, | ,, |
| 131 | 2 | ,, | ,, |
| 154 | 12 | பெயராயின; | பெயராயின் |
| 176 | 14 | விளங்கோளென்பன | வியங்கோளென்பன |
| 183 | 28 | கூறுவாறுமுளர். | கூறுவாருமுளர். |
| 196 | 7 | கின ஆறுருபும் | என ஆறுருபும் |
| ,, | 25 | னக | கன |
| 200 | 4 | இக்கறுதிட் | இறுதிக்கட் |
| 206 | 37 | சுப்பெண்டிரென் | பசுப்பெண்டிரென் |
| 207 | 6 | தீய்த்தெய்வ, | தீத்தெய்வ, |
| 221 | 26 | வழக்காறல்லது | வழக்காறல்ல |
| 230 | 18 | யொக்குமொக்கும், | யொக்குமேயொக்கும், |
| 234 | 27 | வாறுமுளர். | வாருமுளர். |
| 235 | 35 | அவனே [சொல் | அவனே [ச்சொல் |
| 239 | 30 | பெயரொடுவரும் இடைச் | பெயரொடுவரும் என் இடை |
| 248 | 16 | நொய்மை | நொய்ம்மை |
| 292 | 9 | நல்குமோல் | நல்குமேல் |